அனுபவ

# ஹஸ்தரேகை சாஸ்திரம்

சக்தி தாஸன் எழுதியது.




B. R. அரங்கசாமி நாயகர்

வெளியீடு

நூலிரண்டிலும் ரேகை சாஸ்திரம் கவிகளால் அமைக்கப் பட்டிருக்கிறது. ரேகைகளின் பெயர்கள் தற்காலம் அனுபவத்தில் வழங்கிவருவதாயில்லை. மகேந்திரரேகை, சாத்மீக ரேகை, விஷக்கம்பரேகை, குடோரி கண்டினி, சக்கர குலிசம், குலிசை சங்கபாலி என ரேகைகளின் பெயர்கள் பரிபாஷையா யிருக்கின்றன. பிரத்தியேக ஞானமும், அனுபவமு மின்றி கவிகளுக்கு உரை சொல்லுதல் முடியாது. எனவே, தமிழில் சாஸ்திரமிருந்தும் பிரகாசியாதிருப்பது காலத்தின் கோலமே! சில விடங்களில் ரேகைசாஸ்திரம் புது மாதிரியாக உபயோகிக்கப்படுகிறது. சுகர் நாடி, நந்தி நாடி ரேகை சாஸ்திரத்தைச் சேர்ந்தவை யென்று, சில ரேகைகளையும், புள்ளிகளையும் கொண்டு எழுதப்பட்டுத் தயாராயிருக்கும் பழைய ஓலையையெடுத்து பிறந்த தேதி, நக்ஷத்திரம், வாழ் நாட்களில் நடந்த முக்கிய சம்பவங்களையும் படித்துக் காட்டுகிறார்கள். இந்தப் பிரவிர்த்தி தமிழ் நாட்டில் அநேக விடங்களில் நடைபெறுகிறது.

இப்பொழுது அயல்நாடுகளில் வெளியான நூல்களை ஆராய்ச்சி செய்தவரை அனுபவத்துக்கு மிகப்பொருத்தமாயிருக்கிறது. நேயர்கள் இதிலுள்ள விவரங்களைத் தெரிந்துகொண்டு தத்தம் கைரேகைகளிலிருந்து த்ரிகால ரகஸ்யங்களையும் எளிதில் அறிந்துகொள்ளலாம். சோதிட சாஸ்திரத்தைவிட சுலபமாய் எதிர்கால ரகஸ்யங்களையுந் தெரிந்துகொள்ள ரேகை சாஸ்திரம் மேலானதெனக் கருதப்படுகிறது.

---

## 2-வது அத்தியாயம்



### கைரேகைப் பெயர்களும் குறிப்புகளும்

மனித சரீர முழுதும் ரேகைகள் இருக்கின்றன என்றாலும், இங்கே கை ரேகையைப் பற்றியே சொல்லப்படுகிறது. புருஷர்களுக்கு வலது கரமும், ஸ்திரீகளுக்கு இடது கரமும்

கவனிக்கத் தக்கவையாகும். மனிதப்பிறப்போடு ரேகைகள் அமைந்திருக்கிறதாகவும், வெகு காலத்துக்கு முன்னரே வேதசாஸ்திரங்களை நன்குணர்ந்து, மகான்களாய்த் தோன்றிய த்ரிகால ஞானிகளால் கண்டு பிடிக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. ஒருமனிதர் தம் ஜீவிய காலத்தில் அனுபவிக்கவேண்டிய கஷ்டத்தையும், சுகத்தையும் அதாவது பாவத்தையும், புண்ணியத்தையும், (அறிவு) புத்தி யென்னும் அழியாதபெருஞ் செல்வத்தையும் கொடுத்திருப்பதை பெண்களுக்கு வலது கரத்திலும், புருஷர்களுக்கு இடது கரத்திலும் ரேகை யென்னும் பரிபாஷையில் குறிக்கப்பட் டிருக்கின்றன. புத்தி தீக்ஷணியத்திற்குத் தக்கபடி ஸ்திரீ புருஷர்களின் மறுகையில் ரேகைகள் மாறிக்கொண்டே யிருக்கும். அதாவது, அறிவின் விர்த்திக்குத் தக்கவாறு நற்குணமோ தீக்குணமோ—மூளையில் உதிப்பதற் கேற்க—கைகளில் ரேகைவடிவில் காட்டும். விதியை மதியால் வெல்லலாம் என்பது இதனுல் விளங்குகின்றது. என்றுலும், பிராப்த கர்மம் சாத்தியம், அசாத்தியம் என இருவகையாய்ப் பிரிக்கப்பட் டிருக்கின்றன. கர்ம நிவர்த்தி செய்யவந்த அனேக ஜீவர்கள் குளிக்கப் போய் சேற்றைவாரிப் பூசியதுபோல், ஆசை எனும் வலையிற்பட்டு பாபத்தை விர்த்திசெய்கின்றனர். கடவுளால் கொடுக்கப்பட்ட புத்திஎன்னும் பெருஞ் செல்வத்தைத் துர்ப்பிரயோகம்செய்து துன்மதியாக்கிக் கொள்கின்றனர். சரீரத்தில் அசுரநாடிகளும், தேவநாடிகளும் இருக்கின்றன. இவைகள் மூளையில் ஒன்று சேர்கின்றன. அசுரநாடி மிகச் சொற்பமே யாயினும், அதன் விர்த்தியே மாயப்பிரபஞ்சமாகி, ஆசைக்குட்பட்டு தீவினைகள் அதிகரிக்கின்றன.

"விதியையும் விதித்து என்னை விதித்திட்ட
மதியையும் விதித்து அம்மதி மாயையில்
பதிய வைத்த நின்னருளை எப்படி கண்டுகளிப்பதே"

என தவராஜ சிம்மமாகிய தாயுமானவர் பாடியுள்ளார்.

மனிதர் கை மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட் டிருக்கின்றன. தெய்வீகம், இயற்கை, தாந்திரீகம் அல்லது சக்தி, ஸ்தூலம், சம்பத் என மூன்றுக வகுக்கப்பட் டிருக்கின்றன.

விரல்களுக்கும் இந்தப் பகுதியில் தொடர்புண்டு. தத்துவ சாஸ்திரங்களில் ஆத்மா, மனம், சரீரம் என்ற இம்மூன்றும் ஒன்றுக்கொன்று எப்படித் தொடர்பு ஏற்பட் டிருக்கிற தோ, அப்படியே சம்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. ஐந்து விரல் களும் 5-கிரகங்களைக் குறிக்கின்றன. உள்ளங்கைக்கு மேலே, விரல்களுக்கு அடியிலே உள்ள மேடுகள் கிரகங் களின் பலாபலத்தைத் தெரிவிக்கின்றன.

ஆள்காட்டும்—முதல் விரல்—குரு; நடுவிரல்—இரண் டாவது விரல்—சனி; பவித்திர விரல்—மூன்ருவது விரல்—சூரியன்; சுண்டு விரல்—நாலாவது விரல்—புதன்; புதனுக் கடுத்த கீழ்ப்பாகம்—செவ்வாய்; கட்டை விரலுக்குக் கீழே யுள்ள மேடு—சுக்கிரன்; உள்ளங்கையில் செவ்வாய்க்கடுத்த கீழ் மேடு—சந்திரன்.

நாலு விரல்களுக் கடியில் நீண்ட ரேகைக்கு, இருதய ரேகை யென்று பெயர். இந்த ரேகை தெய்வீகமானது, செவ்வாய் மேட்டிலிருந்து உற்பத்தியாகி குறுக்கே போயிருக்கிற ரேகைக்கு புத்திரேகை யென்று பெயர். கட்டை விரலுக் கடியில் சுக்கிர மேட்டை வளைத்துப் போயிருக்கும் ரேகைக்கு ஆயுள்ரேகை என்று பெயர். சந்திர மண்டலத்திற்கும், ஆயுள்ரேகைக்கும் மத்தியிலுள்ள ரேகைக்கு விதிரேகை யென்று பெயர்.

ஒவ்வொரு விரலும் மூன்று பாகங்களாய்ப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. இப்படி பிரிக்கப்பட்ட பாகத்துக்கு அங்கு லாஸ்தி யென்று பெயர். ஒவ்வொரு விரலின் நகமுள்ள முதல் அங்குலாஸ்தி ஆத்ம சக்தியைக் குறிக்கிறது. இரண்டாவது அங்குலாஸ்தி ஸ்தூலத்தைக் குறிக்கிறது. மூன்ருவது அங்கு லாஸ்தி சம்பத்தைக் குறிக்கிறது. ஒவ்வொரு விரலின் முதல் அங்குலாஸ்திக்குப் பிரத்தியேகமான யோக்கியதை யிருக் கிறது. அதாவது:—

1. கட்டைவிரல்—ஆத்ம சக்தி. 4. மோதிர விரல்—ப்ரகாசம்.
2. ஆள்காட்டி விரல்—சக்தி. 5. சுண்டு விரல்—சாஸ்திரம்.
3. நடு விரல்—விதிப்பயன்.

## கைகளில் பலவித அமைப்பு




1. சதுரக் கை.
2. உருட்சிக் கை.
3. ஒடுக்கமான கை.
4. நீண்ட (சங்கு) கை.
5. கலப்புக் கை.

# 3-வது அத்தியாயம்

## கைகளின் அமைப்பு

மனிதர்களின் கைகள் மூன்று விதமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை விரல்களின் ஒழுங்கைப் பின்பற்றியே அமைகின்றன. கைகளின் அமைப்புக்குத் தக்கபடி பெயர்கள் சொல்லப்படுகின்றன. 1. சதுரக் கை, 2. உருட்சிக் கை, 3. ஒடுங்கின கை. (சங்குக் கை) என மூன்ருகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இந்தவித்தியாசத்தைக்கையின் பின் பக்கத்தைக்கொண்டு தீர்மானிக்கவேண்டும். கை சதுரமாயிருந்தால் விரல் அகலமாயும், விரல் நுனி சற்றே கூர்மையாகவும் இருக்கும். உருட்சியான கையில் உள்ளங்கை விசாலமாகவும் விரல்முனை உருட்சியாயு மிருக்கும். ஒடுங்கிய கைவிரல்கள் ஒன்ருேடொன்று ஒட்டினதுபோல்அமைந்து சங்குபோலத் தோற்றும். சம்மட்டி, மண்வெட்டி, கத்தி, சுத்தி இவைகளை இடைவிடாது உபயோகிக்கும் தொழிலாளர்களின் கைகள் அகண்டே விசாலித்துத் தோன்றும். இவர்களுடைய எண்ணம் புத்தி, காரியம் அல்லது தொழில் ஒரே வழியில் ஒருமித்து விட்டபடியால், விர்த்தியை விசேஷித்துச் சொல்ல முடியாது.

ஐந்து விரல்களும் அநேகமாய் ஒன்றுக்கொன்று சம்பந்த மின்றியே கையில் அமைகிறது. இதற்குப் பல வேறு காரணங்கள் யூகிக்கப் படுகின்றன. என்ருலும், அமெரிக்காவில் மிகுதியாம். இதற்குக் காரண மென்னவென்று சிந்திக்கும்போது, பல தேசத்து, பலவகைப்பட்ட ஆண் பெண் கலப்புற்ற சந்ததியே யாகும். ஜாதிமதபேதமின்றி உலகின் பலபாகங்களில் குடிபுகுந்து கலப்புவிவாகம் செய்துகொள்வதால் கையும் அதன் விரல்களும் பேதப்படும். ஒரு விரல் ஒடுங்கி நீண்டும், மற்றொரு விரல் அகலமாயும், இன்னொரு விரல் கூர்மையாகவும் இருக்கும். 5-வது படத்தைப் பார்க்கவும். மேலே குறிப்பிட்ட மூன்று பிரிவுகளுக்கும் அப்பாற்பட்ட தாகிறபடியால் இன்னவகையினதென்று திட்டமாய்ச் சொல்லமுடியாது. சதுரக்கையை யுடையோர் சம்பத்துடையவராவர். உருட்சியான கையை யுடையோர் நினைத்த காரியத்தை முடிப்பவராவர். ஒடுங்கினகையை யுடையோர் தெய்வீகம் அல்லது ஆத்ம சக்தியை யுடையவராவர். மனோ வல்

லமை கட்டை விரலிலிருந்து விளங்கும். தீர்க்காலோசனை யுள்ள புத்தியைப் புத்திரேகையிலிருந்து அறியலாம். கடின மான கை அசட்டுத் தனத்தைக் காட்டிக்கொடுக்கும். இந்த குணங்கள் அனுபவத்தில் கொஞ்சமும் மாருது. சான்சிக் என்ற ஒரு பெரிய மேதாவி கலப்பு விவாகத்தால் ஜனித்த வர்க்கு பலவகைப்பட்ட எண்ணங்களும் கலந்து தோன்று மென்று சொல்லுகின்றனர். அதாவது, உதாரணமாக வங் காளத்திலிருக்கும்ஒருபுருஷன் கூர்ஜரத்திலுள்ளபெண்ணை விவாகம்செய்துகொண்டால், அவர்களுக்குப் பிறக்கும் பிள் ளைகளின் கைவிரல்கள் விதவிதமான கலப்புடையதாகும்.

நெப்போலியன் யுத்தகாலத்தில் யுத்த வீரர்களில் ஒரு வர் புறங்கையையும், விரல்களின் அமைப்பையுங்கொண்டே பலன் சொல்லி வந்ததாகவும், அதைச் 'சிரோனுமி என்று வழங்கியதாகவும், சிரோனுமி' சிரோமன்சி என்னும்ரேகை சாஸ்திரத்துக்கு மிகப் பொருத்தமானதென்று ஜெர்மெய்ன் என்னும்மேதாவி எழுதியிருக்கின்றனர். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது தமிழுலகில் எப்படி சாதாரண மாய்வழங்கி வருகிறதோ, அப்படியே கையின் அமைப்பிலி ருந்து த்ரிகாலவர்த்தமானங்களையும் எளிதில்சொல்லி வந்த னராம். கையும் விரல்களும் அமைந்திருப்பதைக் கொண்டு பரம்பரையாய் வாழையடி வாழையாய் வளர்ந்ததென்று சொல்லவேண்டும். சாஸ்திரம் காலதேச வர்த்தமானத்துக் குத்தக்கவாறும், அனுபவத்துக்கு ஏற்றவாறும்விரிவடைந்து கொண்டேபோகிறது. மாறுபட்ட தாய் தந்தையர்களின் குணதிசயங்களைமாத்திரம் குறிப்பதோடு சாஸ்திரம் நின்று விடவில்லை. இன்னும்பல ரகஸ்யங்களையும் தெரிவிக்கிறது. மேல்நாடுகளில் ரேகைசாஸ்திரம்என்ற பெயரையே அந்தக் காலத்தில் உபயோகிக்கவில்லை. 1843-ல் பிரான்சு தேசத்தி லுள்ள ஒருதளகர்த்தனல் சிறுநூல் ஒன்றுவெளியாயிற்று. அந்தத்தளகர்த்தனுடன் கூடவேயிருந்து ஆராய்ச்சிசெய்த சிஷ்யர்கள் அதிக ஆச்சரிய விஷயங்களைச் சேர்த்து பெரிய நூலாக வெளியிட்டனர். ஒரு மனிதரின் கையைப் பார்த்த மாத்திரத்தில் குணதிசயங்களை எடுத்துச்சொல்லி விடலா மென்று, 1865-ம்வருஷம் 'கையின்குறிகள்' என்றஇங்கிலீஷ் நூலில் வெளியாயிற்று. கை வடிவத்திலிருந்து த்ரிகாலரகஸ்

யங்களைச்சொல்வது ஆச்சரியமாயின், ரேகையிலிருந்துவர்த்தமானங்களைத் தெரிவிப்பது இன்னும் விசேஷமன்றோ! பிரஞ்சுபாஷையிலுள்ள மூல நூலைக்கொண்டு இங்கிலீஷில் விருத்தியுரையோடு பெரிய நூல் வெளியாயிற்று. அதில் அகண்ட கையும், நீண்ட விரல்களும் உள்ளவர்கள் அபார ஞானமுள்ள மேதாவிகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் இளமையில் முன் கோபியாயும், மிக்க மரியாதையுள்ளவர்களாகவும் இருப்பார்களாம். மேலும் அற்பகுற்றத்தையும் சகிக்கமுடியாதவர்களாம். இவர்களின் கையெழுத்து சன்னமாயிருக்குமாம். சிறு கையை யுடையோர்க்கு மேற் சொல்லிய குணங்களுக்கு மாறானவைகளே. என்றாலும், பெருநோக்கும், பெருந்தன்மையையும், சீக்கிரம் திருப்தியடைபவர்களாயும் இருப்பார்கள். சிந்தனை அதிகம். குற்றமாயினும் குணமாயினும் யோசித்தே ஒரு முடிவுக்கு வருவார்கள். சிறிய கை பெரிய கை என்பதெல்லாம் சரீர ஸ்திதியைப் பொறுத்தது. மேற் சொன்னவை யெல்லாம் இதற்கு அதீதப் பட்டவையாகும். கனத்து வளர்ந்த மனிதனுக்குச் சிறு கையும் ஒத்த நாடியாயும், சிறுத்துள்ள மனிதனுக்குப் பெரிய கையுமாயிருந்தால், மேற்சொன்ன குணங்கள் பொருந்தும்.

புருஷர்களின் கையையும் விரலையும் விட, ஸ்திரீகளிடத்தில் விசேஷ வித்தியாசத்தைக் காணலாம். முக்கியமாய் உள்ளங்கை விரல்கள் இவ்விரண்டும் அளவில் மாறுதலிருக்கும். மெல்லிய நீண்ட விரல்களுக்கு விசேஷ பலனைச் சொல்லவேண்டும். ஸ்திரீகளுக்கு கை மிருதுவா யிருக்கும். புருஷர்களின் கை மிருதுவா யிருந்தால் மனோகற்பனை மிகுந்தும், அடுக்குப்பதங்க ளமைந்த கவிபாடுந் திறமையுமுண்டு. மனோபலத்தை விட, புத்தியின் பலமே மிகுந்திருக்கும். ஆகையால், இது ஸ்திரீகளுக் குரியதாம்.

ஒரு மனிதரின் கை மிக்க துவண்ட மிருதுவும் சதையும் பற்றி யிருந்தால், மேற்கூறிய குணங்களெல்லாம் அளவு மீறி யிருக்கும். ஆகையால், கேட்டில் புகுந்து விடும் சோம்பல், அலட்சியம், சுய காரியத்திலேயே கண். இரக்கமற்ற தன்மையும் இருக்கும். காமாதுரராயு மிருப்பர்.

மிருதியாய் சதை பிடித்த கையை யுடையோர் கொள்ளை யடிக்கும் திருடரா யிருப்பர். அவர்களின் நாவு கர்ன கடூரமாய்ப் பேசும். எப்பொழுதும் கெட்ட வழியி லேயே சிந்தனை வேலை செய்யும்.

கடினமான கையை யுடையோர் மனோராஜ்யம் செய்ய மாட்டார். மிகைபடப் பேசார். நல்லொழுக்க முடையவரா யிருப்பர். எப்பொழுதும் உற்சாகமாயும், கடின வேலையாயி னும் செய்யச் சித்தமா யிருப்பர். மனதில் எண்ணி யிருப் பதை எவருக்கும் அறிவிக்க மாட்டார். நம்பிக்கையும் தைரியமும் உள்ளவ ராவர். எத்தகைய கஷ்டத்தையும் திரணமாய் நினைப்பார்.

மனிதருக்கு வயது முதிர முதிர கை கடினமாகவும், பசை குறைந்ததாகவும் காணப்படும். விருத்தாப்பியத்தில் மனதில் நினைத்தபடி அனுகூலப்படாது. அன்பும் ஆதரவும் குறையும். மனோ சக்தி விரயமாகும்.

மிக்க கெட்டியான கரத்தை யுடையவருக்குப் புத்தி குறைவா யிருக்கும். மிருகத்தன்மை யிருக்கும். மற்றவர்கள் கஷ்டத்தைக் கண்டு உதாசீனமா யிருப்பர்.

---

## 4-வது அத்தியாயம்

---

### உள்ளங் கையைப் பற்றிய குறிப்புகள்

உள்ளங்கையிலுள்ள சர்மம் மெல்லியதா யிருந்தால், அற்ப புத்தியையும், புத்திக்குறைவையும் குறிக்கும், சரீர சக்தி குறைந்திருக்கும்.

மிருதுவான கையில் அழுத்தமான சர்மமிருந்தால், புத்திக்கூர்மை, சுபாவத் தன்மையில் அதிக நம்பிக்கை, தந்நலம் முதலியவைக ளிருக்கும்.

கடினமான கரத்தில் மிக்க அழுத்தமான சர்மமிருந் தால், சரீரத்தால் உழைக்கக்கூடிய தொழிலாளியாகும். பகுத்தறிவு குறைவு; புத்தி மட்டு; இத்தகையோர் திருந்திக் கொள்ள முடியாது. கட்டைவிரலில் ஊனமிருந்தால், பிடி வாத சண்டைக்காரனா யிருப்பான்.

உள்ளங்கையில் குறிவிழுந்திருந்தால், பணம் சம்பாதிக்கும் முயற்சியிலெல்லாம் தடையுண்டாம். நல்ல சந்தர்ப்பம் வாய்த்தாலும் நழுவிப்போம்.

ஆயுள் ரேகைக்கருகில் உள்ளங்கை குறியாய் காணப்பட்டால், குடும்பத்தில் தொந்தரவு உண்டாகுமென தற்கால ரேகைசாஸ்திரிகள் அபிப்பிராயப் படுகின்றனர்.

விதிரேகையை யொட்டிக் குறிகாணப்படில், பணநஷ்டமும், தொழிலில் சங்கடமும் உண்டாகும் என்பதற்கு அறிகுறியாகும்.

புத்திரேகையை யொட்டிக் குறி காணப்படுமாயின், புத்திகலக்கமும், சித்தப் பிரமை யுண்டாவதைக் குறிக்கும்.

'உள்ளங்கைப் புண்ணுக்குக் கண்ணுடி வேண்டுமோ' வென்று சொல்வதுண்டு. அதைப்போல நமக்கு முன்னெச்சரிக்கையாக அப்போதைக் கப்போது கையில் குறிகள் காணப்படுகின்றன. அதைக் கவனித்தால் சமயோசிதமாய் நடந்துகொள்ளலாம்.

## விரல்களைப் பற்றிப் பொதுவான குறிப்புகள்

இனி விரல்களைப் பற்றிக் கவனிப்போம். முதலாவது நான்கு விரல்களை எடுத்துக் கொள்வோம். இப்பொழுது கட்டைவிரலை நீக்கிப் பேசுவோம். ஏனென்ருல், கட்டை விரல் ஒருவர் உலக வாழ்க்கைக்கு பெரிய அறிகுறி. அதைப்பற்றிய சரித்திரம் பிரத்தி யேகமாயுளது.

'நீண்டவிரல்கள்,' ஆழ்ந்த அன்பையும், சிறு காரியத்தையும் கூர்மையாகக் கவனித்தல், அல்ப சொல்ப கஷ்டங்களை நினைத்து சங்கடப்படுதல், ஆசைவழிப்பட்டு சிந்தை குலைதல், சொல்தாழாத தன்மை, எதைப்பேசினுலும் மாறுதலாய் நினைக்குந் தன்மை, வஞ்சகம், பொருமை இவைகளைக் குறிக்கும். 'குறுகிய விரல்கள்' விவரம் விசாரியாது ஒப்புக் கொள்ளுதல், பணமானுலும், கணக்கானுலும் கொடுத்தபடியே ஏற்றுக்கொள்ளுதல், யோசனை யில்லாது அவசரப்பட்டுப் பேசுதல் இத்தியாதி குணங்களைக்குறிக்கும்.

விரல்கள் கடினமாயும், குறுகியு மிருந்தால், கையால் தொழில் செய்பவரென்றும், தன்னலம் கொடூர எண்ணம்

உள்ளவர் என்பதை அறிவிக்கும் விரல்கள் அடியில் முதல் அங்குலாஸ்தி சதைப்பற்றி கனத்து மிருந்தால், பொறுமை, பெருந் தீனி, அளவுக்கு மிஞ்சின ஆசை, குடி இவைகளைக் குறிக்கும்.

விரல்கள் அடிசிறுத்து மேல்நோக்கி முதல் அங்குலாஸ்தி சற்றே தடித்திருந்தால், தன்னலங் கருதாதவர்; சுத்தமான ஆடை அணிபவர்; லகுவான ஆகாரத்தை விரும்புபவர் என்பதைக் குறிக்கும்.

விரல்கள் உட்பக்கமாக சற்றே வளைந்திருந்தால், அளவுக்கு மிஞ்சியபுத்தி, கோழைத்தனம், பிடிவாதம், சில சமயங்களில் அதிக ஆசை இவைகளைக் குறிக்கும்.

லகுவில் விரல்கள் பின்னோக்கி வளைந்திருந்தால், நல்லது, நல்ல சகவாசம், வீண்வார்த்தை, சற்று மிஞ்சிய தன்மையையும், வீண்செலவு செய்வதையும் குறிக்கும்.

விரல்கள் முறுக்கேறி விகாரமா யிருந்தால், ஹிம்சையே சுபாவமென்பதையும், கொலைக்கான எண்ண முண்டாகும் என்பதைக் குறிக்கும்.

மிருதுவாயும், நாலாபக்கமும் விரல்கள் வளையக்கூடியதா யிருந்தால், யோசனை யில்லாத தீர்மானம், உபயோகமற்ற விஷயத்தில் அன்பு செலுத்துவது, பயனற்ற கூச்ச விடுதல் இவைகளைக் குறிக்கும்.

விரல்கள் ஒன்றோடொன்று நெருங்கி யிருந்தால், ஆசை அதிக மென்பதைக் குறிக்கும்.

விரல்களுக்கு மத்தியில் இடைவெளி யிருந்தால், மட்டில்லா ஆச்சரியப்படுவர் என்பதைக் குறிக்கும்.

### கை விரல்கள்

ஆள்காட்டி விரல்:—குட்டையா யிருந்தால், ஊக்கமுள்ளவர் என்பதைக் குறிக்கும். திடீரென யோசனை யுண்டாகி தீர்மானம் செய்து விடுவார்.

அளவுக்கு மிஞ்சி விரல் நீண்டிருந்தால், ஆளுந்திறமை, பரிபாலிக்கும் குணமிருக்கும். சர்வாதிகாரி, மந்திரி, பிரபு, மதாசாரியர் முதலானவர்களுக்கு ஆள்காட்டி விரல் அதிக

மாய் நீண்டிருக்கும் பின்னப்பட்ட கையில்விரல் நீண்டிருக்கு மாயின் வாயரட்டல் அகங்காரம் அதிகரிக்கும்.

ஆள்காட்டி விரல் நீண்டு கூர்மையா யிருந்தால், மதப் பற்றையும் மூடபக்தியையும் குறிக்கும்.

முதல் விரல் மற்ற விரல்களோடு ஒழுங்காய் அமைந்து விரல் நுனி சதுரமாயிருந்தால், நிதான புத்தியையும், உண் மையை அறிய ஆவல் என்பதையும் குறிக்கும்.

விரல் முனை உருட்சியா யிருந்தால், காதாற் கேட்டதை யெல்லாம் அப்படியே நம்பும் சுபாவத்தையும், புதிய சமயக் கோட்பாடுகளில் குருட்டு நம்பிக்கையையும் குறிக்கும்.

முதல் அங்குலாஸ்தி மற்றவைகளைவிட நீளமா யிருந் தால், திருவருளைக் குறிக்கும். இரண்டாவது அங்குலாஸ்தி நீளமா யிருந்தால், மேலான எண்ணத்தைக் குறிக்கும். மூன் றாவது அங்குலாஸ்தி—அதாவது நகமுள்ள பாகம் நீளமா யிருந்தால், அகங்காரத்தோடுங் கூடிய கர்வத்தைக் குறிக்கும்.

ஆள்காட்டி விரல் இரண்டாவது விரலுக்குச் சமமாக வாவது சற்று நீண்டாவது இருந்தால், மேலான எண்ணங்க ளால் கவரப்பட்டதைக் குறிக்கும். நெப்போலியனுக்கு இரு விரல்களும் சமமாக இருந்ததென்று சொல்லப்படுகிறது.

இரண்டாவது (நடு) விரல்:—நீண்டும் சதைப்பற்றியு மிருந் தால், சஞ்சலத்தையும், ரோகத் தன்மையும்குறிக்கும். விரல் நீண்டும் கயிற்றைப்போல் முறுக்கியிருந்தால், கொலை செய் யும் எண்ணம் இயற்கை யென்பதைக் குறிக்கும்.

நீண்டும் கூர்மையாயு மிருந்தால், தன்னலத்தையும், தொந்திரவுகளை அலக்ஷியம் செய்யத்தக்கவர் என்பதையும் குறிக்கும்.

விரல் நீண்டும் சதுரமாயு மிருந்தால், கஷ்டத்தோடுங் கூடிய (குரூர சிந்தை) மனதைக் குறிக்கும்.

விரல் நீண்டும் ஒடுக்கமா யிருந்தால், மனதில் மேலான எண்ணம் குடிகொண்டே யிருக்கும். ஆனால், கலைஞானம், தொழில், சங்கீதம் இவைகளைத் தெரிந்து கொள்வதில் சோம்பலுள்ளவர் என்பதைக் குறிக்கும். மிருகங்களிடத்தில்

அன்புள்ளவரா யிருப்பர். முக்கியமாய் குதிரைகளை ஆதரிப்பார்.

முதல் அங்குலாஸ்தி நீளமா யிருந்தால், விசன முள்ளவராகவும், மூடபுத்தி யுள்ளவராயு மிருப்பார். அதிக நீளமாயின், தற்கொலைக்கான சிந்தையை யுடையவரா யிருப்பார்.

இரண்டாவது அங்குலாஸ்தி நீளமா யிருந்தால், விவசாயம் அல்லது யந்திரவேலை செய்பவராவர்.

மூன்றாவது அங்குலாஸ்தி நீளமாயும், அகலமாயு மிருந்தால், பேராசையைக் குறிக்கும்.

முதல் விரலை நோக்கி நடுவிரல் வளைந்து சாரின், எல்லாம் விதிபோல் நடக்கும் என்ற எண்ணமுடையவர் என்பதைக் குறிக்கும்.

மூன்றாவது விரலைநோக்கி சாரின், சித்திரவேலையில் இஷ்டமுள்ளவர் என்பதாகும். இயற்கையழகில் ஆர்வமுள்ளவர்.

மூன்றாவது (மோதிர) விரல்:—குட்டையாய் எவ்விதக் குறியுமற்றிருந்தால், சித்திர வேலையில் கூலித்தொழிலைக் குறிக்கும்.

விரல் நுனி கூர்மையா யிருந்தால், சமயோசித சகஜ ஞான தீட்சணியத்தைக் குறிக்கும்.

மற்ற விரல்கள் கூர்மை யில்லாமல் மோதிரவிரல் மாத்திரம் கூர்மையா யிருந்தால், அற்புதத்தன்மை யிருக்கும்.

விரல் முனை சதுரமாயிருந்தால், பணம் சம்பாதிப்பதற்காக வித்தையை விரும்புவர் என்பதைக் குறிக்கும்.

விரல் முனை உருட்சியா யிருந்தால், சித்திரவேலையில் ஓவிய நிபுணராகவும், நாடக மேடைகளில் நடிப்பவர்களாகவும் விளங்குவர்.

முதல் அங்குலாஸ்தி நீளமாயிருந்தால், சித்திரம் வரைவதில் மிகுந்த ஆசையுடையவரா யிருப்பார்.

இரண்டாவது அங்குலாஸ்தி நீளமாயிருந்தால், கைத்தொழிலில் ஊக்க முடையவராவர். புத்தி தீட்சணிய முள்ளவரா யிருப்பார்.

நீண்டு அகண்டு மூன்ருவது அங்குலாஸ்தி அமைந்திருந்தால், தொழிலில் தங்கு தடையின்றி பணம் சேரும். ஆடம்பரம், கர்வமற்று வாழ்வார்.

முதல் விரலுக்குச் சமமாய் மோதிரவிரல் நீண்டிருந்தால், கௌரவமும், கீர்த்தியோடுங் கூடிய செல்வமும் பெருகும் என்பதைக் குறிக்கும்.

சற்றேறக்குறைய நடுவிரலுக்குச் சமமாய் நீண்டிருந்தால், சூதாட்டத்தில் வெகு பிரியம். ஆனல், எப்பொழுதுமன்று; சமயம் வாய்த்தபோது அதிகப் பிரயாசையின்றி சூதாட்ட (குதிரைப்பந்தயம்) த்தில் தன் பங்கைச் சேகரிக்கும் எண்ணமுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

நாலாவது (சுண்டு விரல்):—மோதிர விரலின் நகம்வரை நீண்டிருந்தால், மனதையும் புத்தியையும் விசாலப்படுத்துவதற்கான வழியில் எண்ணமுள்ளவர். பல விஷயங்களில் புத்தி பிரவேசிக்கும் சக்திவாய்ந்தவ ராலுைம், நிதானமாகவும், சாவதானமாகவும் பேசுபவ ராவர். மற்றவர்களைத் தன் வசப்படுத்தக்கூடிய சக்தி வாய்ந்தவ ராகும்.

சுண்டு விரல் குட்டையா யிருந்தால், விஷயங்களை அதி சீக்கிரத்தில் கிரகித்து, அதற்குரிய காரணங்களைத் துரிதமாய் விளக்குபவ ராவர்.

சுண்டு விரல் கூர்மையா யிருந்தால், பலவித வித்தைகள் கற்பதில் இயற்கையான சக்தி வாய்ந்தவராயும், தீக்ஷணிய திருஷ்டி யுடையவராயு மிருப்பர். வாக்கு சாமர்த்தியம் தெய்வீக முள்ளதாகும். பின்னப்பட்ட கையில் கூர்மையான விரல் அமைந்திருந்தால், கபடஸ்தர் என்பதைக் குறிக்கும்.

விரல் நுனி சதுரமா யிருந்தால், தர்க்கம் செய்பவராயும், பகுத்தறிவு மிகுந்து, ஆராய்ச்சியில் நுண்ணறிவுடையவராயு மிருப்பர். எப்பொழுதும் பிரசங்கம் செய்யத் தயாராகவும், குறித்த விஷயத்தைச் சின்னஞ்சிறு சொற்களால் விளக்குபவ ராவர்,

சுண்டு விரல் ஒடுக்கமா யிருந்தால், யந்திர வேலையில் இஷ்ட முள்ளவர். சாதுரியமாகப் பேசுபவர். சாஸ்திர சம் பந்தமான சிக்கல்களையும், கடின விஷயங்களையும் எளிதில் விளக்கிவிடும் சக்தி வாய்ந்தவர்.

முதல் அங்குலாஸ்தி நீளமானால், சாஸ்திர விசாரணை யில் தீவிர சிந்தை யுடையவ ராவர்.

இரண்டாவது அங்குலாஸ்தி நீளமானால், கைத் தொழிலையும் வியாபாரத்தையுங் குறிக்கும்.

மூன்றும் அங்குலாஸ்தி நீளமாயிருப்பின், நுண்ணறி வும், சூட்சும புத்தியு முள்ளவ ராவர்.

மோதிர விரலுக்குச் சமமாய்ச் சுண்டுவிரல் அமைந் திருந்தால், தத்துவ ஞானியும், பண்டிதராயும் விளங்குவார். பின்னப்பட்ட கோணல் கையில் அப்படி அமையுமானால், பொல்லாத வஞ்சக ராவர்.

இரண்டாவது விரலுக்குச் சமமாய்ச் சுண்டுவிர லிருந் தால், சாஸ்திரவித்தை யெல்லாம் நிறைந்தவராயும், எவ் விதக் கஷ்டத்தையும் க்ஷணப்பொழுதில் நீக்கத்தக்க வல் லமை யுடையராவர். (இப்படி அமைவது அபூர்வம்.)

---

வைத்து அதைப் பார்த்து வருங்கால நிகழ்ச்சியைச் சொல்லுவார்கள். எழுதப் படிக்கத் தெரியாத பாமரர்கள் கையெழுத்துக்குப் பதிலாக பெருவிரலைப் பதியவைப்பது இன்றும் நடைபெற்று வருவதை வாசகர்கள் நன்கறிவார்கள். பத்திரப்பதிவு இலாகாவில் முக்கியமாய்க் கவனிக்கப் பட்டு வருகிறது. போலீஸ் இலாகாவிலும் திருடர்களின் பெருவிரலைப் பதியவைப்பதுண்டு. எனவே, பெருவிரல் ரேகை பிரதி மனிதருக்கும் வித்தியாசத்தைக் காட்டக் கூடியதென்பது நிதர்சன மாகிறது.

பெருவிரல் ஊனமில்லாமல் முதலிரண்டு அங்குலாஸ்தியும் செவ்வையாய் அமையுமானல், மனோ உறுதியையும் முதிர்ந்த அறிவையும் குறிக்கும்.

பெரு விரலில் மூன்ரும் அங்குலாஸ்தி யென்பது உள்ளங்கையில் சுக்கிரமேட்டில் கலந்திருக்கும். பிரத்தியேகமாய் விளங்காது.

பெருவிரல் ஒழுங்காய் அமைந்து அதன் அடிப்படை கெட்டியான எலும்புடன் அமைந்திருந்தால், அன்பு மாறுதலில்லா உறுதி யுடையது என்பதைக் குறிக்கும். முதற்படம் ஒழுங்காயமைந்த பெருவிரலைக் குறிக்கிறது.

அங்குலாஸ்தியின் (ஜாயின்ட்) முடிப்பையும் கவனிக்க வேண்டும். முதல் (நகமுள்ள) அங்குலாஸ்தி இரண்டாவது அங்குலாஸ்தியின் அடிமட்டம் வரை பின்னேக்கி வளையுமாயின் சங்கீத நோக்குடைய தாகும். சங்கீதப் பயிற்சி இல்லாதவர்க்கு முதல் அங்குலாஸ்தியின்முடிப்பு கெட்டியாய் வளர்ந்த தன்மையில் அமையுமானல், நாணயமாயும், தன் சொற்படி நடக்கக்கூடியவராயு மிருப்பார். முதல் அங்குலாஸ்தி பலஹீனப்பட்டு மெலிவாயிருக்குமானல், அத்தகையோரிடம் மனோ உறுதி யிராது. மனம் எந்த விஷயத்திலும் சலனப்பட்டிருக்கும். எதிலும் நம்பிக்கை உண்டாகாது. இன்னும் சந்தேகமும் அலக்ஷியத் தன்மையு முண்டாகும். முதல் அங்குலாஸ்தி சிறுத்து, இரண்டாவது அங்குலாஸ்தி இரண்டாவது படத்திலுள்ளபடி நன்கு அமையப் பெறின், மற்றவர்களுக்கு யோசனை சொல்வதில் மகா புத்திமானுய் விளங்குவர். முதல் அங்குலாஸ்தியின் பலஹீனத்தை





3



4



5



6



சைனு தேசத்திலே மக்கள் சோதிடத்தை வெகுவாய் நம்பக் கூடியவர்கள். அவர்களிடம் விசாரித்து அல்லது ஆராய்ச்சிசெய்து தெரிந்து கொள்வது என்பதுகிடையாது. ஆனல், பெருவிரலின் ரேகை ரகஸ்யத்தை தெய்வீகமாய்க் கருதி நம்புகிறார்கள்.

லும் பொதுவாக எந்த நிறம் அதிகமாய்க் காணப்படுகிற தோ, அதைக் கொண்டே பலனை யறியவேண்டும்.

நகம் விரலைவிட்டு நழுவி விழுவதாயின் துர்க்குறி யாகும். பின்தொடர விருக்கும் தீராத பெருநோயைக் குறிப்பதாகும். சில சமயங்களில் வெள்ளைப் புள்ளி நகத் தின் மத்தியில் தோன்றிமறையும்; இது நரம்புகளின் தளர் வைக் குறிக்கும். இத்தகையோர் சொற்பகாலம் ஓய்வெடுத் துக் கொள்வதே உசிதமாகும். பட்டையாய் அகண்டு அமை யும் நகம் நரம்புகளின் அழற்சியைக் குறிக்கும். பக்கவாதம் போன்ற நோய் வருவதாயின், நகம் இரும்பைப் போன்று கடினமாயும், அகண்டு பள்ளமாகவும் தோன்றும். (ஏழா வது படத்தைப் பார்க்க.)

நகம் மத்தியில் மேடாகி வளையுமாயின், ஈரலைப்பற்றிய நோயுண்டாகு மென்பதைக் குறிக்கும். (எ. எட்டாவது படத்தில் காண்க.)

நகம் லேசாகவும் தூளாய்ப் போகுந் தன்மையதா யிருப்பின், சரீரத்தில் வாயு, பிடிப்பு அதிகரிப்பதைக் குறிக் கும். இன்னும் ஜுரம் வருமென்பதற்கும் அறிகுறியாகும். (ஒன்பதாவது படத்தைப் பார்க்க.)

இரண்டாவது விரலின் நகம் வளைந்து மேடிட்டு, மற்ற நகங்களோடு ஒத்திராதிருப்பின், நீர் ரோகத்தைக் குறிக் கும். நகம் வெளுத்து கை குளிர்ந்திருப்பின், வீரிய நோயைக் குறிப்பதாகும்.

## பெருவிரல் மர்மங்கள்



பேசுங்குண முடையவர்கள். இவர்களுக்கு அநேகமாய் சுண்டு விரல் நீண்டிருக்கும்.

நகம் முக்கோணமாய்த் தோன்றும். மூன்றும் படத்தைக் கவனிக்கவும். இத்தகையோர் கூர்மையான புத்தியுள்ளவர். ஆள்காட்டி விரலில் நகம் முக்கோணமா யிருந்தால், அன்னுரைப்பற்றி நேரில் பேசும் சொற்கள் மனதில் தைக்கும். மிக்க உணர்ச்சி யுள்ளவரா யிருப்பர்.

நகம் சிறிதாகவும் சுற்றிலும், சதைப்பற்றிய மேடுமிருந்தால், நற்குண சீலராயும், நீதிமார்க்கத்தைப் பற்றிப் பேசுபவராயு மிருப்பர். நகம் சதுரமாகவும் செந்நிறமா யிருந்தால், வர்மமான குணமுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

கோழிமுட்டை போன்ற வடிவமுள்ள நகம் அமைந்து (நாலாவது படத்தில் காண்க.) சிவந்த நிறமும், மிருதுவுமா யிருப்பின், சாதுவாகவும், பிடிவாத மற்றவராயும், எவரையும் கடிந்து பேசாதவராயு மிருப்பர். இத்தகையோருக்கு மார்பும் ஈரலும் தளர்ந்த தன்மையிலிருக்கும்.

ஐந்தாம் படத்திலுள்ளபடி நகம் வரிவரியாய் மடிப்புடன் அமையுமாயின், பலஹீனத்தைக் குறிக்கும். தேகாரோக்கியமும், திடகாத்திரமும் ஏற்படும்போது நகத்திலுள்ள வரிவளைவு நீங்கிவிடும்.

நகம் வெண்மையாயும், பெரிதாகவும், அகலமாயு மிருப்பின், தணிந்த நோக்க முடையவராயும், தன்னலமே கருதுபவராயு மிருப்பர். (ஆறுவது படத்தைப் பார்க்க) இன்னும் கட்டைவிரல் பெரிதாயும், நகம் சதுரமாயும் அமைந்திருந்தால், தனித்தனி ஒவ்வொரு விஷயத்திலும் அதி ஜாக்கிரதையுள்ளவரா யிருப்பார். முகத்தோற்றம் கம்பீரமாயும், பெருநோக்குடையவராயும் காணப்படுவார்.

நகத்தின் நிறங்கள் அவரவர் குணவிசேஷங்களைத் தெரிவிக்கும். நகம் செந்நிறமா யிருந்தால், நடுவான குணமுடையவர். நகம் சிவப்பா யிருந்தால், கடுகடுத்த மனமுடையவர் என்பதைக் குறிக்கும். வெண்மையா யிருந்தால், தந்நலங் கருதுபவராவர். நீலநிறம், இருதய பலஹீனத்தைக் குறிக்கும். மஞ்சள் நிறம், மகோதரம் மஞ்சக்காமாலையைக் குறிக்கும் நிறமானது விரலுக்கு விரல் வித்தியாசப் பட்டா

### விரல் நகங்கள்

கை விரல்களில் அமையும் நகங்கள் விரலுக்குத் தக்க வாறு அமைகிறதில்லை. நகங்களின் பகுதி பிரத்தியேக மானது. ஆகையினுலேயே அமைப்புக்குத் தக்கவாறு பலாபலன் வேருகும்.

சாதாரணமாய் நகம், முதல் அங்குலாஸ்தியில் பாதியை மூடி நிற்கும். இதில் பெரிதாகவோ சிறிதாகவோ அமையு மானல் தனிப்படவே விவரிக்கப்படும்.

நகம் அர்த்த சந்திரனைப்போல் அமையவேண்டு மென்று சில மேல்நாட்டு ரேகை சாஸ்திரிகள் கருதுகின்ற னர். இந்தியாவில் கால்பாக வளர்பிறைபோ லிருக்க வேண்டு மென்கின்றனர். மேற்கண்ட இரண்டும் அனு பவத்துக்கு ஒத்து வருவதாயில்லை.

சிலர் நகத்தைத் தமாஷாக வளர்க்கிருர்கள். வளைந்தோ நீண்டோ அங்குலக் கணக்கில் வளர்ந்து விடு கிறது. இது சாஸ்திர சம்மதமுமல்ல. எவரும் விரும்பக் கூடியதுமல்ல. ஆகையால், இதற்குப் பலன் யாதொன் றும் கூறுவதற்கில்லை.

நகம் விரல் முனைக்குமேல் அதிகப்பட்டு வளரவிடுவது உசிதமல்ல. அப்போதைக் கப்போது கத்தியால் நீக்கிக் கொள்ளலாம். சிலர் தம் பற்களால் அடிக்கடி கடித்து எடுத்து விடுவதுமுண்டு. இது ஒரு கெட்ட வழக்கமானதால், இதனுல் அநேக கெடுதிகள் விளையும். பலஹீனம், நரம்பு களின் தளர்வு, மூர்க்கத்தனம், முன் கோபம், வஞ்சிக்குங் குணம் முதலானவை விர்த்தியாகும், நகத்தை நீளமாய் வளர்ப்பதால் சரீரசக்தி குறையும். ஒத்தை நாடியாயிருந் தால், இன்னும் கஷ்டத்தைக் கொடுக்கும்.

தேகாரோக்கியத்தோ டிருப்பவர்களுக்கு முதல் படத் தில் காணப்படுவதுபோ லிருக்கும். இதுவே சாதாரண அமைப்பு. நகம் நடுத்தரமாய், சுற்றிலும் மிருதுவான சதைப் பற்றியிருக்கக் காணலாம். நகம் சற்று சிவப்பாய்த் தோன்றும். முதல் அங்குலாஸ்தியில் ஏறக்குறைய பாதிக் குக் கவர்ந்திருக்கும்.

நகம் குட்டையாக விருக்கும் இரண்டாவது படத்தைப் பார்க்கவும். இத்தகையோர் எப்பொழுதும் கேலியாய்ப்

யோகமான பொருள்களிலும் சித்தம் செல்லுமேயன்றி, சங்கீதத்திலும் கவித்துவத்திலும் புத்தி பொருந்தாது. ஆனால், இவர்களின் குணம் கௌரவமாகவும், புத்தி விசால மாயு மிராது.

கை சங்கைப்போலும், அங்குலாஸ்தி முடிப்புள்ள தாயும், விரல்கள் சற்றே கூர்மையாயும் இருந்தால், தத்துவ சாஸ்திரத்தில் பற்றுள்ளவர் என்பதையும், நூதனமாய் சாஸ்திரங்களைக் கண்டு பிடிக்கிறவராயும், காரண காரியம் அறிபவராயு மிருப்பர்.

மனிதர்கள் தத்தம் காரியங்களையோ தொழில்களையோ கவனியாமல் அசட்டுத்தனமாய் விடுவதோடு, வந்தது வரட்டும், போனது போகட்டும் என்றிருப்பவர், பலமான முடிப் புள்ள கையை யுடையவ ராவர்.

விரல்களில் ஒருமுடிப்பு மாத்திரம் காணப்பட்டு, கையும் மிருதுவா யிருக்குமாயின், தர்க்க வாதத்தில் தேர்ந்தும், வேதாந்த சாஸ்திரத்தில் விற்பன்னராயு மிருப்பர். இரு கட்சியின் வாதங்களையும் நன்கு சிந்திப்பர். இத்தகையோர் மகா புத்திமானும், மேதாவியாயும் விளங்குவர், இதற்குப் பொருத்தமாக கட்டைவிரலின் இரண்டாவது அங்குலாஸ்தி அகண்டு நீண்டுமிருப்பதே போதுமான அத்தாட்சியாகும். ஒருக்கால் இரண்டாவது அங்குலாஸ்தி சிறுத்து ஒடுக்க மாய்க்காணப்படில், விவகாரங்கள் விவர்த்தமாய், கோணல் வழி, விதண்டாவாதம் முதலிய முன் கூறிய குணங்களுக் கெல்லாம் மாறுதலாகவே காணப்படும், சுருக்கிச்சொல்லில் எதிரிடையான வழிகளிலே சாமர்த்தியம் மிகுந்து நிற்கும்.

பிரதி மனிதரின் அபிவிர்த்தி அவரவர் புத்தி சாதுரி யத்தைப் பொருத்திருக்கிறது. புத்தியைத் தீக்ஷண்யப்படுத் தவே கல்வி அவசியமாகும். கல்வியும் நல்லொழுக்கமும் விர்த்தியாகுமாயின், இளமையில் கைவிரல்களில் தோன்று திருந்த முடிப்புகள் தோன்றிவரும். ஆனால், தெய்வீகமாய்த் தோன்றிய முடிப்பு எக்காரணத்தைக் கொண்டும் மறைந்து போகாது. கலாசாலையில் படிக்கும்போது மூடனாய்க்காணப் பட்டவன் பிற்காலத்தில் மேதாவியாகி விடுவதற்கு மேற் சொன்னதே காரணமாகும்.

## மிருதுவான விரல்கள்

பொதுவாக முடிப்புள்ள விரல்கள் அமைந்திருப்பின், விரிவான எண்ணங்களையும், எண்ணத்தாலான பலனையும் அடையச் செய்விக்கும் என்பதைத் தெரிவிக்கும். விரல்கள் மிருதுவோடுங்கூடி முடிப்புகள் வெளிப்படையாய்த் தோன்றின், தெய்வவழிபாடு செய்பவராயும், திருவருள் பெற்றவராயும் இருப்பர். ஆனால், எந்த வேலையையும் தீர்க்காலோசனையின்றி செய்பவராதலால், அடிக்கடி அபஜெயத்துக் காளாவார். பார்வையில் மயக்கமும், காட்சியில் களிப்பும் உள்ளவரா யிருப்பதால் எவருக்கும் தீங்கு செய்யார். சிந்தனை—யோசனை—மிகவும் குறைவானதால் அடுத்து சிந்திக்க அறியார். மனதில் தோன்றியபடி நடக்க எண்ண முடையவராவர். எதற்கும் தக்க காரணம் சொல்ல வகையற்றிருப்பதால் 'குருட்டுத் திசை'யாக அநேக காரியங்கள் சித்தியாகும். மிருதுவான விரல் என்ற வகையில் ஸ்திரீகளுக்குப் பிரத்யேகமான குணம் சொல்லவேண்டும். இதைப் பற்றிப் பிரத்தியேகமாய்க் கவனிப்போம்.

கைவிரல்களில் அநேக அதிசயங்களைக் காணலாம் என்று ஜெர்மெயின் என்னும் மகான் எழுதுகிறார்.

விரல்கள் மிருதுவாயும், முடிப்பு வெளிப்படையாயும், கூர்மையாயு மிருப்பின், கவிவாணர்களாயும், பகற்கனு காண்பவராயும், மதகுருவாயு மிருப்பர். பிரத்தியட்சமான அனுபவத்தை ஒத்துக்கொள்ளார். லகுவான வாழ்க்கையை விரும்புவர்.

விரல்கள் மிருதுவோடு சதுரமாயிருந்தால், எண்ணியதைச் சிந்திப்பவராயும், உருக்கமான கவி பாடுபவராயும், காதற் கதைகள் எழுதுபவராயு மிருப்பர்.

விரல்களின் இரண்டு முடிப்பும் தோற்றப்படுமாயின், கிரமமாயும் ஒழுங்காயும் கை அமைந்திருக்க வேண்டும். அப்படியிருந்தால் வரப்பிரசாதமாய்க் கருதவேண்டும். யந்திர வேலை செய்பவர், சித்தரிப்போர், நீதிக்குக் கட்டுப்பட்டவர் முதலானவர்களுக்கே இது சித்திக்கும். இன்னும் எந்த வேலையையும் யோசனை பண்ணியே செய்வர். இவர்களுக்குப் பகுத்தறிவு மிகுதி. அழகுள்ள வஸ்துக்களிலேயும், உப

# 5-வது அத்தியாயம்

## விரல்களும் நகங்களும்



1



2



3



4



5



6



7



8



9

கை விரல்களின் அமைப்புக்கு இரண்டு அங்குலாஸ்தியின் சந்திப்பு முதன்மையானது. இதை அங்குலாஸ்தியின் ‘முடிப்பு’ என்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு கைவிரலின் நகமும் முக்கியமாய்க் கவனிக்கக் கூடியதே. விரல்களெல்லாம் தெய்வீகமென்று முன்னே சொல்லி யிருக்கிறோம். மனிதரின் கைவிரல்கள் சென்ற காலத்தையும், இப்பொழுது நடக்கிற விவகாரங்களையும், இனி வருங்காலத்தில் சந்தேகமின்றி நடக்கப் போவதையும் தெரிவிக்கின்றன. உள்ளங்கையிலிருந்து விரல்களின் முனைவரை அல்லது அங்குலாஸ்தியின் ‘முடிப்பு’ வரை மிருதுத் தன்மையைத் தெரிந்துகொள்ள வேண்டியது. விரல்களிலுள்ள முடிப்புகளில் ஒன்று நன்றாய் விளங்கும். விரல் முனைக் கடுத்த ‘முடிப்பு’ வெளிப்படையாய்த் தோன்றும்.

அடுத்த இரண்டாவது அங்குலாஸ்தி நீக்கி விடுகிறது. மனோ உறுதி யில்லாததால் யோசனை தனக்குப் பயன் படாது. மூன்ருவது படத்திலுள்ளபடி பெருவிரலின் இரண்டு அங்குலாஸ்திகளும் சிறுத்து கனத்திருக்குமாயின், அவசர புத்தியைக் குறிக்கும்.

முதல் அங்குலாஸ்தி அதிக நீளமின்றி அகண்டிருந் தால், பிடிவாத முள்ளவர் என்பதைக் குறிக்கும். இன்னும் நீண்ட காலம் எதிர்வாதம் செய்பவராயு மிருப்பர். (நான்கா வது படத்தில் காண்க.) முதல் அங்குலாஸ்தி அதிக அகல மாயும், பெருவிரல் கெட்டியாயு மிருப்பின், எல்லா விவகார மும் அளவுக்கு மிஞ்சியே நிற்கும்; அமைதியும் நிதான புத்தியு மிராது. ஐந்தாவது படத்திலுள்ள பெருவிரல் அமையுமாயின் கொலைக்காரனுக்குள்ள குரூர புத்தி, அள வற்ற ஆசை, குடிகாரனைப் போன்ற மனோமயக்கம், அடக்க மற்ற தன்மை இவைகளைக் குறிக்கும். ஆனால், நல்ல புத்தி ரேகையும், இருதய ரேகையும் அமைந்திருந்தால், மேற் சொல்லிய துர்குணங்கள் திருந்தி விடும். இத்தகையோர் ஆசையைத் திருப்தி செய்வதில் மற்றவர்களுக்குத் தீங்கு செய்வதைவிட தங்களுக்கே ஆபத்தைத் தேடிக் கொள்வர்.

பெருவிரல் பின்புறம் வளைத்துக் காணப்படில், மன துக்கு இன்பமான வகையில் அளவுக்கு மிஞ்சியே நடந்து கொள்வர். நல்லொழுக்கத்துக்கான புத்தி குறைந்து நிற்கும்.

குருமேட்டிலிருந்து பெருவிரல் ஒடுங்கி யமைந்திருந் தால், தன்னடக்கத்துக்கான சக்தி குறைந்திருக்கும்.

குருமேடு நன்கு அமையப்பெறின், ஆடையாபரணதி களில் ஆசை அதிகப்பட்டு, படாடோபமாய் வாழ எண்ணி, கடனுக்குட்பட்டு கஷ்டப்படுவர்.

ஆருவது படத்தி லுள்ளபடி, இரண்டாவது அங்கு லாஸ்தி சிறுத்து அமையுமாயின், வாதம் செய்யவோ, மறுத்துப் பேசவோ இஷ்டப்படார். எந்த விதமாவது நழுவி விடுவதற்கே வழிபடுவர். தன் காரியத்திலேதான் கவலை; மற்ற விஷயம் தெரியாது. இத்தகையோருக்கு நீண்ட புத்தி ரேகை அமைந்திருப்பின், அவருக்குச் செய்த நன்மை தீமைகளை ஒருக்காலும் மறக்கார்.

மிருதுவாயும் பெரிதுமான பெருவிரலை யுடையோர், தன் வேலையைக்கூட செய்வதற்குச் சற்றும் கவலைப்படார். நண்பர்களை நம்பியே நாட்களைக் கழிப்பார்.

பெருவிரல் நீளமாயும், பலமுடையதாயிருந்தால், அபார புத்தியையும், ஆராயுந் தன்மையையும் குறிக்கும்.

பெருவிரல் சிறிதா யிருந்தால், மனோபீஷ்டப்படி நடப்பர்; பெரிதா யிருந்தால், மூளையைக்கொண்டு யோசனை செய்து நடந்துகொள்வர்.

பெரிய பெருவிரலும், மற்ற விரல்கள் ஒன்றோடொன்று நெருங்காதிருப்பின், ஸ்திர புத்தியையும், சுதந்தரத் தன்மையையும் குறிக்கும்.

பெருவிரல் நடுத்தரமாய் அமையுமாயின், நினைத்தகாரியத்தை எவ்வித முயற்சி செய்தாவது முடிப்பர்.

பெருவிரல் உட்புறமாய் வளைந்திருப்பின், (ஏழாவது படத்தில் காண்க.) உன்மத்தத்தைக் குறிக்கும். அதிகமாய் வளையுமாயின், அற்பத்தனம், அற்ப புத்தி என்பதைக் குறிக்கும்.

எட்டாவது படத்தி லுள்ளதுபோல் பெருவிரல் அமையுமாயின், பரோபகாரம், தாராள சிந்தை என்பதைக் குறிக்கும்.

---

# 6-வது அத்தியாயம்

## கையிலுள்ள கிரகமேடுகள்




ஒன்பது கிரகங்களின் ஏழு கிரகங்களுக்கே கையில் இடங் குறிக்கப்பட் டிருக்கிறது. நான்கு கிரகங்களின் நிலை நான்கு விரல்களுக்கடியிலும், மற்ற மூன்றும் உள்ளங் கையைச் சுற்றிலும் அமைந்திருக்கின்றன. ஒருவரது வாழ்க்கை கிரக நிலையைப் பொருத்திருக்கிறது. கிரகங்கள் அந்தந்த ஸ்தானத்தில் இல்லையெனில், பலக்குறைவைக் குறிக்கும்.

படத்தில் காணப்படுகிறது போல் ஆள்காட்டி விரலின் அடிப்பீடம் குருமேடு எனப்படும். இந்த குருமேடு அமையாமலும், அதில் எவ்வித ரேகை காணப்படாவிடினும், அவர் சுயமரியாதை யற்றவராவர் என்பதைக் குறிக்கும். இந்த குருமேடு கௌரவத்துக்கு அஸ்திவாரமாகும். ரேகை யற்ற மேடு அமையப்பெறின், அதி சூட்சுமபுத்தியும், எந்த

லௌகீக விவகாரமானபோதிலும் தலைமை ஸ்தானத்தைக் கொடுக்கும், இருதயரேகை வரை குரு மேடிட்டிருக்குமாயின், பதவியில் தற்பெருமையும், அகண்ட அன்பையும் குறிக்கும். ஆயுள் ரேகைவரை மேடிட்டிருப்பின், குடும்பத்துக்கே பெரிய கௌரவத்தைக் கொடுக்கும். குருமேடு புத்தி ரேகையை எட்டுமாயின், மகாபுத்திமான் என்ற கௌரவத்தைக் கொடுக்கும். குருமேடு அளவுக்கு மேற்படுமாயின், அதீதத்தில் மாறுபட்ட தன்மையைக் குறிக்கும்.

குருமேட்டில் மெல்லியதாய் ரோமக்கால்போல் நீளமாகவாவது, வளைவாகவாவது ரேகை காணப்படில், நியாய வரம்புக் குட்பட்ட அபிலாஷையும், தெய்வ நம்பிக்கையும் இருக்கும். காரணமின்றி எவருடனும் நட்பு பாராட்டார். தன் பெருமையைச் சொல்லவே இஷ்டப்படுவார். எதையும் மிகைப்படுத்தியே அழகுபடப் பேசுவார். பின்னப்படாமல் ஒழுங்கான ரேகை காணப்படில், நல்ல தேஜஸோடு கூடிய ஆரோக்கிய முடையவர் என்பதைக் குறிக்கும். அன்னேருக்கு இளமையிலேயே விவாகமாகிவிடும். சுகமாய் வாழ்வர். உள்ளங்கை கெட்டியாயும், சற்றே வளையக்கூடியதாயு மிருக்கும். பெருவிரலின் இரண்டாவது அங்குலாஸ்தியைவிட முதல் அங்குலாஸ்தி சற்றே நீளமா யிருக்கும்.

நடுவிரல் ஊனமின்றி கிரமமாய் காணப்படில், ஜெயப் பிரதாபத்தையும், சுகமான வாழ்க்கையையும் குறிக்கும்.

குருமேட்டில் ரேகை அழுத்தமா யிருந்தால், கர்வம், பொறாமை, அளவுக்கு மிஞ்சிய காதல், காரணமற்ற கர்வம், தன் காரியத்திலேயே குறிப்பு முதலியவைகளைக் குறிக்கும்.

முதல் விரல் நீண்டும், முடிப்பு மிருதுவாயும் காணப்படில், அலங்கரித்துக் கொள்வதில் வெகு பிரீதியையும், அனுவசியச் செலவையும் குறிக்கும்.

குருமேட்டின் ரேகை, அதற்கடுத்த சனிமேட்டை நோக்குமாயின், வருங்கால நிகழ்ச்சியைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனை, கணிதசாஸ்திர ஆராய்ச்சி இவைகளைக் குறிக்கும். இன்னும் இத்தகையோர் மனோபாவம் விசனகரமாயும், கர்வமாயும் மாறிக்கொண்டிருக்கும் சுபாவத்தை யுடையதாகும்.

## குரு மேட்டுக்கும் இதர சிகர மேட்டுக்கும் உள்ள சம்பந்தம்

1. குரு மேடும், சனிமேடும் ரேகையோடு அமையின், வாழ்நாளெல்லாம் நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

2. குரு மேடும், சூரிய மேடும் ரேகையோடு காணப்படில், கௌரவத்தையும், குபேர சம்பத்தையுங் குறிக்கும்.

3. குரு மேடும், புதன் மேடும் ரேகையோடு அமைந்தால், சாஸ்திர ஆராய்ச்சியில் ஆசையைக் குறிக்கும். இன்னும் கவிவாணராயும், கீர்த்தியுள்ள வைத்திய சிரேஷ்டராயும் ஆவர் என்பதைக் காட்டும். ஆனால், இரண்டு மேட்டிலும் பின்னப்பட்ட ரேகை காணப்படில், துர்க்குணம் பிடித்த காமாதுரராயும், பொறாமை யுள்ளவராயும் காணப்படுவர்.

4. குரு மேடும், சுக்கிரமேடும் ஒரே மாதிரி அமைந்திருந்தால், நிறைந்த சந்தோஷம், பரிசுத்தமான அன்பு, நற்குணம், நல்லொழுக்கம், நன்னம்பிக்கை, தயை, பெருந்தன்மை, பரோபகாரம் இவைகளைக் குறிக்கும். ஸ்திரீகளிடத்தில் தன்னலமற்ற பக்தி செலுத்துபவ ராவர்.

5. குரு மேடும், சந்திர மேடும் ஒத்திருந்தால், நீதி வரம்புக்குட்பட்டு அமைதியோடு வாழ்வர் என்பதைக் குறிக்கும்.

6. குரு மேடும், செவ்வாய் மேடும் சமத்துவமா யிருந்தால், தன்னம்பிக்கை, தைரியம், தளகர்த்தருக்குள்ள புத்தி தீக்ஷணியம் இவைகளைக் குறிக்கும்.

குரு மேட்டில் 'கிராஸான' ரேகை யிருந்தால், விவாகத்தால் சம்பத்தும், சுகவாழ்க்கையும் குறிக்கும்.

குரு மேட்டில் நீண்ட அல்லது வளைந்த ரேகை துண்டு பட்டாவது, வளர்ச்சியின்றி குருக்கிட்டரேகை காணப்படினும், தெய்வத்தினிடத்து நம்பிக்கை குறைவாயும், தடுமாறின பக்தியையும் குறிக்கும். ஆனால், குறிப்பிட்ட சில காலங் கழித்து நல்ல புத்தி யுண்டாகும்; பக்தியும் உதிக்கும்.

### சனி மேடு

ஆள்காட்டி விரலுக்கு அடுத்த இரண்டாவது விரலின் அடிப்பாகம் சனி மேடு படத்தில் பார்க்கவும்.

சனி மேடு காணப்படாதிருந்தால் வாழ்க்கை, நிலைமை அந்தரமாயிருக்கும். ஒரு வகையிலும் குறிப்பிட்டிருக்க முடி

யாது. விவகாரங்களும், வேலைகளும் தங்கு தடைகளுக்குட்பட் டிருக்கும்.

நடுத்தரமாய் மேடு காணப்படில், வாழ்வின் சுருக்கத்துக்கு ஓர் அறிகுறியாகும். வினைப்பயன் அதாவது: கர்ம பலனின்றி ஒரு மனிதனுக்கு உலகில் வாழ்வில்லை. ஆகையால், விதிரேகை எத்துணை அவசியமோ, அவ்வளவுக்குச் சனி மேடும் அப்படியே. விதியும், விதிக்குறிப் பலனும் ஆக இரண்டும் ஒன்ருய்ப் பின்னி அமைவதே விதிரேகை. இது பலன் தரும் ரேகையானதினல், இதையே அநேக ரேகை சாஸ்திரக்காரர்கள் "அதிர்ஷ்டரேகை" என்று சொல்லுகின்றனர். சாஸ்திரோக்தமாயிருந்தாலும், அனுபவத்துக்கு ஒத்து வருவதாயில்லை. விதிரேகை ஸ்பஷ்டமா யிருந்தும் அநேகர் வேலையின்றிக் கஷ்டப்படுகின்றனர். விதிரேகை கிராஸ் பிளவின்றி யிருப்பதோடு, அதற்கடுத்த பவித்திர விரலாகிய சூரிய மேட்டில் தங்கு தடையற்ற ரேகை காணப்பட்டால் தான் அதிர்ஷ்டத்தைக் குறிப்பிட்டுச்சொல்லலாம். விதிரேகையைப் பற்றிப் பிரத்தியேகமாய் எழுதவேண்டியிருப்பதால் சனி மேட்டை மாத்திரமே குறிப்பிடுவோம்.

ஆயுளுக் குரியது சனிரேகை யாதலால், கையில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயமாகும். மனேபலம், அருட்சத்தி, தத்துவ ஞானம் இவைகள், சனிக்கிரகத்தின் முன் பயன்படாது. ஆகையால், இந்துக்கள் 'விதி' என்றும், மகம்மதியர்கள் 'கிஸ்மத்' என்றும் சொல்லுகின்றனர்.

நன்கு அமையப்பெற்ற சனிமேடு, அதிதீவிர புத்தி, சில சமயம் அதீத புத்தியும், தனித்திருக்க எண்ணமும் உண்டாவதைக் குறிக்கும். அதீதமான முரட்டு புத்தி சில சமயம் உயிரைத் துரும்பாய் மதித்துக் காரியத்தி லிறங்கிவிடும். இத்தகைய புத்தியுள்ளோர் அநேகமாய் விவாகம் செய்து கொள்ளார். நேசமான நண்பர்கள் குறைவா யிருக்கும். தீங்கற்ற பயிர்த்தொழில் முதலியவைகளை ஒரே சரத்துடன் செய்வர். மத சம்பந்தமான சடங்குகளில் நம்பிக்கை யற்றவராவர். இவர்கள் பிறப்பிலேயே தத்துவ சாஸ்திரிகள். வேத வேதாந்த நூல்களை ஆராய்ச்சி செய்வதில் மிகப் பற்றுள்ளவரா யிருப்பர். சங்கீதத்தில் ஆழ்ந்து நிற்பர். இவர்களின் நடு விரல் எப்பொழுதும் மற்ற விரல்களைவிட

நீளமாகவே யிருக்கும். முதல் அங்குலாஸ்தியில் முடிப்பிருக்கும். முடிப்பு நீண்ட சிந்தனையைக் குறிக்கும்.

சனிமேடு மிதமிஞ்சி யிருந்தால், (அப்படி யடைவது அரிது) பயங்கர எண்ண முடையவராயும், மரணத்துக்குப் பயந்தவராகவு மிருப்பார். ஆனால், ஆச்சரியமான வழியில் தற்கொலை செய்து கொள்ளுபவ ராவர். இதுவன்றிச் சித்தப் பிரமையில் திருப்பிவிடும்.

சனி மேட்டிலுள்ள ரேகை அடுத்த சூரிய மேட்டை நோக்கிச் சென்றால், ஜெயாபஜெயக் குறிகளை முன்னால் அறிவிக்கும் என்பதாம்.

### இரண்டு கிரக மேடுகளின் சமத்துவத்தா லுண்டாகும் பலன்கள்

1. சனி மேடும் சூரிய மேடும் (இரண்டு மேட்டிலும் ஒரே மாதிரி ரேகை) ஒத்திருந்தால், நல்ல எண்ணம், கௌரவம், மரியாதை இவைகளைக் குறிக்கும். ரேகைகள் பின்னமாகக் காணப்படில், மூளையின் சக்திக்குறைவு, விசனம், மூர்ச்சை, நோய் முதலியன உண்டாகு மென்பதைக் குறிக்கும்.

2. சனி மேடும் புதன் மேடும்—நல்ல ரேகைகளோடு—ஒத்திருந்தால், சந்தோஷம், சமாதானம், காரண மறிவதில் அவா, சாஸ்திரங்களில் பிரீதி, முக்கியமாய் வைத்திய நூல்களில் இச்சை பண்டைக்கால சாஸ்திர ஆராய்ச்சி இவைகளைக் குறிக்கும்.

ரேகைகள் மாறுதலாகக் காணப்படில், முன்கோபம், பொறாமை, வஞ்சகமான எண்ணம், திருடர்க்குரிய மூடத்தனம் முதலானவைகளைக் குறிக்கும்.

3. சனிமேடும் சுக்கிரமேடும் நல்ல ரேகைகளோடு ஒத்திருக்குமாயின், நல்லொழுக்கம், மனத்துக் கெட்டாத சாஸ்திர ஆராய்ச்சி, தர்மசிந்தை, தர்க்க சாஸ்திர ஆராய்ச்சி, தன்னம்பிக்கை, ஆடம்பரத்தில் அறியாத் தன்மை முதலியவைகளைக் குறிக்கும். ரேகைகள் வித்தியாசப்பட் டிருந்தால், பொறாமை, அளவற்ற ஆச்சரியத் தன்மை, மூடத்தனமான ஆவல் இவைகளைக் குறிக்கும்.

4. சனி மேடும் சந்திர மேடும் ஒத்திருப்பின், சோதிட சாஸ்திரத்தில் வல்லவ ராவர். மிகுந்த கீர்த்தியைக் கொடுக்கும். மாறுபட்டால், மாறுபட்ட நிலைமையைக் குறிக்கும்.

5. சனி மேடும் செவ்வாய் மேடும் ஒத்திருந்தால், வெடுவெடுப்பான தன்மை, போர்க்குணம், துவேஷ புத்தி முதலிய துர்க்குணங்களைக் குறிக்கும்.

## சூரிய மேடு

மோதிர விரலுக்கடியில் சூரியமேடு தோன்றுதிருப்பின், புத்திக் குறைவு, படிப்பின்மை, அசட்டுத்தனம் இவைகளைக் குறிக்கும்.

சொற்ப மேடு காணப்படில், அழகான வஸ்துக்களில் அன்பு, சங்கீதம், கல்வியபிவிருத்தி இவைகளைக் குறிக்கும்.

நடுத்தரமாய் மேடு அமையப்பெறின், செல்வப்பெருக்கு, காரியசித்தி, அபிவிர்த்தியில் கீர்த்தி, தன்னம்பிக்கை, அமைதி, கட்டழகு, நூதனப் பொருளைக் கண்டுபிடித்தல், புத்தி நுட்பம், தயாளகுணம் இவைகளைக் குறிக்கும். இன்னும் ஆபரணங்களில் இச்சையும், மதச் சடங்குகளில் நம்பிக்கையும் உண்டாகும். புண்ணியமுள்ள ஸ்திரீ புருஷர்களுக்கு அன்பு பொலிந்து நிற்கும். வரப்பிர்சாதியா யிருப்பின், ஆழ்ந்த புத்தியும் சரீர பலமு மிராது. கல்வி யறிவில்லாத தம்பதிகள் வாழ்வில் அதிர்ஷ்டம் குன்றியிருக்கும். எண்ண மெல்லாம் மனக் கோட்டையா யிருக்கும். ஒரு சிலரே காரியத்தில்புகுவர். அங்குலாஸ்திகள் சதுரமாயிருப்பதே காரணம். இன்னும் பெரு விரலின் இரண்டாவது அங்குலாஸ்தி நீண்டு இருக்கும்.

சூரியமேடு அளவுக்கு மிஞ்சி பெரிதாகக் காணப்படில், பேராசை, பெரும் பேச்சு, இன்னும் எல்லை யில்லாது சிந்தித்த வண்ணமே யிருப்பார்கள். இவ்வுலகில் இதுவரை கண்டிராத காட்சிகளை யெல்லாம் மனக்கோட்டையில் கட்டுவார்கள். அளவுக்கு மிஞ்சிய செலவு, பொறாமை, ஆச்சரியமும், அகாரணமான பேச்சு இவைகளைக் குறிக்கும். இன்னும் விரல்கள் முருக்கிக்கொண் டிருக்குமாயின், விவகாரத்தை எடுத்துப் பேசும் சாமர்த்தியம் குறையும்.

1. சூரிய மேடு புதன் மேட்டோடு ஒத்திருப்பின், சாஸ்திர ஆராய்ச்சியில் ப்ரீதி, நிர்ணயமான எண்ணம், சாதுரிய வாக்கு, கூர்மையான புத்தி இவைகளைக் குறிக்கும்.

2. சூரிய மேடு சுக்கிர மேட்டுடன் ஒத்திருந்தால், சமாதானப் படுத்தல், மற்றோர்களைச் சந்தோஷப் படுத்துவதே இச்சை என்பதைக் குறிக்கும்.

3. சூரிய மேடு சந்திர மேட்டுடன் ஒத்திருக்குமாயின், குற்றமற்ற இருதயம் (மாசற்ற மனம்) பகுத்தறிவு திருப்திகரமான எண்ணம் இவைகளைக் குறிக்கும்.

4. சூரிய மேடு செவ்வாய் மேட்டோடு ஒத்திருந்தால், ஆராய்ச்சியில் அமைதி, உண்மையைக் கண்டு பிடிப்பதில் புத்தி நுட்பம், மதாபிமானம் இவைகளைக் குறிக்கும்.

சூரிய மேட்டை சந்திர மேட்டிலிருந்து ஒரு ரேகை சேருமாயின், அதுவே நல்ல சுகசௌக்கியமான அதிர்ஷ்டத்தைக் குறிக்கும். குரு மேட்டில் வளைந்த ரேகையும் காணப்படில், அதிகாரம், செல்வாக்கு இவைகளைக் குறிக்கும். சூரிய மேட்டில் எந்த விடத்திலிருந்து ஆரம்பமாகிறதோ அந்த சமயத்திலிருந்து அதிர்ஷ்டத்தின் மேன்மை விளங்கும்.

சூரிய மேட்டில் அநேக சிறுகுறுகிய ரேகைகள் காணப்படில், பல தொழில் செய்வார் என்பதைக் குறிக்கும்.

சூரிய ரேகை துண்டுபட்டு போயிருந்தால், அந்த வயதில் பிரவிர்த்தி மாறுமென்பதைக் குறிக்கும். கிளை காணப்படில், தொழில் அபிவிர்த்தியைக் குறிக்கும்.

சூரிய ரேகையைத் தனரேகை என்பது பொருத்தமாகும். தனரேகை யின்றி விதிரேகை மாத்திர மிருப்பின், வேலை செய்தவரை தக்க கூலிதான் கிடைக்கும். தனரேகையும் ஒத்திருந்தால், செய்த வேலை சொற்பமானலும் சம்பத்து அதிகமாகும். தனரேகை செல்வத்தை மாத்திரம் குறிப்பதன்று. செல்வாக்கு, கௌரவம், சௌரியம், விவேகம், தத்துவஞானம், த்ரிகால ஞானம், பேரின்பம், இல்லறஞான முதலானவைகளையும் குறிக்கும்.

சூரிய ரேகை என்னும் தனரேகை தனவானுக்கிருப் பின், இன்னும் அதிகச் செல்வம் குவியக் காத்திருக்கிற தென்பதைக் குறிக்கும்.

குரு ரேகையாவது புதன் ரேகையாவது இல்லாமல்தன ரேகை மாத்திரம் காணப்படில், மூடனிடம் செல்வம் சேர்வ தைக் குறிக்கும். செல்வம் தங்கும் தங்காதென்பதை தன ரேகையின் ஒழுங்கைக்கொண்டு தீர்மானிக்கவேண்டும்.

தனரேகை ஆயுள்ரேகையி லிருந்து உற்பத்தியாகு மாயின், இருக்கு மிடத்திலிருந்தே சம்பத் தடைவதைக் குறிக்கும்.

## புதன் மேடு

சுண்டுவிரலுக்கு அடிப்பாகம் புதன்மேடு என்பதாகும்.

புதன் மேடு காணப்படாவிடில், சாஸ்திரங்களில் சற் றும் பற்றுதல் இராது. இன்னும் எண்ணிக்கைக்குள்ள கணக்குகளில் கொஞ்சமும் இஷ்ட முண்டாகாது.

சாமான்யமான மேடு காணப்படில், புத்திவைபவம், கணக்கில்துரிதம், சரியான சாஸ்திரங்களில் இச்சை, படித் துப் பயனடைதல், புதுமையாய்க் கண்டுபிடிப்பதில் சிறந்த புத்திக்கூர்மை, எண்ணியதும் துரிதமாய்ச் செய்து முடித் தல், தீர்மானமுள்ள—முடிவானஎண்ணம், பிரயாணத்தில் ஆவல், சோதிடம், ரேகை சாஸ்திர முதலிய மானசீக சாஸ் திரங்களில் ஆராய்ச்சி இவைகளைக் குறிக்கும். விரல் கூர் மையாயிருந்தால், பிரசங்கிப்பதில் வல்லமையைக் குறிக்கும். விரல் முருக்கிக் கொண்டிருந்தால், பிடிவாதமான தர்க் கத்தைக் குறிக்கும். அங்குலாஸ்தி சதுரமாயிருந்தால், தர்க்க சாஸ்திர ஆராய்ச்சியைக் குறிக்கும். விரல் குட்டையாயிருந் தால், ஜாக்கிரதையாயிருப்பவர் என்பதைக் குறிக்கும். விரல் நீளமாயிருந்தால், காரண காரியத்தை விசாரிப்பதும் நிவர்த்தி தேடுதலையும் குறிக்கும்.

தேகப் பயிற்சிக்காக, (டென்னிஸ், கிரிக்கட், பிலியாட் முதலிய) விளையாடுகிறவர்களில் புதன் மேடு அமையப் பெறின், விளையாட்டில் கீர்த்தியுடையவர் என்பதைக் குறிக் கும். வக்கீல்களின் விரல்களில் புதன்மேடிருப்பின், கஷ் டப்பட்டு வழக்காடுவதில் பின்வாங்க மாட்டார்கள்.

புதன் மேடு இருந்தால், பொதுவாய் உற்சாகமாயும், விநோதமாகவும், வேடிக்கையாயும் பேசுந் திறமையைக் குறிக்கும். இன்னும் சிறு வயதிலேயே விவாகம் செய்து கொள்ள இச்சைப்படுவர். குழந்தைகளிடத்தில் மிகுந்தபிரியத்தை உடையவர் என்பதைக் குறிக்கும்.

குறியொன்று மில்லாமல் அமைந்திருக்கும் புதன்மேடு படிப்படியாய் வளர்ச்சி யடையின், அமைதியையும், முடிவான எண்ணத்தையும் குறிக்கும்.

புதன் மேடு அளவுக்கு மிஞ்சியிருப்பின், நிச்சயமாய் மற்றோர்களை வஞ்சிக்கக் கூடியவர் என்பதைக் குறிக்கும். கபடியாகவும், கொள்ளையடிக்கும் எண்ணமுள்ளவர் என்பதைக் குறிக்கும். அளவுக்கு மிஞ்சிய புதன் மேடு உடையவர், சோதிடம் அல்லது ரேகை சாஸ்திரத்தைக் கற்றுக் கொண்டு பணம் சம்பாதிப்பதிலேயே குறிப்பா யிருப்பர். மனதில் எப்பொழுதும் கெட்ட எண்ணம் குடிகொண்டிருக்கும். மிகுந்த சந்தேகியாகவு மிருப்பர். இத்தகையோர் கரங்கள் நீளமாகவும், முருக்கி விட்டதுபோல் பிரண்டிருக்கும். விரல்கள் லகுவில் பின்னோக்கி வளையும். உள்ளங்கை மிருதுவா யிருக்கும். பெருவிரலின் முதல் அங்குலாஸ்தி நீளமா யிருக்கும்.

புதன் மேடு சூரியமேட்டின் சார்பாய் சாய்ந்திருப்பின், வித்தையில் நல்ல தேர்ச்சி என்பதைக் குறிக்கும். புதன் மேடு எதிரிடையாக மறுபக்கமாகச் சாய்ந்திருப்பின், தொழில் செய்யத்தக்க சாமர்த்திய முடையவர் என்பதைக் குறிக்கும்.

### இதர மேடுகளுடன் சமத்துவமாயின் பலிதமாகும் குணங்கள்

1. புதன் மேடு சுக்கிர மேட்டுடன் சமத்துவமாய்க் காணப்படில், ரேகைகள் பின்னப்படாதிருந்தால் பக்தி, தங்குதடையின்றி பேசும் சக்தி, ஆதரவான அன்பு, அழகான வஸ்துக்களில் ப்ரீதி இவைகளைக் குறிக்கும். ரேகைகள் பின்னப்பட்டுப் பெருவிரலின் முதல் அங்குலாஸ்தி மிகச்சிறிதாய்க் காணப்படில், அமைதி யின்மை, படபடப்பு, மனோ தடுமாற்றம் இவைகளைக் குறிக்கும்.

2. புதன் மேடு சந்திரமேட்டுடன் ஒத்திருந்தால், சாஸ்திரங்களில் அதிசயத்தையும், வருங்கால நிகழ்ச்சிகளை யூகித்

துச் சொல்லும் நுட்ப புத்தியையும் குறிக்கும். பின்னப் பட்ட கையாயிருந்தால், மோசம் செய்வதற்கான சூழ்ச்சி கள் செய்யினும் லாபத்தை யடையமாட்டார்.

3. புதன் மேடு செவ்வாய் மேட்டுடன் ஒத்திருந்தால், மகா சாமர்த்தியத்தைக் குறிக்கும். அதிசீக்கிரம் யோசனை செய்து சொல்பவர்.

## சுக்கிர மேடு

பெரு விரலுக் கடியில் அமைந்திருப்பது சுக்கிரமேடு, படத்தில் காண்க.

சுக்கிர மேடு அமையாதிருப்பின், சாரமற்ற தன்மை, உற்சாக மின்மை, உலக வாழ்க்கையில் சொற்ப புத்தி இவைகளைக் குறிக்கும்.

சுக்கிர மேடு சாமான்யமாய் அமைந்திருந்தால், களங்க மற்ற அன்பு, இரக்கம், தர்மசிந்தை, அழகான வஸ்துக்களி லும் உள்ளன்போடு செய்தவேலையிலும் வாத்சல்யம் இவை களைக் குறிப்பதோடு, முக்கியமாய் சங்கீதத்தில் பாடவும், கேட்கவும் வெகு பிரியம் என்பதையும் அறிவிக்கும்.

குரு மேடு புருஷ நிலை யென்றும், சுக்கிர மேடு ஸ்திரீ நிலை யென்றும் சொல்லவேண்டிய தாகிறது. ஏனெனில், சுக்கிரமேடு சாமானியமா யிருப்பின், ஸ்திரீ சுபாவமே அமையும்; அப்பொழுது சாரீரம் இன்பம் தருவதாகும். புருஷர்கள் கவிவாணர்களாயினும் புத்தியில் குறைந்திருக்க மாட்டார்கள்.

ஆனல், சந்திரமேடு அளவுக்கு மிஞ்சிவிடுமானல், கலை ஞானமும், சங்கீதமும் பயனற்றதாய்விடும். அதாவது, ஆசை அளவுக்கு மிஞ்சிவிடும்.

சுக்கிரமேடு அளவுக்கு மிஞ்சி அமைந்திருந்தால், ஆசை வார்த்தை சொல்லி ஏமாற்றுதல், இரக்கமற்ற தன்மை, சுகத்தை அனுபவிக்கிறதில் இஷ்டம் இவைகளைக்குறிக்கும்.

## இதர மேட்டுடன் ஒத்திருப்பதாலான குணகுணங்கள்

சுக்கிரமேடு சந்திர மேட்டுடன் ஒத்திருந்தால், காதல் வசப்பட்டவர், எல்லாம் ரகஸ்யமாய் அடக்கிக் கொள்பவர் என்பதாகும் கை ரேகைகள் ஒத்திராவிடில், இருதயரோக முண்டாகும்..

சுக்கிரமேடும் செவ்வாய் மேடும் ஒத்திருந்தால், புத்திக் கூர்மை, பொறுமை, சங்கீதத்தில் இச்சை, நடனம் இவைகளைக் குறிக்கும். இன்னும் எதையும் வசப்படுத்திக்கொள்ளும்படியான இச்சை ஜனிக்கும்.

## சந்திர மேடு

சந்திர மேட்டின் அமைப்பைப் படத்தில் பார்க்கவும்.

சந்திர மேடு காணப்படாவிடில், சங்கல்பமின்மை, அருளின்மை, படிப்பில் இச்சையின்மை இவைகளைக் குறிக்கும்.

சாமான்யமாய் அமைந்திருந்தால்—அதாவது, செவ்வாய் மேட்டைவிட மணிக்கட்டோரம் மேடேறியிருந்தால்,—அற்புதமான குணங்களைக் குறிக்கும். திருப்தியான சங்கல்பம் உண்டாகும். கற்பு, கவியில் இச்சை, புதுவிதமான சங்கீதப் பயிற்சி இவைகள் அமையும். யாத்திரையில் பிரியமுண்டாகும். ஒருவருக்கு சந்திரமேடு நடுத்தரமாயிருப்பின், தெய்வீக உணர்ச்சி யிருக்கும். ஆனால் அடிக்கடி சொப்பனங்களினால் தொந்தர வுண்டாகும். மனச்சோர்வு கொடுக்கும். வழக்கமற்ற வகையில் விவாகம் செய்துகொள்வர். மனத்தில் ஒருவித சோம்ப லுடையவர். ஆனால், செய்கையில் பின்வாங்கார். இதர ரேகைகள் குற்றமின்றி அமைந்துவிடில், மேற்சொன்ன குறைகள் மறைந்துபோம். விரல்கள் குட்டையா யிருத்தல், விரல் முடிப்பு இவைகள் எதிரிடையாகும்.

சந்திர மேட்டில் மத்தியில் கூர்மைப்படுமாயின், சரீரத்தில் உண்டான பாகங்களின் கஷ்டத்தைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டுக் கருகில், சந்திர மேடு அதிகப்படுமாயின், பித்தம், முடக்கு வாதம் இவைகளைக் குறிக்கும். சந்திரமேடு அளவுக்கு மிஞ்சி அமைந்தால், பயனற்ற சங்கல்பம், சபல சித்தம், விசனம், சந்தேகம், பித்தனாகும் தன்மை இவைகளைக் குறிக்கும்.

சந்திர மேடு ஒடுக்கமாயும், நீளமா யுமிருந்தால், அதாவது கையின் ஒருபுறமாய் அமைந்தால், வெறுப்பு, சிந்தனையில் பிரியம், செய்கையில் அழுத்த மில்லாமை இவைகளைக் குறிக்கும்.

சந்திர மேடும் செவ்வாய் மேடும் ஒத்திருந்தால், சமுத்திர யாத்திரையில் இச்சை என்பதைக் குறிக்கும்.

## செவ்வாய் மேடு

சந்திர மேட்டுக்கும் புதன் மேட்டுக்கும் மத்தியில் அமைந்திருப்பது செவ்வாய் மேடு என்பதாகும். இதன் கிளையொன்று குரு மேட்டுக்கும் சுக்கிர மேட்டுக்கும் நடுவில் அமைந்திருக்கிறது. இப்பொழுது புதன் மேட்டுக் கருகிலிருப்பதைப் பற்றிச் சொல்லுவோம்.

செவ்வாய் மேடு தோன்ருதிருப்பின், வஞ்சகத் தன்மையை முக்கியமாய்க் குறிக்கும்.

நடுத்தரமாய் அமைந்தால், தைரியம், தன்னம்பிக்கை, தாராள சிந்தை இவைகளைக் குறிக்கும். பெருவிரலின் முதல் அங்குலாஸ்தி சிறிதாயிருப்பின், புஜபல பராக்கிரமம், வீரத்தன்மை இவைகளைக் குறிக்கும். சொற்ப முரட்டு சுபாவம் இருந்தபோதிலும், நற்குணம் பொலிந்து நிற்கும். இத்தகையோர் அன்புள்ள நண்பர்களை வசப்படுத்திக்கொள்வர், கை முரடாகவும், விரல்கள் சதுரமாகவு மிருக்கும்.

செவ்வாய் மேடு அளவுக்கு மிஞ்சி யிருந்தால், முரட்டுத்தனம், ரத்தவெறி, மிருகத் தன்மை இவைகளைக் குறிக்கும்.

இதுவரை கையிலுள்ள கிரகங்களைப் பற்றிச் சொன்னேம். ஜோஸ்யத்தில் எப்படி கிரகங்களின் நிலையறியப்படுகிறதோ, அவ்வாறே இங்கே கையில் கவனிக்க வேண்டும். கிரக மேடுகளில் சில குறிகள் காணப்படும். அவை பல வகைப் பட்டதாகும். முக்கியமான ரேகைகளையும், கிரக மேடுகளிலுள்ள சின்னஞ் சிறிதாய்த் தோன்றும் அடையாளங்களைக் கீழே குறிப்பிடுகிறேம். இந்த ரேகைகளின் பெயர்கள் அடிக்கடி இனிவரும் தொகுதிகளில் குறிக்கப்படுமாதலால், வாசகர்கள் கவனிக்க வேண்டியது.

---

## 7-வது அத்தியாயம்

### சாதாரணமாய் கையில் காணப்படும் ரேகைகள்




1. ஆயுள் ரேகை
2. இருதய ரேகை
3. புத்தி ரேகை
4. விதிரேகை அல்லது அதிர்ஷ்டரேகை—(சனி ரேகை)
5, சூரியரேகை, தீட்சணியரேகை—(தன ரேகை)

6. கங்கண ரேகை
7. ஆரோக்கிய ரேகை
8. பால் ரேகை (மூளையின் நிலைமை)
9. சுக்கிர மண்டலம்
10. ஐக்கிய (விவாக) ரேகை
11. அருள் ரேகை (சந்திர ரேகை)

மேற் கண்ட ரேகைகளின் பெயர்கள் காலத்தை அனு சரித்துக் குறிப்பிட்ட தாகும்.

சாமுத்திரிகா லக்ஷணத்தைப் பற்றிப் பேசும் நூல் களில் தற்காலம் வழங்கப்படும் பெயர்களா யில்லை ஆகை யால், ஆங்கில முறையை அனுசரித்து எழுதப்பட் டிருக் கிறது. வங்கதேசத்தில் இங்கிலீஷ் மொழி பெயர்ப்பில் சொல்லப்படுவதிலும் வித்தியாச மில்லை. சொல்லில் பேதங் காணப்பட்டாலும் ரேகையில் வித்தியாச மிராது.

ஆங்காங்கு கையில் தோன்றும் சிறு ரேகைகள் இரண்டு விதமாகப் பிரித்து பாகுபடுத்திச் சொல்லுகிறோம்.

1. கிரக மேடுகளில் காணப்படும் குறிகளும் ரேகை களும்.

2. செல்வாக்கு ரேகை: இது சுக்கிலமேட்டில் அல்லது ஆயுள் ரேகையி லிருந்து உற்பத்தி. சுக்கிர மேட்டிலுள்ள செல்வாக்கு ரேகைகளை வேதனை—தொந்தரவுக்கான— ரேகையெனச் சில சோதிடர் கூறுவது முண்டு; ஆனால் அது தவறு.

3. அவசர ரேகைகள்: இவை ஆங்காங்கு தீவிர எண் ணத்துக்கு ஏற்றவாறு தோன்றி மறையும். சிலர் அருள் ரேகை என்று குறிப்பிடுவது குற்றமாகும். இப்பொழுது கிரக மேடுகளில் காணப்படும் குறிகளைக் கவனிப்போம்.

## குரு மேடு

நீளமாய் ஒருகோடு—ரேகை ஜெயத்தைக் குறிக்கிறது.

அநேகசிறு ரேகைக ளிருந்தால், முயற்சி மிக்க விசேஷமாயினும் அபஜெய மென்பதாம்.

குறுக்கிட்ட ரேகைக ளிருந்தால், ஒழுக்க மற்றவர்கள் என்பதாகும்.

ஒரு புள்ளி காணப்படில், அதிர்ஷ்ட நாசம், கௌரவத் தாழ்வு என்பதாகும்.

சூலம்போன்ற கிராஸ் காணப்படில், மனமொத்த விவாகத்தைக் குறிக்கும்.

நக்ஷத்திரக் குறி காணப்படில், எண்ணம்போல் திருப்தியான வாழ்வு, முற்றுப்பெற்ற ஆசை என்பதாகும்.

கிராசும், புள்ளியு மிருந்தால், பிரபலமான விவாகம்.

ரேகை சதுரமாயிருப்பின், எண்ணம் பெரியதாயினும் நிதான வாழ்க்கையைக் குறிக்கும்.

ரேகை முக்கோணமாகக் காணப்படில், சாதுர்யம், இராஜீய விஷயத்தில் கடுமை, தீவிரயோசனை முதலானவைகளைக் குறிக்கும்.

ரேகை அகன்று பட்டையா யிருந்தால், சந்தேகம், மனக்கோட்டை இவைகளைக் குறிப்பதாகும்.

## குரு மேடும் இதர கிரகங்களும்

குருமேட்டில் காணப்படுகிற குறிகள் இதர கிரகமேட்டிலும் சமத்துவமாக இருக்குமாயின், கீழ்க் கண்டவாறு பலன்களை அறிய வேண்டும்.

குரு :—நல்லொழுக்கத்தையும், நற்குணத்தையும் குறிக்கும்.

சனி :—எச்சரிக்கையான புத்தி, ஜோஸ்யத்தில் ப்ரீதி.

சூரியன் :—வாக்கு சாதுரியம், சித்திரவேலையில் இச்சை.

புதன் :—நிர்வாகத் திறமை, அதிகார சக்தி.

சுக்கிரன் :—தன்னடக்கம், அழுத்தமான அன்பு.

சந்திரன் :—மனப்போக்கு, வழி தவறிய சிந்தை.

செவ்வாய் :—யுத்த வீரருக்குரிய புத்தி தீக்ஷண்யம்.

## சனி மேட்டிலுள்ள விவரங்கள்

நீண்ட தனித்த ரேகை சனி மேட்டில் ஏறியிருந்தால், பெருத்த அதிர்ஷ்டசாலி என்பதாகும். அநேக ரேகைகள் காணப்படில், அவ்வளவு துரதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

பல சிறு ரேகைகள் குறுக்கிட்ட வண்ணம் குருமேட்டை நோக்கிச் சென்றிருந்தால், படிப்படியாய்ப் பிரஜைகளில் முதன்மையாகும் கீர்த்தியைப் பெறுவார் என்பதைக் குறிக்கும்.

சூலம் போன்ற (கிராஸ்) குறிகள் பலமாய்க் காணப் படில், நெஞ்சில் காயமுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

சனி மேட்டில் ஒற்றைப் புள்ளியிருந்தால், அது துர்க் குறியாகும். இதன் விவரத்தை புத்தி அல்லது விதிரேகையி லிருந்து தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒற்றைச் சூலக்குறி (கிராஸ்) காணப்படில், மலட்டுத் தன்மை சாஸ்திர (ரேகை, ஜோஸ்யம், மந்திரம், வேதாந்த சித்தாந்த) ஞானத்தை துர்ப்பிரயோகம் செய்தலைக் குறிப்பதாகும்.

நக்ஷத்திரக் குறி காணப்படில், கெடுதலைக் குறிக்கும்— விரோதத் தன்மையில் எதிரியைக் கொலைசெய்து தன்னை யும் மாய்ப்பர் என்பதாகும்.

சதுரக் குறி எவ்வித ஆபத்திலிருந்தும் தப்பித்துக் கொள்வார் என்பதைக் குறிக்கும்.

சதுரக் குறியின் மூலையில் சிவப்பு புள்ளிகளிருந்தால், நெருப்பிலிருந்தும் காப்பாற்றப் படுவார்.

வட்டக் குறி காணப்படில், அபிவிர்த்திக்கான நல்ல அடையாளம். ஆனால், இது காண்பதரிது.

முக்கோணம் காணப்படில், முக்கியமாய் ஜோஸ்யம், வேதசாஸ்திரத்தில் இச்சையுள்ளதென்பதாகும். மூன்று வது அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியுமிருந்தால், சிக்கலான ஆபத்தென்பதை அறிவிக்கும்.

மூன்றும் பிறைபோன்ற வளைவான ரேகை காணப் படில், வாழ்நாளில் விசேஷித்த நன்மை கிடைப்பதரிது என்பதாகும்.

சனி மேட்டில் காணப்படும் ரேகைக் குறிகள் இதர கிரக மேடுகளிலும் சமத்துவமாக இருக்குமானல், கீழ்க் கண்டவாறு பலன்களை அறிய வேண்டும்.

சனி :—வேதாந்த சித்தாந்த முதலிய சாஸ்திரங்களில் பக்தி சிரத்தையோடுங் கூடிய ஆராய்ச்சி,

சூரியன்:-சித்திர வேலையில் ப்ரீதி, கவித்வமாய் பேசுதல்.

புதன்:—கணித-வான சாஸ்திரத்தில் தேர்ச்சி, காரியாம்சமான சாஸ்திர ஆராய்ச்சி.

சுக்கிரன்:—கலக்கமான அன்பு, மனதைப் புண்படுத்திக் கொள்ளும் இயல்பு.

செவ்வாய்:—தத்துவ ஞானத்தில் அபாரபுத்தி, தர்க்க சாஸ்திர ஆராய்ச்சி, பண்டைக் காலத்தையும் தற்காலத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பவர்.

### சூரிய மேட்டிலுள்ள குறிகள்

சூரிய மேட்டில் அழுத்தமான நீண்ட ரேகை காணப்படில், செல்வமும் கீர்த்தியும் உண்டாகும்.

இரண்டு ரேகைகள் காணப்படில், மகாபுத்திமானுயிருந்தும் காரியசித்தி குறைவு என்பதைக் குறிக்கும்.

அநேக சிறு கோடுகள் காணப்படில், சாஸ்திர ஞானமிருந்தும் அனுகூலப்படா தென்பதாகும். வர்ணிப்பில் புத்தி செல்லும். தடுமாற்றம், சித்தியாவதில் தடை.

பலவித சூலக்குறிகள் (பின்னலாக) காணப்படில், கைகளிலொன்றில் காயமுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

ஒற்றை சூலக்குறியும் ஒரு நீண்ட ரேகையும் இருந்தால், படிப்படியாய் நல்ல அதிர்ஷ்ட முண்டாகும் என்பதாம்.

சூரிய மேட்டு ரேகையின்றி, சூலம் மாத்திரம் தோன்றியிருக்குமாயின், ஒழுங்கான வழியில் சங்கடத்தைக்குறிக்கும் ஒரு ரேகையோடு நக்ஷத்திரக் குறி இருந்தால், கஷ்டப்பட்டு கௌரவம் அடைவதைக் குறிக்கும். புத்தி தீக்ஷணியமுடையவர்.

நக்ஷத்திரக் குறி, ஒற்றை ரேகை, பல சிறு ரேகைகள் அமையப் பெற்றிருந்தால், தங்குதடையின்றிச் செல்வப் பெருக்குண்டாகும் என்பதைத் தெரிவிக்கும்.

ஒரு நக்ஷத்திரக்குறி மாத்திர மிருந்தால், பல கஷ்டங்களுக்குப் பிறகு கீர்த்தி உண்டாவதை அறிவிக்கும். வாழ்நாளின் பிந்திய காலத்தில் திரண்ட செல்வம் உண்டாவதாகும்.

சதுரக்குறி யிருந்தால், அடக்கமான தொழிற்குரிய சாமர்த்தியத்தைக் குறிக்கும். வட்டக்குறி யிருந்தால், அபரிமிதமான கீர்த்தி.

முக்கோணக் குறி காணப்படில், சித்திர வித்தையில் ஜெயம்.

பிறை வட்டமான குறி காணப்படில், புத்தி யின்மை, வெறும் டம்பம், வீண் பேச்சால் பைத்திய மென்று சொல்லவரும்.

## இதர கிரகங்களின் குறிகள் சத்துவமானு லுண்டாகும் பலன்கள்

சூரியன்:—வித்தையின் மேன்மை, திரண்ட செல்வம், கீர்த்தி.

சனி:—வித்வத் தன்மை.

குரு:—வாக்கு சாதுர்யம், பெருந்தன்மை, பெரு நோக்கான விவகாரம்.

புதன்:—கீர்த்திக்கான ஞானம்.

சுக்கிரன்:—கவி கட்டுந் திறமை.

சந்திரன்:—ஆராய்ச்சியில் அளவுக்கு மிஞ்சிய மனக் கோட்டை.

செவ்வாய்:—சித்திர வேலைக்காரர், வர்ணம் பூசுவோர், தளகர்த்தர் இத்தகையோரிடம் ரேகை ஒத்திருக்கும்.

## புதன் மேட்டிலுள்ள குறிகள்

தனித்த ஒரு ரேகை யிருந்தால், எதிர்பாராத நல்ல அதிர்ஷ்டம். செல்வம் கிடைக்கும்.

சூலக் குறியோடு ஒரு ரேகை சூரிய மேட்டை நோக்கிச் சென்றால், கொடிய விரோதிகளை அடக்குவதற்கு மந்திர சக்தியை உபயோகிப்பவ ராவர்.

தனித்த ரேகை சூலமாக ஆரம்பித்து, தீவு மத்தியில் அமையப்பெற்று, சூரியரேகையில் குறிக்கிடுமாயின், துரதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

அநேக சிறு ரேகைகள் முன்னும் பின்னுமாய்க் காணப்படில், சுறுசுறுப்பு; விஞ்ஞான சாஸ்திரியாய் விளங்குவர்.

பல கலப்புள்ள ரேகைகள் இருதய ரேகையை நோக்கிச் சென்றிருந்தால், தாராளமான கொள்கையோடு பணத்தைச் செலவிடுபவர் என்பதாகும்.

அநேக சிறு ரேகைகளுள் சந்திர மேடு உன்னதமாயிருப்பின், வைத்திய சாஸ்திரத்தைப் படிப்பவர், சகல நோய்க்குரிய காரணங்களை அறிபவர். முக்கியமாய் மேற்கண்ட குறிகள் வைத்தியர்களின் கையில் காணப்படுவதாகும்.

அநேக சிறு ரேகைகளுடன் சந்திரமேடு உன்னதமாயிருக்க ஒரு ஸ்திரீயின் கையில் காணப்படுமாயின், நிச்சயமாய் வைத்தியரை (டாக்டரை) விவாகம் செய்துகொள்வர் என்பதைக் குறிக்கும்.

ஸ்திரீயின் கையில் அநேக குட்டையான ரேகைகள் காணப்படில், வழக்கமான துஷ்டத்தனத்தை வெளிப்படுத்தும்.

குறுக்கு நெடுக்குமான ரேகைகள் புதன்மேட்டிலிருந்தால், காலில் காயங்களேற்படும்.

சுண்டுவிரலுக் கடியில் அழுத்தமானரேகை வளைந்து புறங்கையை நோக்கிச் செல்லும். இது புதனோடு சம்பந்தப்படாது. ஐக்கியம் அல்லது விவாகரேகை என்று சொல்லப்படும். இதைப் பற்றிப் பிரத்தியேகமாய் எழுதப்படும்.

புதன் மேட்டில் ஒரு புள்ளி இருந்தால், தொழிலில் நஷ்டம் என்பதைக் குறிக்கும்.

சூலம் மாத்திர மிருந்தால், திருட்டுப் புத்தியைக் குறிக்கும்.

நக்ஷத்திரப் புள்ளி இருந்தால், மோசக்காரன் என்பதைக் குறிக்கும்.

சதுரம் காணப்படில், பெரிய பணக்கஷ்டத்தி லிருந்து தப்புவர்.

வட்டம் இருந்தால், ஜலத்தில் கடு மரணம் சம்பவிக்குமென்பதாகும்.

முக்கோண மிருந்தால், இராஜீய விஷயங்களில் ஊக்க முள்ளவ ரென்பதாகும்.

ஏணிபோன்று குறுக்கு நெடுக்குமான கூட்டமுள்ள ரேகை காணப்படில், கொள்ளையடிக்கும் தொழிலில் ஈடு பட்டு, அவ்வழியிலேயே மரணம் சம்பவிக்கு மென்பதாம்.

### இதர கிரகங்களின் சமத்துவமான குறி காணப்படில் உண்டாகும் பலன்கள்

புதன் :—நலந்தீது நன்குணர்பவர்.

குரு :—விஞ்ஞான சாஸ்திரத்தில் வெகு கீர்த்தி.

சனி :—மகா புத்திமான். மனக்கவலை. இதர ரேகைகள் நல் வழியில் இல்லையெனில், சாஸ்திரங்களையும், விஞ்ஞானத் தையும் துஷ் பிரயோகம் செய்பவராவர்.

சூரியன் :—வான சாஸ்திரத்தில் தீவிர புத்தி, தத்துவ ஞானம், கடவுளின் சிருஷ்டியில் ஆச்சரியப்படுபவர். இதர ரேகை ஒழுங்காய் அமைந்திராவிடில், கஷ்டப்பட்டுத் தேடிய பொருளை அபகரிப்பவர் என்பதாகும். இன்னும் வெட்கங் கெட்டவேலை செய்பவர்.

சுக்கிரன் :—புத்திசாலித்தனமான வாழ்க்கை, வருங் காலத்தைப் பற்றி நன்கு சிந்திப்பவர்.

சந்திரன் :—பெருஞ் சூழ்ச்சி, தானுங் கெடுவதோடு, சேர்ந்தோரும் வஞ்சிக்கப்படுவர்.

செவ்வாய் :—முரட்டு சுபாவம், திருடுந் தன்மை, வழி பறிப்போன், தூர்த்தனுகும்.

### சுக்கிர மேட்டிலுள்ள குறிகள்

இரண்டு மூன்று ரேகைகள் காணப்படில், விசுவாச மின்மையைக் குறிக்கும்.

எண்ணிக்கையற்ற ரேகைகள், குறுக்கிட்ட ரேகைக ளோடு மிருந்தால், அளவான ஆசையைக் குறிக்கின்றன. அடக்கமுடையவ ரென்றும் சொல்லத்தகும். மேற்கண்ட ரேகைகள் கடினமான கையில் அமைந்திருந்தால், மட்டற்ற ஆசையால் அவதிப்படுவர் என்பதாகும்.

சுக்கிர மேட்டில் ஒரு புள்ளி காணப்படில், ஆசை வழிப்பட்டதால், அசாத்திய நோய்க் குட்படுவர் என்பதாம்.

சூலம் காணப்படில், அன்பின் பிரிவினையால் துக்கம் என்பதைக் குறிக்கும்.

நக்ஷத்திரம் காணப்படில், (ஸ்திரீ புருஷர்) அன்பினு லுண்டாகும் துர் அதிர்ஷ்டம்.

பெருவிரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் நக்ஷத் திரப் புள்ளி யிருப்பின், விவாகத்தினுல் வாழ்நாளெல்லாம் தடைபட்டு நிற்கு மென்பதாகும்.

சதுரம் காணப்படில், ஜெயில்வாசம் என்பதைக் குறிக்கும்.

வட்டமான ரேகை காணப்படில், சில சமயத்தில் கடு நோயுண்டாகு மென்பதைக் குறிக்கும்.

முக்கோண மிருந்தால், ஐக்கிய வழியின் மிக்க சிந்தனை யுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

ஏணிபோன்று அல்லது சதுரமாய் குறுக்கு மருக்கான ரேகைக் கூட்ட மிருந்தால், ஆரோக்கிய மின்றி மெலிந் திருப்பர். அதாவது, உடலொட்டிய நோயைக் குறிக்கும்.

## இதர கிரகங்களுடன் முக்கிய ரேகை சமத்துவமாயின் உண்டாகும் பலன்

**சுக்கிரன் :**—முக்குணத்தில் ஒன்று எப்பொழுதும் அதீ தப் பட்டிருக்கும்.

**குரு :**—முகஸ்துதி செய்பவரிடத்தில் அன்பு செலுத்து பவர்.

**புதன் :**—பொறாமை ; வஞ்சகம் ; ஒழுக்கமற்ற வழியில் ஆசைப்படுவர்.

**சூரியன் :**—சாதுர்யமான புத்தி ; காரிய சித்திக்கான அன்பு.

**சந்திரன் :**—துர்க்குறி.

**செவ்வாய் :**—ஆசைப்பட்ட வழிகளில் முரட்டு சுபாவத் தைக் காட்டுபவர். மிருகத்தைப்போன்ற மூர்க்க குண முடையவராவர்.

## சுக்கிர மேட்டைப்பற்றிய குறிப்புகள்

சுக்கிரமேடு ஒருவர் தம் மனோபீஷ்டத்தை எடுத்துக் காட்டும்; விரோத மூண்டானுல் குறிப்பிடும். சுக்கிர மேட்டிலுள்ள ஒரு ரேகை ஆயுள் ரேகையைத் தாண்டி, சூரிய ரேகையைத் தொடுமாயின், அந்தக் காலத்தில் தொழில் வியாபாரத்தில் மிகுந்த லாபம் உண்டாகும்.

இந்திய ரேகை சாஸ்திரிகள் சுக்கிரமேட்டை விசேஷமாய்க் குறிப்பிட் டிருக்கிறார்கள். வருங் காலத்தில் செய்வதாகத் தீர்மானிக்கும்போ தெல்லாம் சுக்கிர மேட்டில் ரேகை காணப்படும். எண்ணிக்கையற்ற எண்ணங்கள் உதிக்கும்போதும் அநேக ரேகைகள் தோன்றும். கைவிடநேர்ந்தபோது ரேகைகள் மறையும்.

இராஜீய தேசீய விவகாரங்களில் தீவிர புத்தியுள்ளோருக்கு சுக்கிர மேட்டில் அளவு சங்கை யின்றி ரேகைகள் உதித்து மறையும். இராஜதந்திரிகள் காரிய சித்திக்குக் காலத்தை எதிர்பார்ப்பவ ராதலால், அநேக ரேகைகள் தோன்றினுலும் சீக்கிரத்தில் மறையாது.

இராஜ சுகபோகத்தில் இருப்போருக்கு, சுக்கிரமேட்டில் அபூர்வக் குறிகள் தோன்றும் என்று சொல்லப்படுகிறது. அதாவது குடை, சங்கு இவைபோன்ற குறிகள் தோன்றும். சாமானிய மனிதருக்கு இருக்குமானுல், வசீகர மான இராஜ தேஜஸிருக்கும். நாடக மேடைகளிலாவது இராஜவேடம் பூண்டு நடிப்பர்.

சங்கு, குடை இந்த இரண்டும் இராஜச் சின்னங்கள்; அபூர்வக் குறிகள், க்ஷிரோ என்ற ஆங்கில ரேகை சாஸ்திரி பலதேச மன்னர்களின் கையைப் பார்த்துப் பலன் சொன்னதாக எழுதியிருந்தாலும், மேற்கண்ட இரண்டு குறிக ளிருந்ததாக எழுதவில்லை.

சுக்கிர மேட்டிலுள்ள ரேகை ஆயுள் ரேகையைத் தொடுமாயின், விரோதியினு லுண்டாகும் தொந்தரவைக் குறிக்கும். இது அனுபவத்துக்கு ஒத்திருந்தும், க்ஷிரோ சான்ஸிச் முதலானவர்கள் குறிப்பிடவில்லை.

சுக்கிர மேட்டிலுள்ள ஒரு ரேகை மேல் நோக்கி வளர்ந்து குரு மேட்டை நோக்கிச் சென்றால், குறிப்பிட்ட காரியத்தில் தீவிரமாய் வேலை செய்துவருவதைக் குறிக்கும். சித்திநிச்சயம்.

இங்கிலாந்தில் பிரதம மந்திரியாய்விளங்கிய கிளாட்சன் கையின் சுக்கிர மேட்டில் குறிப்பிட்ட அறிய முடியாதபடி மயிர்க்கால்கள் போன்ற எண்ணிக்கை யற்ற ரேகைகள் தோன்றி யிருந்தன.

உண்டுஉறங்குவதையே முதன்மையாய் வைத்துக்காலங் கழிப்பவருக்கு மூளை வேலை செய்யாததால், சுக்கிரமேட்டில் ரேகை உண்டாவதில்லை. உலக விவகாரத்தைவிட்டுப் பக்தி அல்லது பாரமார்த்திகத்தி லிருப்போருக்கும் அப்படியே.

சந்திர மேட்டிலுள்ள குறிகள்

ஒரு தனித்த ரேகை யிருப்பது அவ்வளவு நலமன்று. கெடுதியைக் குறிக்கும்.

ஒத்தரேகை மற்றொரு ரேகையால் குறுக்கிட்டிருந்தால், வாயு, பிடிப்பு முதலிய நோய்களைக் குறிக்கும்.

அநேக ரேகைக ளிருந்தால், அதீதமான நோக்கம், ஆகாசக்கோட்டை, புத்தியில்லாச் செய்கை, காதலில் அழுத்தம்.

அநேக ரேகைகள் குறுக்கு மருக்குமாய் ஏணியைப் போல அமைந்திருந்தால், தேகத்தில் காய முண்டாகும் என் பதைக் குறிக்கும். சந்திர மேட்டின் அடியில், ஒரு ரேகை ஆரம்பமாகி ஆயுள் ரேகையைத் தொடுமானால், கடல் யாத் திரை என்பதாகும். புள்ளி காணப்படில், நரம்பு சம்பந்த மான நோயைக் குறிக்கும். ஸ்திரீகளுக்கு மயக்க மென்ப தாகும்.

சூலக்குறி யிருந்தால், எடுத்ததற்கெல்லாம் சந்தேகம், சூலக்குறி மிகப் பெரிதாயிருப்பின், வஞ்சகத் தன்மையைக் குறிக்கும்.

நக்ஷத்திரக்குறி யிருந்தால், வியாகுலம். அன்னார் அபாயத் துக்குட்பட்டு ஜலத்தில் மூழ்கிமாய்வர் என்பதைக் குறிக்கும்.

சந்திர மேட்டின் மத்தியில் ஒரு நக்ஷத்திரக்குறியும் புத்தி ரேகை சந்திர மேட்டில் வளைந்திருந்தால், ஜலத்தில் மூழ்கித் தற்கொலை செய்துகொள்வர் என்பதைக்குறிக்கும்.

நக்ஷத்திரத்துடன் ஒரு ரேகை நீண்டு ஆயுள் ரேகையைத் தொட்டுக்கொண் டிருந்தால், அபாயமான மயக்கம் அடிக்கடி தோன்றுமென்பதாகும்.

சதுரமான ரேகை யிருந்தால், தக்க நியாயத்துடன் யுக்தி செய்பவர் என்பதாகும்.

வட்டமா யிருப்பின், மரணுபாயம் ஜலத்தால்சம்பவிக்கும்.

முக்கோணம் காணப்படில், பெரிய தொழில்களுக்கும், பெருத்த விவகாரங்களுக்கும் புத்தியை உபயோகிப்பவர் என்பதாகும்.

சிக்கலான சிறு ரேகைக் கூட்டம் கலந்து காணப்படில், அதிருப்தி, வியாகூலம் இவைகளைக் குறிக்கும்.

## இதர கிரகங்களுடன் ரேகைக்குறி சமத்துவமாயின் உண்டாகும் பலன்

சந்திரன்:—களங்கமற்ற எண்ணம், தவருன கொள்கை.

குரு:—மனோராஜ்யம் செய்வதில் மகாவல்லமை யுள்ளவர், உயர் பதவியி லிருப்பவர்.

சனி:—தெய்வபக்தி - பிரண்ட புத்தி அதாவது, அரைப் பைத்தியம்.

சூரியன்:—கவி கட்டுவதில் கலா வல்லபன்.

புதன்:—மார்க்கட்டு நிலவரத்தை அனுவசியமாய் அதிகப்படுத்திப் பணவிரய முண்டாக்கிக் கொள்வர்.

சுக்கிரன்:—நூதனப் பொருளைக் கண்டு பிடித்தல்.

செவ்வாய்:—மூளைக் கொதிப்பால் ஜுரம், புத்தி தடுமாறும்.

## செவ்வாய் மேட்டிலுள்ள குறிகள்

இந்த செவ்வாய்மேடு புதன் மேட்டுக்கும் சந்திர மேட்டுக்கும் மத்திய பாகமாகும்.

தனித்த ஒரு ரேகை காணப்படில், தைரியம் வீரத்தன்மை இவைகளைக் குறிக்கும்.

அநேக சிறு ரேகைக ளிருந்தால், முரட்டுத்தனம், வைரி. மூர்க்கத்தனமான நேசம், மேலும் காரியசித்திக்கு விரோதப் பான்மை யுடையதாகும்.

ஏணியைப் போன்ற குறுக்கு மருக்கானதாயிருந்தால், மூலாதாரமான அங்கத்தில் ரணமுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

ஒற்றைப் புள்ளி சண்டை செய்வதினு லுண்டாகும் ரணத்தைக் குறிக்கும்.

சூலக்குறி யிருப்பின், சச்சரவினுல் மனக்கவலை யுண்டாகு மென்பதைக் குறிக்கும்.

நக்ஷத்திரக்குறி யிருந்தால், மூர்க்கமான குணத்தா லுண்டாகும் கொலைப்பாதகத் தன்மையைக் குறிக்கும்.

சதுரக்குறி யிருந்தால், காரணங் கண்டு கொடிய கோபக் குணமுடையவராகு மென்பதாகும்.

வட்டக்குறி :—இஃது அபூர்வம். இருந்தால் துர்க்குறியாம்.

முக்கோணம் :—பட்டாளத்தை நிர்வகிக்கும் குணம் உடையவர்.

ஏணிக்குறியிருந்தால், மூர்க்கத்தனத்தால் பிராணுபாயம், மரணம் சம்பவிக்கு மென்பதாம்.

### இதர கிரகங்களுடன் ரேகைக்குறி ஒத்திருந்நால் உண்டாகும் பலன்கள்

செவ்வாய் :—சமயோசிதமான குண முண்டாகும்.

குரு :—தேனெழுகும் சொல்லுடையவர். கீர்த்தி தரும் அலங்கார அழகில் மயக்க முடையவர்.

சனி:—முன்பின் யோசனையின்றி, ரத்தக் கொதிப்பான கோப முண்டாகும். எதிரியை மாய்க்கும் மூர்க்கருண முண்டாகும். கைதிகள் கையில் அத்தகைய ரேகை அமையும்.

சூரியன் :—குழந்தைப் புத்தி. அசடு. அழகான வஸ்திரத்தில் ரம்மியம்.

புதன் :—நேசத்தில் வெற்றி, தொழிலில் வெற்றி, சூதாடுவோர் கையிலும் அமையும்.

சுக்கிரன் :—நேசத்தில் கொடுமை.

சந்திரன் :—புத்தியின் தடுமாற்றம்; மாருட்டம்.

# 8-வது அத்தியாயம்

## ஆயுள் ரேகை







இதுவரை சாமான்யமான சிறுரேகைகளைப் பற்றியும், கிரகங்களின் நிலைமையைப் பற்றியும் விரிவாய் விவரித்தோம். இப்பொழுது முதன்மையான ஆயுள் ரேகையை வாசகர்கள் முக்கியமாய்க் கவனித்துப் பார்க்க வேண்டும். இதற்கு விசேஷ அனுபவஞானம் தேவையில்லை. சுலபமாகவே உண்மை நிலையை அறிந்துகொள்ளலாம்.

இதுவரை ரேகை சாஸ்திரத்தைப்பற்றி ஆராய்ச்சி செய்த நூல்களில் கூம்ட் ஜெர்மெயின் என்னும் தீர்க்கதரிசி எழுதிய அனுபவ நூலும் ஒன்றாகும். பதினைந்தாம் நூற்றாண்டு முதல் நாளதுவரை இதரநாடுகளில் பல பாஷைகளிலும்—அதாவது: லாடின், பிரஞ்சு, இத்தாலியன், ஜெர்மன், இங்கிலீஷ் முதலிய பாஷைகளிலுள்ள ரேகை சாஸ்திரங்களையெல்லாம் ஆராய்ச்சி செய்வதில் தமது ஆயுள் காலத்தை யெல்லாம் செலவிட்டுள்ளார். இத்தகைய பல

நூல்களையும் ஞாபகத்தில் வைத்துச் சீர் தூக்கிப் பார்த்துள்ள விஷயங்களையே தெரிவிக்கின்றோம். இனி வரும் விஷயங்கள் சிக்கலா யிருப்பதால், முன்பின் யோசனை செய்து நிதானிக்க வேண்டும். இதை தீர யோசித்தே சுலபமாய்த் தெரிந்து கொள்ளும்படி ஆயுள் பாகத்தை நான்கு விதமாய்க் கீழ்க்கண்டவாறு பிரித்திருக்கிறோம்:—

1. ஆயுள் ரேகையின்நிறம், அகலம், நீளம், அமைப்பு, உற்பத்தி, முடிவின் எல்லை முதலியவை.

2. ஆயுள் ரேகைக்குச் சம்பந்தப்பட்ட இதர ரேகைகள்.

3. கவை, கிளைகள், மேல்நோக்கியவைகளும், கீழ்நோக்கியவைகளும்.

4. நீண்ட கிளைகள், புள்ளி, சூலம், கிராஸ், பிளவு, துண்டித்து நின்றவை.

ஆயுள் ரேகையில் முதலாவது கவனிக்க வேண்டியவை மேற்கண்டவைகளே யாகும்.

பெருவிரலின் மூன்றாவது அங்குலாஸ்தியே சுக்கிர மேடாகும். இந்த சுக்கிரமேட்டை வளைத்துக்கொண் டிருக்கும்ரேகையே ஆயுள்ரேகை. ஒவ்வொருவரும் பெருவிரலைப் பார்த்து மூன்றாவது அங்குலாஸ்தி இங்கே சொல்லுகிறபடி சரியாயிருக்கிறதா வென்று கவனித்துப் பார்க்கவேண்டும். ஆனல், அநேக ரேகை சாஸ்திரிகள் மேற்கண்டதை எழுதவில்லை. ஜெர்மெயின் என்ற மகானே வெகு விரிவாய் எழுதியிருக்கின்றனர். இவர் தத்துவ சாஸ்திரங்களை நன்கு ஆராய்ந்தவர். ஆகையால் எளிதில் விளக்கி விட்டார்.

பெருவிரலின் முதல் அங்குலாஸ்தி ஆத்மசக்தி, இரண்டாவது அங்குலாஸ்தி மூளையின் சக்தி அல்லது காரண காரியம், மூன்றாவது அங்குலாஸ்தி பந்துபோல அமைந்துள்ளது. ஜீவன், சக்தி, தர்க்கம் இம்மூன்றும் ஒன்றாய் அமைந்துளதே தேஹமன்றோ? தத்துவஞானிகள் இவைகளைத்தானே முதலில் ஆராய்கின்றனர்? இங்கே தத்துவ சாஸ்திரம் வேண்டாம். இது சொல்லாமல் அமைந்திருந்தாலும், எடுத்துக் கொண்ட விஷயத்தைப் பின்பற்றுவோம்.

## ஆயுள் ரேகையின் அமைப்பு

ஆயுள்ரேகை நீளமாயிருந்தால், நீண்ட ஆயுள்; குறுகி யிருந்தால், குறைந்த ஆயுள் என்பதாம். என்றாலும், தீர்க்க மான புத்தி ரேகையும் கெட்டியான பெருவிரலின் அங்கு லாஸ்தியும் அமைந்திருந்தால், ஆயுள் ரேகையிலிருந்து மெல்லிய ரேகை உற்பத்தியாகும். இதைப் பூதக் கண்ணாடி யால் அறியலாம்.

ஒருவர் கையைப் பார்த்ததில், முப்பதில் ஆயுள் முடி வாகக் காட்டியும், நாற்பத்தைந்தில் சந்திக்க நேர்ந்தது. இதற்குக் காரணம், பக்தி, தத்துவ ஞானம், குரு கடாக்ஷம். இது குரு மேட்டைக் கொண்டு தீர்மானிக்க வேண்டியது.

ஆயுள் ரேகை வெளுத்து அகலமாய் அமைந்திருந்தால், தேகாரோக்கிய மற்றதையும், பொறாமை, ஆர்வகுணம் முத லியவைகளையும் குறிக்கும்.

சிவப்பாயும், அழுத்தமாயு மிருந்தால், கோரமான (மிரு கத்தனமான) மனதை யுடையவர், மூர்க்கர் என்பதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை முழுதும் அழுத்தமா யிருந்தால், சிடு மூஞ்சி, முன்கோபி என்பதாகும்.

ரேகை மெல்லியதாயும், மத்தியில் தோற்றியும், தோற்றாமலும் இருந்தால், ஆயுள் காலமெல்லாம் நோய் என்பதையும், மத்தியில் ரேகை தோன்றாத நிலையில் ஒரு புள்ளி காணப்படில், திடும் சம்பவமான மரணம் என்பதை யும் குறிக்கும்.

சங்கிலி போன்ற பின்னலாய் ரேகை அமைந்திருந் தால், பலஹீனத்தைக் குறிக்கும்.

குரு மேட்டுக் கீழே ஆயுள் ரேகை சங்கிலிபோல் காணப்படில், இளமையில் நோயைக் குறிப்பதாகும்.

ஆயுள் ரேகை நீண்டு வளைந்து சந்திரமேட்டுக் கருகில் வந்து சேருமாயின், தீர்க்காயுளைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை குருமேட்டில் உற்பத்தியாயின், பெருங் கீர்த்தி, ஜெயப் பிரதாபம், பெருஞ் செல்வாக்கு இவை களைக் குறிக்கும், இஃது அபூர்வம்.

ஆயுள் ரேகை குறுகி சில கிளைகளுடன் நின்று விடுமானால், மரணம் திடீரெனச் சம்பவிக்கும் என்பதாம்.

ஆயுள் ரேகையில் சிறு ரேகை குறுக்கிட்டிருந்தால், அந்தக் காலத்தில் நோயுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

இரண்டு கையிலும் ஆயுள் ரேகையில் சிறு ரேகை குறுக்கிட்டு சுக்கிர மேட்டில் போயிருந்தால், மரணபாயமுண்டு என்பதாம்.

## ஆயுள் ரேகையோடு சம்பந்தப்பட்ட ரேகைகள்

ஆயுள் ரேகை புத்தி ரேகையைப் பின்பற்றிப் போயிருந்தால், தன்னைப்பற்றி அதிஜாக்கிரதை, காரண காரிய மறிந்து நடத்தல், சூட்சும புத்தி இவைகளைக் குறிக்கும்.

ஆயுள், புத்தி, இருதய முதலிய மூன்று ரேகைகளும் உற்பத்தியில் ஒன்றாயிருந்தால், துர் அதிர்ஷ்டம், வலிய மரணம் உண்டாம் என்பதாகும்.

ஆயுள் ரேகையும், புத்திரேகையும் உற்பத்தியில் பிரிந்தும், இடை வெளியில் மெல்லிய ரேகைகள் சம்பந்தப்பட்டுக் கொண்டிருந்தால், மூடத்தனம், தவறு செய்தலே பிரதானமாயிருக்கு மென்பதாகும்.

ஆயுள் ரேகையும், புத்தி ரேகையும், உற்பத்தியில் ஒரு நக்ஷத்திரப் புள்ளியால் சம்பந்திக்கப்பட் டிருந்தால், மலட்டுத் தன்மையைத் தெரிவிக்கும்.

ஆயுள் ரேகையில் துண்டுபட்ட ரேகை விதிரேகையைச் சார்த்திருக்குமாயின், ஆபத்து அதிர்ஷ்ட வசமாய் நீங்கும்.

## ரேகை இறுதியில் அளவை, கிளை கீரல்களின் குறிகள்

ஆயுள் ரேகையின் உற்பத்தியில் மெல்லிய ரேகைகள் கிளைகளாய் அதிர்ஷ்டமுள்ள கையில் அமைந்திருந்தால், நல்லொழுக்கத்தில் மேம்பாடுடையவ ரென்பதாகும். பின்னப்பட்ட கையில் மேற்கண்ட வாறிருந்தால், வீண்டம்பம், படாடோபம் என்பதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகையின் உற்பத்தியில் ஒரு கிளை புத்திரேகையைத் தொடுமாயின், விஸ்வாச முள்ளவ னென்பதாம்.

ஆயுள் ரேகையின் மத்தியில் ஒரு கிளை தோன்றினால், சக்திக் குறைவு என்பதாக எச்சரிக்கை செய்வதாகும்.

ஆயுள் ரேகையின் இறுதியில் அநேக சிறுகிளைகள் காணப்படில், வயோதிகத்தில் அசாத்திய வேலையில் தரித்திரம் என்பதாகும்.

ஆயுள் ரேகையின் ஒரு கிளை (கெட்டியான கையில்) சந்திர மேட்டின் அடிப்பாகத்தை நோக்கி யிருந்தால், ஓய்வின்றி உழைத்தல்; சதைப்பற்றிய கையாயிருந்து புத்தி ரேகை கீழ்நோக்கி யிருக்குமாயின், ஓய்வின்றி யிருந்தாலும், துர்குணத்தில் திருப்தி யடைந்தவ ரென்பதாம்.

இறுதியில் இரண்டாய்ப் பிரிந்து அகண்டிருக்குமாயின், பிறந்தவிடத்திலிருந்து வெகுதூரம் சென்று தரித்திரத்தில் காலகதி யடைவர் என்பதைக் குறிக்கும்.

இறுதியில் கிளைகள் அடுக்கடுக்கா யிருந்தால், பொருள் நஷ்டமும், தரித்திரமும் என்பதாகும்.

## மேல் நோக்கிய கிளைகள்

ஆயுள் ரேகையிலிருந்து ஒரு கிளை மேல் நோக்கிக் குரு மேட்டுக்குச் சென்றால், செல்வாக்கும் செல்வமு முண்டாம்.

ஆயுள் ரேகையின் கிளைகள் இதர ரேகைகளின் வழியாய் மேல் நோக்கிச் சென்றால், தானே கஷ்டப்பட்டு ஜெயம் பெறுவார் என்பதாம்.

ஆயுள் ரேகையின் கருப்பான புள்ளி காணப்பட்டு, அதிலிருந்து கிளை மேல் நோக்கினால், நோயினால் ஏற்பட்ட நரம்புகளின் பலஹீனத்தைக் குறிக்கும்.

கிளைகள் சரிவாய்க் கீழ் நோக்கினால், கஷ்ட நஷ்டமென்பதாம்.

## ஆயுள் ரேகையிலுள்ள சில குறிகள்

அநேக சிறு ரேகைகள் ஆயுள் ரேகையில் குறிக்கிட்டிருந்தால், தொடர்ச்சியான நோயைக் குறிக்கும்.

கருப்புப் புள்ளிகள் நோயைக் குறிக்கும். புள்ளி ஆழமானால், கொலை அல்லது அகஸ்மாத்தான மரணமெனச் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர்.

வட்டக் குறியும், கருப்புப் புள்ளிகளு மிருந்தால், கண் பார்வை மங்குமெனச் சொல்லப் படுகிறது.

ஆயுள் ரேகையின் உற்பத்தியில் சூலம் காணப்படில், இளமையில் அகஸ்மாத்தான அபாய மென்பதை அறிவிக்கும்.

இறுதியில் சூலக்குறி காணில், மிகுந்த கீர்த்தி செல்வாக்கிருந்தும் திடீரெனச் சரீரத் தளர்ச்சி தோன்றுமென் பதைக் குறிக்கும்.

## ஆயுள் ரேகையைப் பற்றிய சில குறிப்புகள்

(பல நூல்களின் ஆராய்ச்சி)

ஒருவருடைய ஆயுளை ஆயுள் ரேகையிலிருந்து தீர்மானித்துவிட முடியாது, இதர கிரகங்களின் அனுக்கிரகத்தால் ஆயுள் நீடிக்கும்.

ஆயுள் ரேகை சுக்கிர மேட்டை நெருங்கி மேலேறின பாவனையாய் அமைந்தால், மலட்டுத்தனம் சொல்லப்படுகிறது.

ஆயுள் ரேகை கிளை புள்ளி சூலக்குறி முதலியவைகளின்றி நன்கு அமைந்திருந்தால், நோயற்ற வாழ்வென நிச்சயமாய்ச் சொல்லத்தகும்.

ஆயுள் ரேகை சனி மேட்டுக்கு நேராயிருப்பதால், சனி மேட்டின் பலன் உரித்தாகும்.

ஆயுள் ரேகை புத்தி ரேகையின் சம்பந்த மின்றியே உற்பத்தியா யிருந்தால், புத்தி தீக்ஷணியம், தன்னம்பிக்கை இவைகளைக் குறிக்கும். ஆயுள் புத்தி ரேகைகள் விசாலமாகவே உற்பத்தியாயின், அதிகாரம், தைரியம், வைராக்கியம், சுதந்தரம் உண்டென்றும் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர்.

இரட்டையான ஆயுள் ரேகைக ளிருந்தால், சுக்கிர மேட்டி லுள்ளதைச் செவ்வாய் ரேகை யென்று சொல்வதுண்டு. இதனால் மிகுந்த சக்தி யுடையவ ரென்பதாகும். செவ்வாய்க்கு வீரத்தன்மை சொல்லப் படுகிறது.

ஆயுள் ரேகையிலிருந்து ஒரு கிளைரேகை எந்தக் காலத்தில் சனிமேட்டை நோக்கிச் செல்லுகின்றதோ, அந்தக் காலத்தில் ஆரம்பித்த தொழில், வருங்காலத்தின் அபிவிர்த்தியைக் கெடுத்துவிடு மென்பதாம்.

## ஆயுள் ரேகையின் செல்வாக்கு ரேகைகள்

செல்வாக்கு ரேகைகள் அநேகமாய்ச் சிறிதாகவும், மிக மெல்லியதாகவு மிருக்கும். இதைப் பூதக்கண்ணாடிகொண்டு அறியவேண்டும். ரேகை வெகு நுட்பமானது. இந்தச் செல்வாக்கு ரேகைகளைக் கொண்டு வாழ்வின் நிலைமையை அறியக்கூடும். அந்தந்த ரேகையைக் கொண்டு பலாபலன்களை நிச்சயித்துவிட முடியாது. ஒன்றுக் கொன்று ஆதாரமான படியால் சிந்தித்து ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டும். இல்லையெனில், குறிப்பிடுவதெல்லாம் தவறாய்முடியும். செல்வாக்கு ரேகைக்கு பிரத்தியேகமாக எவரும் குணம் விவரித்தாரில்லை. எனவே, செல்வாக்கு ரேகைகளுக்கு இடம் சுக்கிர மேடாகும். ஆயுள் ரேகைக்கும் சுக்கிர மேட்டுக்கும் நெருங்கிய சம்பந்த முண்டு. இந்தச் செல்வாக்கின் ரேகைகளின் ஒளி பலவாறாக நாலாபக்கமும் பரவியிருக்கும். செல்வாக்கு ரேகை ஆயுள் ரேகையைத் தொடுவதொன்று. ஆயுள் ரேகையி னின்றும் ஒளி ரேகை பல கிரக மேட்டுகளுக்குஞ் செல்வது. செல்வாக்கு ரேகை உற்பத்தியில் ஒரு குறி காட்டும். இந்தக்குறி சுக்கிரமேட்டிலும், ஆயுள்ரேகையிலும் இருக்கலாம். செல்வாக்கு ரேகையி னிறுதியிலும் ஒரு குறிகாட்டும். செல்வாக்கு ரேகையின் ஒளிகள் (நுண்ணிய கீரல்கள்) ஆயுள் ரேகையில் குறுக்கிட்டிருந்தால், மற்றவர்களால் உண்டாகும் தொல்லை, தொந்தரவு, கஷ்டநஷ்டம் இவைகளைக் குறிக்கும். செல்வாக்கின் ஒளியொன்று சுக்கிரமேட்டிலிருந்து ஆயுள் ரேகையை தாண்டி குருமேட்டுக்குச் சென்றால், அப்போதைய நிலைமையைவிட, செல்வாக்கு, கீர்த்தி, வருமானம் இவைகளெல்லாம் பன்மடங்கு அதிகரிக்கும். ஒளியின் இறுதி குரு மேட்டில் குலக்குறியோடு நிற்குமாயின், அபிவிர்த்தி நிலையாய் நிற்கும் என்பதாம்.

செல்வாக்கு ரேகையின் ஒளி சனி மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், (நான்கு காலுள்ள) மிருகத்தால் உயிருக்கு அபாயம் என்பதாகும்.

செல்வாக்கின் ஒளி விதிரேகையோடு சேர்ந்து சூரிய மேட்டுக்குச் சென்றிருந்தால், தன் மனோபாவத்தால் விசேஷமான செல்வத்தைச் சம்பாதிப்பார் என்பதைக் குறிக்கும்.

செல்வாக்கு ரேகை யொளி தனித்து சூரிய மேட்டுக்குச் சென்றிருந்தால், பெருங் கீர்த்தி யுண்டாகும்.

ஆயுள் ரேகையின் ஒளி புதன் மேட்டுக்குச்சென்றிருந்தால், தொழிலில்ஜெயம், அல்லது வந்த வித்வத்தில் கீர்த்தி என்பதாகும்.

ஆயுள் ரேகையின் ஒளி சந்திர மேட்டுக்குச் சென்றிருந்தால், அதிக வேலையில் தொந்தரவும் தரித்திரமும் என்பதாகும்.

மேட்டுக்குக் கீழேயுள்ள செவ்வாய் மேட்டில் செல்வாக்கு ரேகை யொளி சென்றிருந்தால், ஆசையால் உண்டான அபாயத்தை அறிவிக்கும்.

ஆயுள் ரேகை யொளிகள் செவ்வாய் மேட்டுக்குச் சென்றிருந்தால், மூர்க்கத் தனத்தால் மனத்தொந்தரவு என்பதாம்.

## ஆயுள் ரேகைக்கும் இதர முக்கிய ரேகைகளுக்குமுள்ள சம்பந்தம்

சுக்கிர மேட்டிலுள்ள ஒளிகள் (மெல்லிய கோடுகள்) அதிகமாக ஆயுள் ரேகையை யொட்டி சம்பந்தப்பட்டிருக்கும். இதையும் பூதக்கண்ணாடி வைத்துப் பார்த்தால், நன்கு புலப்படும். ஒளி ரேகைகள் நிகழ்காலச் செய்தியைத் தெரிவிக்கத் தக்கதா யிருக்கின்றன. எண்ணங்களும், காரியங்களும் மாறும்போது ஒளி மறைந்துபோம். இது சாமானிய மனிதர் முதற்கொண்டு மகான்கள்வரை தோன்றும். சாமானியர் எண்ணங்கள் நிலையற்றதாகவும் ஆதாரமற்றதாகவும் குவியும். தத்துவ ஞானிகள், சதா கடவுளைத் தோத்தரிப்பவர்கள். நிஷ்டையி லிருப்பவர், பிரம்ம ஞானிகள் இவர்கள் சத்திய சங்கல்பத்தோடிருப்பவர்களாதலால், எண்ணத்தைக் குறிக்கும் ரேகை ஒளி சித்திபெறும்வரை மாறாது. சித்தியாகும் அல்லது ஆகாதுஎன்பதை அறிவதற்குக் குருமேட்டைக் கவனித்துப் பார்க்க வேண்டும். ஆயுள் ரேகையின் உற்பத்தியிலிருந்து ஒரு ஒளி ரேகை குரு

மேட்டை நோக்கிச் செல்லும். இது முயற்சிக்குத் தக்கபடி வளரும் தன்மை யுடையது. இந்த ஒளி காணப்படாவிடில், சித்தியாவது கடின மென்பதாம்.

இப்பொழுது சுக்கிரமேட்டின் ஒளிகளைக் கவனிப்போம்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையை வெட்டிக்கொண்டு சென்றால், குடும்பத்தில் இனத்தார்களின் தொந்தரவைக் குறிக்கும்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையை வெட்டிக்கொண்டு விதி ரேகையைத் தொடுமாயின், செய் தொழிலுக்குப் பொது ஜனங்களின் மறுப்பைத் தெரிவிக்கும். இது பெருங் கதையாய் வரும்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையைத் தாண்டி, புத்தி ரேகையோடு சேர்ந்துவிடுமாயின், தலைநோய் அல்லது மூளை சம்பந்தமான தொந்தரவு உண்டாகும் என்பதாம். ஆயுள் ரேகையைத் தொடுமாயின், எண்ணத்துக்கு விரோதமாகச் சிலர் தடங்கல் செய்வர்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையைக் குறுக்கிட்டுப் போய் இருதய ரேகையைத் தொடுமாயின், இருதயநோய் உண்டாவதைக் குறிக்கும்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையையும் இருதய ரேகையையும் வெட்டிக்கொண்டு செல்லுமாயின், நெருங்கிய பந்துக்களால் மனக்கஷ்டம் என்பதாம். இதன் கால அளவை, ஒளி ஆயுள் ரேகையோடு சம்பந்த மாவதிலிருந்து அறிய வேண்டும்.

ஒளிரேகை உற்பத்தியில் கிளையோடும் கூடி, ஆயுள் ரேகையை வெட்டிக்கொண்டு நேரே இருதய ரேகைக்குச் சென்றிருந்தால், சந்தோஷமற்ற விவாகம், விவாக ரத்தும் ஏற்படலாம் என்பதைக் குறிக்கும்.

ஒளி ரேகை இருதய ரேகைக்குச் செல்லுங்கால் தீவு காணப்படில், சந்தோஷமற்ற விவாகத்தால் வெகு தொல்லையும், சில சமயம் மானக்கேடும் உண்டாகும் என்பதாம்.

ஆயுள் ரேகை ஒளி சூரிய ரேகையைக் குறுக்கிட்டுச் செல்லுமாயின், மனக்கவலை, பண நஷ்டம், இவை பெற்றோர்களின் துரதிர்ஷ்டத்தால் நேரும் என்பதாம்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையையும், சூரிய ரேகையையும் குறுக்கிட்டுச் செல்லுமாயின், மற்றவர்கள் தம் தொழிலுக்கு ஆபத்தாம். அவமானப் படும்படி நேரிடலாம் என்பதாம். நேரிடும் கஷ்டத்தை ஆயுள் ரேகையில் குறுக்கிட்ட காலத்தில் அறியவேண்டும்.

ஒளி ஆயுள் ரேகையைத் தாண்டி, விவாக (ஐக்ய) ரேகையைத் தொடுமாயின், கலியாண மானபின் ரத்தாகும் என்பதாம். ஒளியில் தீவு காணப்படில், முன்னொரு முறை விவாகம் செய்து ரத்துசெய்தவர் என்பதாம்.

### குறிகளோடு உற்பத்தியாகும் ரேகை ஒளிகள்

சுக்கிர ஒளி ஒரு நக்ஷத்திரத்திலிருந்து உற்பத்தியானல், பந்துக்களின் மனஸ்தாபத்தைக் குறிக்கும்.

நக்ஷத்திரத்தி லுண்டான ஒளி சூரிய ரேகைவரை செல்லுமாயின், பந்துக்களாலான சச்சரவு அழியச் செய்யும் என்பதாம். சூரிய ரேகையோடு ஒளி சம்பந்தப்படுமாயின், பந்துக்களின் தொல்லை. முடிவில் நல்ல அதிர்ஷ்டத்தைக் கொடுக்கும் என்பதைக் குறிக்கும்.

சுக்கிர ஒளி ஆயுள் ரேகையைக் குறுக்கிடுங் காலத்தில், விவாகம் நடக்கும் என்பதாம்.

### குறியோடு நிற்கும் ஒளிகள்

சுக்கிர ஒளி இருதயம் அல்லது புத்தி ரேகையில், புள்ளியில் அல்லது நக்ஷத்திரத்தில் முடிவடையுமாயின், தொந்தரவா லுண்டான நோய், மனக்கலக்கம், இருதய நோய் இவைகளைக் குறிக்கும். சுக்கிர ஒளி விதிரேகையைத் தாண்டி, நக்ஷத்திரத்தில் நின்றுவிடில், பண நஷ்டத்தைக் குறிக்கும்.

சுக்கிர ஒளி சூரிய ரேகையைத் தாண்டித் தீவோடு நிற்குமாயின், செய்த குற்றத்துக்குப் பொது ஜனங்களால் அவமானம் உண்டாகும். அதாவது, மக்களை வஞ்சிக்க எண்ணி நடக்கும்போது குற்றம் வெளியாதல் அதனு லுண்டாகும் அபகீர்த்தி என்பதாம்.

ஆயுள் ரேகையைக் கவனிக்கும்போது மறு கையையும் பார்த்துக் கொண்டால், எத்தனை மாறுதல் உண்டாயிருக்கிற தென்பதைச் செவ்வனே தெரிந்துகொள்ளலாம்.

## ஆயுள் ரேகையிலிருந்து வயதைக் கண்டறிவது

இதுவரை ஆயுள் ரேகை சம்பந்தமான விஷயங்களை எழுதினேம். இதற்கடுத்த பகுதியை ஆரம்பிக்குமுன் இரண்டு விஷயங்களைத் தெரிவிக்க விரும்புகிறேம். அதாவது, நிகழும் சம்பவங்களை அறிவதொன்று. இரண்டாவது, கால நிர்ணயத்தைத் தெரிந்து கொள்வது. இதை அவரவர் கையிலிருந்து அறிந்துகொண்டால், யாதும் ஆச்சரியமாகத் தோன்ருது. சோதிடர்கள் கணித சாஸ்திரங்கொண்டு கணக்கிட்டுச் சொல்வதைக் கேட்போர் எளிதில் தெரிந்து கொள்ள முடியாது. அவரவர் கையிலுள்ள த்ரிகால சம்பவங்களையும் கால நிர்ணயத்தோடு அறியலாம். இதில் சூதுவாது கண்கட்டு வித்தை யாதுமில்லை. இரேகை சாஸ்திரம் தீர்க்கதரிசிகளால் அனுபவத்தோடு எழுதப்பட் டுள்ளது. உள்ளதை உள்ளபடித் தெரிந்து கொள்ளத்தக்கது. காலத்தைக் குறிப்பாகக் கண்டு சம்பவத்தை எதிர் பார்க்கலாம். இதில் சாத்தியம் அசாத்திய மென இரண்டு. ஆனல், இவ்விடம் எதிர்பாராத லாபத்தையோ, பெருத்த அதிர்ஷ்டத்தையோ, எடுத்துச் சொல்ல வரவில்லை. பின் யாதென்ருல், கஷ்டத்தைத் தெரிந்து அதற்குத் தக்கபடி நடந்து கொள்ளுதல்.

இதையே இருவகையாகப் பிரித்து, சாத்தியம் அசாத்திய மெனச் சொல்லப்படுகிறது. நம்மால் நீக்கிக் கொள்ளக் கூடியதே சாத்தியம். தவிர்க்க முடியாததே அசாத்திய மெனச் சொல்லப் படுகிறது. நிற்க.

———

## கால அமைப்பு






ரேகை சாஸ்திரத்தில் கால அளவைப்பற்றி அநேகர் பற்பல விதமாகச் சித்தாந்தம் செய்திருக்கின்றனர். ரேகை சாஸ்திரம் சாமுத்ரிகா லக்ஷணத்தின் ஒரு பகுதியாய், இப் பரதகண்டத்தில் கால அளவுக் குட்படாதபடி இருந்து வந்தாலும், மேல்நாடுகளில் பல நூற்றாண்டுகளாக இடைவிடாத ஆராய்ச்சியாலும், அனுபவத்தாலும் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றி வந்த மேன்மையால் இந்த ரேகை சாஸ்திரம் பிரசித்தியான நிலைக்கு வந்திருக்கிறதாகக் கூம்ட்டி ஜெர்மெயின் என்னும் மகான் தெரிவிக்கிறார். முன்னோர்களால் அறிவிக்கப்பட்ட சில குறிப்புகளைத் தற்கால ரேகை சாஸ்திரிகள் பின்பற்றுவதில்லை. ஆகையால், எதிர்கால நிகழ்ச்சிகளைக் கால அளவுடன் சொல்லப் பின் வாங்குகின்றனர். மேலும் இக் காலத்தில் அநேகர் கையை நீட்டி அவசரமாகவே பலாபலனைத் தெரிந்து கொள்ள விரும்புகின்றனர். அவ்விதமே சொல்லுவோரும் துரிதமாகச் சொல்லி முடித்து விடுகின்றனர். இது காரணம் பற்றியே சிற்சில சமயங்களில் நாம் ரேகை பார்க்க நேர்ந்த விடங்களில் கால அளவை ஏறக்குறைய வென்றும், இன்னும் சில விடங்களில் ஆயுளின் காலத்தை நிர்ணயிக்காதபடியே சொல்லியுள்ளோம். கால நிர்ணய

தைச் சொல்லும்போது கேட்போரின் மனோதைரியத்தைப் பொருத்திருக்கிறது. இதையே தேசபோரலி, கிரேய்க் ஹீரான், அல்லன் முதலிய ரேகை சாஸ்திரிகள் கால அளவை உத்தேசமாகச் சொல்லவும், மறுத்துவிட்டதாகச் சொல்லுகின்றனர். ரேகை சாஸ்திரமே பிரவிர்த்தியாய்ப் புனைப்பெயரோடு விளங்கிய கூீரோ என்பவர் சம்பவ காலத்தை வயதிலிருந்து குறிப்பிட்டுச் சொல்லியிருக்கிறார். ஐரோப்பாக் கண்டத்து அநேக மகுடாதிபதிகளுக்கு அவ்வாறுரைத்து நிகழ்ந்ததையும் தமது நூல்களில் வெளியிட்டிருக்கிறார். அநேகர் கால அளவை நிர்ணயிக்காதபடியே இஷ்டம் போல் சொல்லிவிடுகின்றனர். ஆகையால், தவறான அபிப்பிராயங்கொள்ள நேருகின்றது. ரேகைசாஸ்திரம் ஒருவர் செய்த நூலென்று சொல்ல முடியாது. முன்னோர்களின் அநுபவமே சாஸ்திரமாய்ப் பிரகாசிக்கிறது. அதையே படிக்கிறோம்; அநுபவிக்கிறோம்; பிறருக்கும் உபதேசிக்கின்றோம். பணத்தை உத்தேசித்துப் பலன் சொல்லும் போது, சாஸ்திரத்தில் இல்லாத கற்பனைகளே மிகுதியாய் விடுகிறது. அவர்களின் கால நிர்ணயத்துக்கு உட்படாதபடி சம்பவங்கள் நிகழ்கின்றன. கால நிர்ணயத்தைப் பற்றி மேதாவிகள் பிரசித்தமாய் தெரிவித்திருப்பதை நமது வாசகர்களுக்கு அறிவிக்கிறோம். இவர்கள் குறிப்பிட்ட கால நிர்ணயத்தை அநேகர் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். ஆனால், இந்த இரண்டும், கால நிர்ணயத்தில், ஒரு குறிப்பிட்ட நாள், வாரம், மாதம், அல்லது வருடத்தையோ அறிவிப்பதன்று. கைரேகையை ஆதாரமாகக் கொண்டு காலத்தை மாதம் தேதியோடு குறிப்பிட்டுச் சொல்வதாகக் கேள்விப் படுகிறோம். ரேகையைக் கொண்டு காலத்தைக் குறிப்பாய்ச் சொல்லமுடியாதென்பது அநேக ரேகை சாஸ்திரிகளின் அபிப்பிராயம். ரேகையைப்பார்த்துக் காலத்தை அளவோடு குறிப்பிட்டால் நம்பத்தக்கதன்று. பணம் சம்பாதிக்க வேண்டியே தான் சொல்லலாகும். அதிர்ஷ்டத்தைச் சொல்லி அநேக கிளர்ச்சிகளை எதிர்பார்ப்பதாகும்.

இப்பொழுது இரண்டு சித்திரங்களையும் கவனிக்கவும். ஆயுள் ரேகையில் இருவிதமாக வயது குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது வெகுவாய்க் கக்கமேட்டையும் அளவிடக்கூடி

யது. சிலர் கை நீளமாகவும், சிலர் கை குட்டையாகவும் அமைந்திருக்கும். கை அகண்டு நீண்டிருந்தால், அதற்குத் தக்கபடியே அளவிட்டுக் கொள்ளவேண்டும். புள்ளியால் அமையப் பெற்றது ரேகையல்ல—கோடேயாகும். விதி ரேகைக்குக் கால் அளவு கங்கண ரேகைக்குமேலேயிருந்து குறிக்கப்பட் டிருக்கிறது. ஆயுள் ரேகைக்கு உற்பத்தியி லிருந்து கால நிர்ணயம் காட்டப்பட் டிருக்கிறது.

ஆயுள் ரேகையை நூலைக்கொண்டு அளந்து காலத்தை நிர்ணயிக்கலாம். அதன் பிறகு சம்பவங்கள் நிகழ்வதை, நூலை 2-பாகமாக்கி, ஒவ்வொன்றை ஐந்து பாகமாகச் செய்து தெரிந்துகொள்ளலாம். முதல் நம்பர் படம் மடிப் புக்கு ஆறுவயதாகக் காட்டுகிறது. இரண்டாவது படம் மடிப்புக்குப் பத்து வயதாகத் தெரிவிக்கிறது. படத்தைப் பார்க்கும்போது, அவரவர் கையையும் நோக்கினால் நன்கு விளங்கும்.

ஆயுள் ரேகையின் அளவுப்படி விதி ரேகையும், தன ரேகையும் இருக்கவேண்டு மென்ற அவசியமில்லை. என்றா லும், கால நிர்ணயத்துக்காகவே சேர்க்கப்பட் டிருக்கிறது. சுண்டு விரலுக்கு நேரேயுள்ள தன (சூரிய) ரேகை சாமா னிய ஜனங்களின் கையிலிருப்பதரிது. என்றாலும், சில ருக்கு உற்பத்தியில் கொஞ்சமும், ஆயுள் பாகத்தின் இறுதி யிலும் சிலருக்கும் அமையும். இதைப் பற்றி முன்பகுதியில் எழுதி யிருக்கிறோம்.

இனி அடுத்த பகுதியில் இருதய ரேகையைப் பற்றி விவரிக்கப்படும். அநேக ஆசிரியர்களின் அபிப்பிராயத் தைத், தழுவியே அநுபவத்துக்குப் பொருத்தமான விஷ யங்களை மாத்திரமே நமது வாசகர்களுக்கு அறிவிக்கின் றோம். ஆயுள் ரேகையைப்போல் இருதய ரேகையும், விதி ரேகையும் முக்கியமானவைகளே யாகும்.

---

# 9-வது அத்தியாயம்

## இருதய ரேகை





கிரக மேடுகளுக் கடியில் குறுக்கே அமைந்திருப்பது இருதய ரேகை யாகும்.

இந்த ரேகையைப் பற்றி மேல்நாட்டு விற்பன்னர்கள் விசேஷமாய் எழுதுகின்றனர். இன்னும் நீசபொரேலி என்னும் மகானைப் பின்பற்றுபவராயிருக்கின்றனர். ஒரு மனிதரின் தேக நிலையையும், மனோ தர்மத்தையும் இருதய ரேகை எளிதில் காட்டிவிடும். வாத பித்த சிலேஷ்ம மென்னும் நாடிகளின் நிலைமை, ரத்த ஓட்டத்தின் தன்மை இவைகளையும் அறியலாம். ரேகை சாஸ்திரிகள் இருதய ரேகையைப் பகுத்தறிந்த அநேக நுட்பங்களை ஒருங்கே வெளியிடுகின்றனர். ஒவ்வொருவரும் தத்தம் நூல்களில் மிகைப்படக் கூறிவரினும், அபிப்பிராயத்தில் பேதமில்லை ; பேதமிருக்க முடியாது. இதர ரேகையின் உதவி யின்றியே, இருதய ரேகையைக் கொண்டு அநேக உண்மைகளைத் தெரிந்து கொள்ளலாம்,

கிரக மேடுகளுக்குச் சமீபமாய் இருதய ரேகை அமையுமாயின், அடக்கம், பொறுமை, மனக்கொதிப்பு, ஆர்வம் இவைகளைக் குறிக்கும்.

புத்தி ரேகைக்குச் சமீபமா யிருந்தால், (முதல் படத்தைப் பார்க்க) குளிர்ந்த தன்மை, தற்பெருமை இவைகளைக் குறிக்கும்.

இருதய ரேகை குருமேடுவரை நீண்டிருந்து, கிரக மேடுகளுக்கும், புத்தி ரேகைக்கும் மத்தியில் அமைந்திருந்தால், சிலாக்கியமாய் மதிக்கப் படுகிறது. திடகாத்திரமும், நல்லொழுக்க முடையவராயு மிருப்பர். தங்குதடையின்றி இருதய ரேகை சுத்தமா யிருப்பின், அன்பின் பெருக்கைக் குறிக்கும். வளைவின்றி ஒரே நீளமாயிருப்பின், மூடபக்தியைக் காட்டும்.

இரட்டித்த இருதய ரேகைகள் இருந்தால், ஆழ்ந்த பாசத்தைக் குறிக்கும். அதனாலுள்ள நஷ்டத்தால் மிகவும் துக்கப்படுவர் என்பதாம்.

முதல் விரலின் மூன்றாவது அங்குலாஸ்தியி லிருந்து இருதய ரேகை உற்பத்தியாகி யிருந்தால், எடுத்த காரியத்தி லெல்லாம் சித்திக் குறைவு யென்பதை அறிவிக்கும்.

குரு மேட்டுக்கும் சனி மேட்டுக்கும் மத்தியிலிருந்து உற்பத்தியானால், சந்தோஷக் குறைவான நிலைமையைத் தெரிவிக்கும்.

இருதய ரேகை சற்றே குரு மேட்டை வளைத்துக் கொண்டு உற்பத்தியாயின், பொறாமை, மாச்சரியமே முன்னிற்கும் என்பதாம்.

குருமேட்டை முற்றிலும் வளைத்துக்கொண் டிருந்தால், சோதிட சாஸ்திரங்களில் ஆராய்ச்சி யுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

குரு மேட்டில் உற்பத்தியாவதற்குப் பதிலாகச் சனி மேட்டிலிருந்து இருதய ரேகை உற்பத்தியானால், புத்திக் கூர்மை—நுண்ணறிவு உண்டாம்.

இவ்விதம் சனி மேட்டில் உற்பத்தியாகி, புத்தி ரேகையின் மத்தியில் சூலம் காணப்படில், அகால மரணத்தைக் குறிக்கும். இந்தக் குறியை முதல் படத்தில் பார்க்கவும். கிளைகளின்றி ஒரே தனித்த ரேகையா யிருப்பின், திடும் சம்பவ மரணத்தைக் குறிக்கும்.

இருதய ரேகை மத்தியில் புத்தி ரேகையில் முக்கோணமாய்க் கலந்துவிடுமாயின், அற்ப புத்தியைக் குறிப்பதாகும். சந்திப்பில் சதுரமா யிருந்தால், அற்பத்தனம் அளவு கடந்து நிற்கும்.

இருதய ரேகை புத்தி ரேகையுடன் கலந்து, ஆயுள் ரேகையோடு புத்திரேகை சாருமாயின், பிடிவாதம், கௌரவமான நடை இவைகளைக் குறிக்கும்.

இருதய ரேகை செந்நிறமா யிருப்பின், மூர்க்கத்தனத்தைக் காட்டும். மஞ்சள் நிறமாயின், ஈரல் சம்பந்தமான நோயுண்டாகும்.

இருதய ரேகை வெளுத்து அகண்டு காணப்படில், இருதயரோகம், பலஹீனத்தின் காரணத்தால் ரத்தோட்டம் குன்றியிருக்கு மென்ப தாகும்.

ரோமத்தைப்போன்ற மெல்லிதாய் இருதய ரேகை அமைந்திருந்தால், கொலை செய்யத்தக்க குரூர குணமுடையவர் என்பதைக் காட்டும்.

இருதய ரேகை கலக்கமாயும், இறுதியில் கிளையோ டிருப்பின், மலட்டுத் தன்மையைக் குறிக்கும்.

இருதய ரேகை அமைப்பில் பட்டும் படாமலும், புத்தி ரேகை சங்கிலியைப்போலு மிருந்தால், விஸ்வாசமற்ற தன்மையைக் குறிக்கும்.

இருதய ரேகை துண்டு துண்டாய்க் காணப்படில், பெண்ணுயின் ஆணையும், ஆணுகில் பெண்ணையும் வெறுக்கத்தக்க குண மிருக்கும்.

சனி மேட்டுக் கடியில் இருதய ரேகை தனிப்படவே இரண்டு துண்டாய்க் காணப்படில், ரத்த ஓட்ட மில்லாததால் உண்டான கடுமையான நோயுண்டாகும் என்பதாம்.

சமானியமாய் இருதய ரேகை சனி மேட்டுக் கடியில் வெட்டுப்பட் டிருப்பின், யாதொரு குற்றமின்றியே விவாகத் தடை உண்டாகும் என்பதாம்.

சூரிய மேட்டுக்கு நேராக இருதய ரேகை வெட்டுப்பட் டிருந்தால், அடுத்துக் கெடுப்போரால் உண்டாகும் தடையைக் காட்டும்.

புதன் மேட்டுக்கு நேராக இருதய ரேகைவெட்டுப்பட்டிருப்பின், பேராசையால் காரியம் தடைப்படும் என்பதாகும்.

இருதய ரேகை இல்லாமலே இருந்தால், மிகுந்த குளிர்ந்த தன்மை, தன்னலம், பேராசை இவைகளைக் குறிக்கும். செவ்வாய் மேடு சாமான்யமா யிருந்தால், கொடுமையைக் காட்டும்.

நல்ல அமைப்புள்ள இருதய ரேகையும், சுக்கிர சந்திர மேடு பெருமிதமா யிருப்பின், காம்பீரத் தன்மையையும், பெருநோக்கையுங் குறிக்கும்.

இருதய ரேகை நன்கு அமைவதோடு புத்தி ரேகையும் நன்னிலை பெற்று, ஆயுள் ரேகையின் இறுதி முக்கோணமாயிருக்குமானுல், யுக்தி சாமர்த்தியத்தைக் குறிக்கும்.

இருதயம், புத்தி, ஆயுள் ஆகிய மூன்று ரேகைகளும் மிக்க மெல்லிதா யிருந்தால், மோசத்தன்மை, பொய்யன் என்பதாகும்.

## இருதய ரேகை இதர ரேகைகளோடு சம்பந்தப் படுவதாலுள்ள பலன்கள்

இருதய ரேகையின் உற்பத்தியில் ஆயுள் புத்தி இவ்விரண்டு ரேகைகளும் ஒன்ருயிருந்து, புத்தியின் கிளை சந்திர மேட்டுக்கும், மற்ருென்று ஒழுங்காகவும் போயிருந்தால், அல்லது இருதய ரேகையோடு சேர்ந்திருந்தால், குருட்டுத் தன்மை ஆசையே படுகுழியாம் என்பதைக் குறிக்கும். இதை இரண்டாவது படத்தின் (உ உ) என்ற அடையாளத்தில் பார்க்கவும்.

உற்பத்தியில் குரு மேட்டில் ஆயுள் இருதயம் புத்தி ரேகைகள் ஒன்ருயிருந்து, புத்திரேகையின் மத்தியில் சூலம் காணப்படில், ஆபத்தாம். இரண்டு கரங்களிலும் சூல மிருப்பின், மரணம் திடுஞ் சம்பவமாம்.

இருதயம் புத்தி இவ்விரண்டு ரேகைகளும் சனிமேட்டில் ஐக்கியமா யிருந்தால், ஆபத்தான சம்பவங்களைக் குறிக்கும்.

புதன் மேட்டில் பத்தியும் இருதயமும் ஐக்கியமானல், பிறர்செய்யும் தீவினையால் அகால மரணத்தை அறிவிக்கும்.

இருதயம் புத்தி ரேகைக ளிரண்டும் குரு மேட்டில் உற்பத்தியாகி, புத்தி ரேகையின் இறுதியான சந்திர மேட்டிலிருந்து, புத்தி ரேகையின் கிளை இருதய ரேகையோடு சம்பந்தப் படுமாயின், எதிர் பாராத துரதிர்ஷ்டம், சங்கட நிலைமையைக் குறிக்கும்.

## இருதய ரேகையோடு இதர ஔி ரேகைகள் சம்பந்தப் படுவதாலான பலன்கள்

அநேக சிறு ரேகைகள் இருதய ரேகையைக் குறுக்கிட்டிருக்கு மாயின், ஒழுக்கத்துக்கும் கௌரவத்துக்கும் ஆபத்துண்டாகு மென்பதாம்; இருதய ரோக முண்டாகும்.

இருதய ரேகையும் ஆயுள் ரேகையும் உற்பத்தியில் சிறு ரேகைகளால் சம்பந்தப்பட்டிருந்தால், காதல் சம்பந்தமான மனோ வேதனையா லுண்டான நோயைக் குறிக்கும். இருதய ரோகமும் உண்டாகு மென்பதாம்.

இருதய ரேகையின் கிளையொன்று புத்தி ரேகையை வெட்டாமல் சேர்ந்துவிடுமாயின், முழு மூடத்தனத்தைக் குறிக்கும்.

இருதய ரேகையின் கிளைகள் புத்தி ரேகை சம்பந்தமின்றி யிருக்குமானல், ஸ்திரீக்குப் புருஷ வசியமும், புருஷனுக்கு ஸ்திரீ வசியமுமாம் என்பதாகும். (c c c) என்பதைப் படத்தில் பார்க்கவும்.

இருதய ரேகையின் கிளை சனிமேட்டுக்குப் போய்த் திரும்பினல், தவருன இடத்தில் அன்பு செலுத்துபவர் என்பதாகும். புதன் ரேகைக்கடியில் இருதய ரேகையின் கிளை வெட்டுப்பட்டிருப்பின், தொழில் நஷ்டம் என்பதாகும். இரண்டாவது படத்தில் (d) என்ற ரேகையைப் பார்க்கவும்.

இருதய ரேகையின் கிளையொன்று அழுத்தமாகப் புதன் மேட்டில் ஏறி யிருக்குமாயின், பேராசையைக் குறிக்கும்.

செங்குத்தான இரண்டு ரேகைகள் சந்திர மேட்டிலிருந்து இருதய ரேகைக்குச் சென்றிருந்தால், மூர்ச்சா ரோகத்தால் மரணம் சம்பவிக்கு மென்பதாம். இரண்டாம் படம் (d d d d) என்பதைப் பார்க்க.

இருதயரேகை வளைவின்றிக் குறுக்கே போயிருந்தால், மூர்க்க குணம், யுத்த வீரத் தன்மை இவைகளைக் குறிக்கும்.

இருதய ரேகையின் கிளையொன்று விதிரேகையை எந்தக்காலத்தில் குறுக்கிட்டு வெட்டிக்கொண்டு போகிறதோ, அந்த வயதில் வாழ்க்கைத் துணைவரை இழப்பர். மூன்ரும் படத்தில் (d d) என்ற ரேகையைப் பார்க்கவும்.

## இருதய ரேகையின் ஒளியும் கிளையும்

குருமேட்டுக் கடியில் இருதய ரேகை கிளையோடிருந்தால், நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிக்கும். மூன்று கிளைகளோடு காணப்படில், அபரிமிதமான அதிர்ஷ்டம்—செல்வமான வாழ்க்கை என்பதாகும். இருதய ரேகையின் குரு மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், சந்தோஷமான வாழ்க்கையைக் குறிக்கும்.

இருதய ரேகை கிளையோடு உற்பத்தியாகி, ஒன்று குரு மேட்டுக்கும், மற்ருென்று புத்தி ரேகைக்குமாகப் போயிருந்தால், தனக்கே கபடமாய் நடந்துகொள்வர் என்பதாகும்.

இருதய ரேகையின் கிளைகளி லொன்று, புத்தி ரேகையைத் தாண்டி சுக்கிர மேட்டுக்குச் சென்றிருந்தால், விவாகம் காரணமாய்ப் பிரிவினை ஏற்படு மென்பதைக் குறிக்கும்.

இருதய ரேகையின் ஒரு கிளை மேல்நோக்கி குருமேட்டுக்கும் சனிமேட்டுக்கும் மத்தியில் போய், குரு மேட்டிலும் சந்திரமேட்டிலும் எவ்வித ரேகைக் குறிகளும் காணப்படாவிடில், சந்தோஷ வாழ்க்கை இல்லை யென்பதாகும்.

இருதய ரேகையின் இரண்டு கிளைகளி லொன்று சனி மேட்டுக்கும், மற்றொன்று குரு மேட்டுக்கும் போயிருந்தால், காரிய சித்திகளிலெல்லாம் தவறு உண்டாம். மதாபிமானத்தையும் குறிக்கும்.

சம்பந்தமற்றுக் கிளைக ளிருப்பின், இருதயம் உலர்ந்த தன்மையைக் காட்டும்.

குருமேட்டிற்கு நேரே, இருதய ரேகையின் கம்புக்கிளை யொன்று மில்லாதிருப்பின், தரித்திரத்தைக் குறிக்கும்.

இறுதியில் கிளையில்லையெனில், மலட்டுத் தன்மை என்பதாகும்.

கீழ்நோக்கிக் கிளைகள் போயிருந்தால், காதலால் நேர்ந்த அபஜெயத்தை அறிவிக்கும்.

புத்தி ரேகைக்கு வெகுதூரமாகவும் இருதயம் புத்தி ரேகைகள் கிளைகளின்றி யிருந்தால், அன்பில்லாத வாழ்க்கையைக் குறிக்கும்.

## இருதய ரேகையிலுள்ள குறிகள்

இருதயரேகையில் சூலங்கள், அல்லது சங்கிலிபோன்ற தொடர்வும், இவ்விதமே விதி ரேகையிலும் அமைந்திருப்பின், ஒரு விதச் சிக்கலான கஷ்டங்களைக் குறிக்கும்.

இருதய ரேகையின் கிளையொன்று சந்திர மேட்டில் சென்று இறுதியில் நக்ஷத்திரப் புள்ளியு மிருப்பின், பரம்பரையாய் வரும் காமப் பித்து என்பதாம். மூன்றாவது படத்தில் (b b) என்ற ரேகையைப் பார்க்கவும்.

ரேகையின் குறுக்கே ஒரு தழும்பு காணப்படில், மூர்ச்சை சம்பந்தமான அபாயத்தை அறிவிக்கிறது.

சிகப்புப் புள்ளிகள் காணப்படில், தேகத்தில் காயங்களுண்டாகும் என்பதாம்.

வெண்மையான புள்ளிகள் இருதய ரேகையில் காணப்படில், காதல் சம்பந்தமான விஷயத்தில் ஜெயத்தைக் குறிக்கும்.

சூரிய மேட்டுக்குநேரே இருதய ரேகையில் பள்ளமான புள்ளியிருப்பின், கீர்த்தி பெற்ற மனிதனின் பிரிவாற்றுமையா லுண்டான துக்கம், வாழ்வின் முன்னேற்றத்தைத் தடுத்துக் கஷ்டத்துக் குட்படுத்துவ தென்பதாம்.

புதன் மேட்டுக்கு நேரே இருதய ரேகையில் புள்ளி காணப்படில், மேற்சொல்லிய கஷ்டம் வக்கீல், சாஸ்திராபிமானி இவர்களுக்கு உண்டாகு மென்பதாம். இருதய ரேகையில் வட்டமான ரேகை யிருப்பின், இருதயத்தின் பலஹீனத்தைக் குறிக்கும். மூன்றாவதுபடத்தில் (a) என்பதைக் கவனிக்க.

தீவு காணப்படில், விசுவாசமற்ற தன்மையைக் குறிக்கும். எத்தனை தீவுகளிருந்தாலும், அவ்விசுவாசத்தை அதிகரித்துக் காட்டுவதாகும். இரண்டாவது படத்தில் (c c) என்பதைக் கவனிக்க.

இருதயம், விதி இவ்விரண்டு ரேகைகளிலும் தீவுகளிருந்தும், மறு கையிலும் அவ்விதமே காணப்படில், நிலையற்ற காதல் நிலையின்றி யிருக்கு மென்பதாகும்.

இனி அடுத்த வியாசத்தில் புத்தி ரேகையைப் புற்றி விஸ்தாரமாய் எழுதப்படும். புத்தியைக் கடவுள் கொடுத்த அருட்செல்வம் என்பதாகச் சொல்லப்படுகிறது. மூளையின் தத்துவத்தைக் கையிலுள்ள புத்தி ரேகையின் மூலமாய் அறிந்து கொள்ளலாம்.

---

# 10-வது அத்தியாயம்

## புத்தி ரேகை

இந்த புத்திரேகை இருதய ரேகைக்குக் கீழே ஏறக் குறைய சமமாக அமைந்திருக்கும். புத்திரேகை ஒருவரின் மூளையின் சக்தியை அளந்து காட்டும் கருவிபோலாகும். உற்பத்தியில் இதர ரேகைகளோடு சம்பந்தப் படாதிருந் தால், சதுர ரேகையெனச் சொல்லப்படும்.

புத்தி ரேகை நீண்டு கிரமமா யிருந்தால், பகுத்தறிவு விசேஷ மென்பதைக் குறிக்கும்.

நீண்ட கை, விரல்களோடு, புத்தி ரேகையும் வளை வின்றி நீளமாய் அமைந்திருந்தால், ஒவ்வொரு பொருளையும் ஆராய்ந்தறியும் ஆவலுள்ளவ ரென்பதாகும்.

புத்தி ரேகை ஒடுங்கி நீளமாய் அமைந்து, குரு, செவ் வாய், புதன் முதலிய மேடுகள் மேற்பட்டிருப்பின், புத்தி சக்தி வாய்ந்ததாகும். புத்திமான் பலவான் என்பது இந்த விடத்தில் பொருந்தும். சரீரபலம் இல்லாதிருந்தாலும், புத்தியின் பலன் குறையாது.

புத்தி ரேகை நன்கமைந்து, குரு, செவ்வாய் மேடுகள் ஒத்திருக்குமாயின், மனதை சாத்வீகமான நிலையில் நிறுத் தக் கூடியவ ராகும்.

நீளமாயும், ஒழுங்கா யமைந்த புத்தி ரேகையும், முதல் விரல் சங்கைப்போன்று வளைந்தும், சனி, சூரிய மேடுகள் நன்கமைந்திருந்தால், எப்பொழுதும் நூல்களை வாசிப்பதில் பிரீதி யுடையவர் என்ப தாகும்.

இருதய புத்தி ரேகைகளால் சதுரம் காணப்படில், ஆழ்ந்த எண்ண முள்ளவர் என்பதைக் குறிக்கும்.

நீண்ட புத்தி ரேகையும், நல்ல இருதய ரேகையோடு முதல் விரல் அமைப்பில் சற்றே நீளமா யிருந்தால், செட் டான தன்மையில் இஷ்டப்படுபவ ராகும். பேராசை யுண் டாகாது.

ஆயுள் ரேகையும், புத்தி ரேகையும் உற்பத்தியில் ஒன் றாகி, இறுதியில் முக்கோணமாய்க் காணப்படில், சம யோசித (சாமர்த்தியம்) புத்தி யுக்தியைக் குறிக்கும்.

இரண்டு கைகளிலும் ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையைக் குறுக்கிட்டுச் சென்றால், ஜோஸ்யம், அல்லது ரேகை சாஸ்திர ஆராய்ச்சியைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை ஒடுங்கி நீண்டுபோ யிருந்து புத்தி ரேகையைக் குறுக்கிட்டிருந்தால், நல்ல ஞாபக சக்தியைக் குறிக்கும்.

புத்தி ரேகை சங்கிலியைப்போல் பின்னலாக விருந்தால், அடிக்கடி யுண்டாகும் தலைவலியைக் குறிக்கும்.

புத்தி ரேகை பட்டும் படாமலும் மிக்க மெல்லியதா யிருப்பின், மூடத் தன்மையைக் குறிக்கும்.

புத்தி ரேகை மெல்லியதாகவும் நீளமாகவும் அமைந்திருந்து, புதன் மேடும் அதீதப்பட்டிருந்தால், வஞ்சகத் தன்மையைக் காட்டும்.

குறுகிய புத்தி ரேகையும், விர்த்தியில்லாக் குருமேடு மிருந்தால், சோம்பல் தன்மையைக் குறிக்கும். மேலும், சந்திர சுக்கிர மேடுகள் அளவுக்கு மிஞ்சி யிருக்கும்.

புத்தி ரேகை அகலமாய் ரத்தப்பசை யற்றதுபோலும், சூரியமேடு அடங்கியு மிருப்பின், மந்த புத்தியைக் காட்டும்.

நீண்ட கிரமமான புத்தி ரேகை யமைந்திருந்தும், சுண்டுவிரல் அமைப்பில் சிறிதாகிவிடில், சாதுர்யம் (யுக்தி) இல்லாதவர் என்ப தாகும்

புத்தி ரேகையில் தீவுகள் காணப்படில், க்ஷயரோகத்தைக் குறிக்கும். நகங்கள் கூடுபாய்ந்து முனைவளைந்து மிருக்கும். புத்தி ரேகை பாதிவழிபோய் நின்றும், குரு சூரியமேடுகள் விர்த்தி யில்லாதிருந்தால், புத்திக் குறைவைக் காட்டும்.

புத்தி ரேகை முறுக்கின மாதிரியில் அமைந்து, மந்தமான புதன் மேடு மிருந்தால், அவநம்பிக்கையைக் காட்டும். அதாவது, யோக்கிய மற்றவ ராகும்.

குறுகிய புத்தி ரேகையும், அதீதப்பட்ட சுக்கிரமேடு மிருந்தால், ஒரு வழிப்போக்கான மனதையுடையவர் என்ப தாகும்.

புத்தி ரேகை, கையின் குறுக்கே ஒரு முனையிலிருந்து மறு முனைவரை நீளமாய்ச் சென்றிருந்தால், பேராசை பிடித்தவர் என்ப தாகும்.

புத்தி ரேகை ஆயுள் ரேகையோடு தொடர்ந்துபோயிருந்தால், மூளைக் கொதிப்பா லுண்டாகும் ஜுரத்தைக் குறிக்கும்.

புத்தி ரேகை மெல்லியதாகவும், ஆரோக்கிய ரேகை பட்டும் படாமலு மிருந்தால், கடுமையான அஜீரணத்தைக் குறிக்கும்.

புத்தி ரேகை உற்பத்தியில் ஆயுள் ரேகையோடு சம்பந்தப்படாமல், ரேகை அழுத்தமா யிருந்தால், பலசாலி என்பதைக் காட்டும்.

புத்தி ரேகை கிரமமாக நீண்டு உற்பத்தியில் ஆயுள் ரேகையோடு சம்பந்தப்படா திருப்பின், தன் நம்பிக்கையைக் குறிக்கும்.

புத்தி ரேகை ஆயுள் ரேகையோடு சம்பந்தப்படாமல் உற்பத்தியாகி, அநேக சதுரமாய்க் காணப்படில், அளவு கடந்த உற்சாகத்தைக் குறிக்கும்.

புத்தி ரேகை ஆயுள் ரேகையோடு சம்பந்தமின்றி உற்பத்தியாகி, செவ்வாய் புதன் மேடுகள் சற்றே அதீதப்படில், அளவுகடந்த தன் நம்பிக்கையைக் காட்டும்.

ஆயுள் ரேகையிலிருந்து வெகு தூரத்தில் உற்பத்தியாகி, புதன் மேடு மந்தமாகவும், செவ்வாய் மேடு அதீதமாகவும் இருப்பின், முரட்டுசுபாவம், அடிக்கடி நேரிடும் புத்திக் குறைவு இவைகளைக் குறிக்கும். புத்தி ரேகை குறைவானுல்தான் குறைந்த புத்தி யாகும்.

புத்தி ரேகை உற்பத்தியில் பெருவிரல் வளைந்து நேராகச் சென்றிருந்தால், அளவு கடந்த அகந்தை யுள்ளவர் என்பதாகும். புத்தி ரேகை குருமேட்டுக் கடியில் உற்பத்தியாகி, சந்திர மேட்டில் வளைந்து, பெருவிரல் அகலமாயும், குட்டையாகவு மிருந்தால், பிடிவாதமான குணத்தைக் காட்டும். இருதயரேகை அதற்குத் தக்கவாறே அமைந்திருக்கும்.

புத்தி ரேகை இருதய ரேகையை நோக்கி வளைந்தும், ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையிலிருந்து உற்பத்தியாகியிருந்தால், அடிக்கடி மயக்கம், வலிப்பு முதலியவை உண்டாகு மென்பதாகும்.

புத்தி ரேகை சூரியன் அல்லது புதன் மேட்டில் வளைந்து, அலைகள்போல் அடுக்கடுக்காய்க் காணப்படில், புத்தி மாருட்டம், சித்தப்பிரமை யுண்டாகும் என்பதாம். இரண்டு கரங்களிலும் ஒரே மாதிரி அமைந்திருந்தால் தான் உறுதிப் படுத்த லாகும்.

புத்தி ரேகை சந்திர மேட்டில் வளைந்து கிளைகளோடு காணப்படில், வஞ்சகத்தைக் குறிக்கும்.

சந்திர மேட்டில் புத்தி ரேகை வளைந்தும், முதல் விரலில் ஒரு நக்ஷத்திரப் புள்ளியுங் காணப்படில், புத்தி மாருட்ட மென்பதாகும்.

சந்திரமேட்டில் வெகுவாய்ப் புத்திரேகை வளைந்து தொங்கியும், முதல் விரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் அநேக சிறுரேகைகள் காணப்படில், ரேகை அல்லது சோதிட சாஸ்திரத்தில் வல்லவர் என்பதாகும்.

புத்தி ரேகை வளைந்து சந்திர மேட்டில் சென்று, குரு மேட்டில் வளையம்போன்ற ரேகையும் காணப்படில், வாக்கு வன்மை யுண்டாகும். சபையடங்கப் பேசுந் திறமை யுள்ளவர் என்பதாகும்.

புத்திரேகை சந்திரமேட்டில் வளைந்து சென்றும், சூரிய மேட்டில் இரு கரங்களிலும் ரேகை காணப்படும். மோதிர விரல் இரண்டாவது விரலுக்குச் சற்றே சமத்துவமாகவுங் காணப்படில், பெரிய வியாபாரங்களில் லாபமானுலும் நஷ்டமானுலும் தைரியமாகவே ஈடுபடுவர். சூதாட்டத்தில் விருப்பமுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையின் ஒளிரேகை ஆரோக்கிய ரேகையோடு சம்பந்தப்பட்டு விதிரேகை புத்திரேகையில் வந்து நின்று விடுமாயின், புத்தி தடுமாற்ற முண்டாம். மூளை சம்பந்தமான நோய்க ளுண்டாகும்.

புத்தி ரேகை நடுக்கையிலேயே நின்று, செவ்வாய் மேடு குறிப்பிடக் கூடாததாயின், சக்தி போதாமை என்பதாம். புத்தி யோசனைக் கிடமின்றி மந்தமாக நிற்கும்.

புத்தி ரேகை உள்ளங்கைவரை சென்று மீண்டும் சுக்கிரமேட்டை நோக்கிச் சென்ருல், காதலாலேயே உயிர்க்கீனமாம்.

புத்தி ரேகை விதி ரேகையைச் சந்திக்காமல் நின்று விடுமாயின், அற்ப ஆயுளைக் குறிக்கும்.

புத்தி ரேகை இறுதி புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், நிர்வாகத் திறமையும், மிகுந்த சாமர்த்தியமுமுடையவரென்பதாம்.

புத்தி ரேகை புதன் மேட்டில் சென்று வளைந்து சென்றால், வினோதமாகவும், வேடிக்கையாகவும், மற்றோர்களைப் போல் பேசக்கூடிய வல்லமை யுள்ளவர் என்பதாம்.

புத்தி ரேகை தங்கு தடையின்றி நேராகச் செவ்வாய் மேட்டில் முடிவடைந் திருந்தால், புத்தி நிதான முள்ளவர் என்பதாகும்.

புத்தி ரேகை இறுதியில் இருதய ரேகையில் சேர்ந்திடில், மயக்க நோயைக் குறிக்கும்.

புத்தி ரேகை நீளமாகவும், குரு சுக்கிர மேடுகள் பலனற்றும், பெரு விரல் உள்ளங்கையை நோக்கியும், இதர விரல்கள் நெருங்கியும் அமையுமாயின், வீண்பெருமை, எதிரி செய்த கொடுமையை மனதில் மறைத்து வைத்தல் முதலியவைகளைக் குறிக்கும்.

புத்தி ரேகை சிறு துண்டுகளாகவும், வட்டமாகவும், சதுரமாகவும் இணைக்கப்பட் டிருப்பின், பணநஷ்டத்தைக் குறிக்கும்.

புத்தி ரேகை சனி மேட்டுக்கு நேராகத் துண்டுபட்டு, இரண்டு கரங்களிலும் காணப்படில், அகஸ்மாத்தாய் ரணகாய முண்டாம் என்பதாம்.

புத்தி ரேகை சனி மேட்டுக்கு நேரே துண்டுபட்டு, ஆயுள்ரேகையிலும், வெட்டுக்குறி இருகரங்களிலும் காணப்படுமாயின், அகஸ்மாத்தான மரணம் நிச்சயம் என்பதாம்.

புத்தி ரேகை சனி மேட்டிற்கு நேரே துண்டுபட்டு, ரேகைகளின் முக்கோணத்தில் ஒரு சூலமும் காணப்பட்டு, ஆயுள்ரேகையும் குறுகி நின்று விடுமாயின், உயிர்த்தண்டனை என்பதாம்.

புத்தி ரேகை சனி மேட்டுக்கு நேரே துண்டுபட்டு, சந்திர மேட்டில் நன்கு வளைந்திருக்குமாயின், சித்தப்பிரமை யுண்டாகும்.

புத்தி ரேகை சூரியமேட்டுக்கு நேரே துண்டுபட் டிருப்பின், நான்குகால்களுள்ள மிருகத்தால் அபாயமுண்டு என்பதைத் தெரிவிக்கும்.

புத்தி ரேகை இரட்டித்துக் காணப்படில், கஷ்டப்பட்டுச் சம்பாதித்துள்ள செல்வச் சேமிப்பைக் குறிக்கும்.

## புத்தி ரேகை இதர முக்கிய ரேகைகளோடு சம்பந்தப்படுவதாலுள்ள பலாபலன்கள்

உற்பத்தியில் புத்தி ஆயுள் ரேகைகள் இரண்டும் நெருங்கி முக்கோணப்படில், கூர்மையான கவனிப்பைக் குறிக்கும்.

சற்றுதூரம் புத்தி ஆயுள் இரண்டும் சேர்ந்து சென்றிருந்தால், செய்வகையில் தாமதம், தடுமாற்றம் இவைகளைக் குறிக்கும்.

புத்தி ரேகை ஆயுள் ரேகையோடு சம்பந்தப்பட்டு, இருதய ரேகையை மேல்நோக்கிச் சனி மேட்டுக்குச்சென்று, பிறகு வளைந்து யதாப்பிரகாரம் செல்லுமாயின், ஆசையினால் அழிவர் என்பதாகும்.

புத்தி ரேகை உற்பத்தியில் ஆயுள் ரேகையோடும், இருதய ரேகையோடும் சம்பந்தப்பட் டிருந்தால், மரணம் திடும் சம்பவமாய் முடியு மென்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையும், ஆயுள் ரேகையும் ஒன்றுபட்டு, பிறகு சூரிய ரேகையும் சேர்ந்து ஒரு முனையுடன் அமையுமாயின், மகா புத்திமான், தீக்ஷணிய நோக்குடையவர் என்பதாம்.

புத்திரேகையின் இறுதியில் ஆரோக்கிய ரேகைசந்திர மேட்டில் சந்தித்து சூலம்காணப்படில் (சங்கல்ப்ம்),எண்ணம் பாழ்பட்டு அல்லது பின்னப்பட்டுத் தோன்று மென்பதாம்.

புத்தி ரேகை ஆரோக்கிய ரேகையில் சம்பந்தப்பட்டு, ஆயுள் ரேகையும் உபாயமாய்க் காணப்பட்டு, அநேக சிறு ரேகைகளால் குறுக்கிட்டும், அழுத்தமான குரு மேடும் காணப்படில், தன்னை மாய்த்துக்கொள்ளும் எண்ணம் உண்டாகு மென்பதாம்.

புத்தி ரேகை துண்டுபட்டும், உடனே தொடர்ந்து சென்றிருக்குமாயின், நன்மைக்கு வந்த கஷ்டம் என்பதைக் குறிக்கும். கஷ்டம் நீடிக்காது.

புத்தி ரேகை இருதய ரேகை சம்பந்தப்பட்டு முன்னரே சனி மேட்டுக்கு நேரே துண்டுபட்டிருப்பின், காதலால் விளைந்த தொல்லை இடைவிடாது நிற்கு மென்பதாம்.

புத்தி ரேகை இருதய ரேகை சம்பந்தப்படு முன் சூரிய மேட்டுக்கு நேரே துண்டுபடுமாயின், கர்வத்தால் அல்லது மூடத்தனத்தால் விளைந்த தொல்லையைக் குறிக்கும்.

புத்தி ரேகை இருதய ரேகை சம்பந்தமின்றிப் புதன் மேட்டுக்கு நேரே துண்டுபடுமாயின், நேசத்தால் விளைந்த பல கஷ்டங்களைக் குறிக்கும்.

புத்தி ரேகை துண்டுபட்டு, இருதய ரேகையின் கிளை விதி ரேகையைக் குறுக்கிட்டுப் போயிருக்குமாயின், தார மிழப்பர் என்பதாம்.

புத்தி ரேகையும் ஆரோக்கிய ரேகையும் பட்டும்படா மல் ரோமங்களைப் போலிருந்து, விரல்களின் இரண்டாம் அங்குலாஸ்தி நீண்டுமிருப்பின், பற்கள் சொத்தையா யிருக் கும் என்பதாம்.

புத்திரேகை சனி மேட்டுக்கு நேரே இருதய ரேகை யோடு சம்பந்தப்படுமாயின், ஆபத்தான சம்பவங்கள் நேரிடு மென்பதாம்.

புத்தி ரேகை சந்திர மேட்டிலிருந்து மேல் நோக்கி இரு தய ரேகையை நோக்கிச் சென்று ஒன்றுபட்டும், இருதய ரேகை குரு மேட்டில் உற்பத்தியா யிருக்குமாயின், எதிர் பாராத சந்தோஷம், மேன்மை உண்டாகும் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகை இருதய ரேகையோடு கலந்து, குருமேட்டி லிருந்து நேரே சென்றிருந்தால், ஏக பத்தினி விரதம் அனுஷ்டிப்பவர் என்பதாம்.

## புத்திரேகை இதர சிறு ரேகைகளின் சம்பந்தத்தாலான பலாபலன்கள்

புத்தி ரேகையை அநேக சிறு ரேகைகள் குறுக்கிட் டிருந்தாலும், புத்தி ரேகையிலிருந்து சிறு ரேகை வெளித் தோன்றினாலும், தலைவலி அடிக்கடி உண்டாகும் என்ப தாம்.

புத்தி ரேகையின் இறுதியில் சிறு ரேகைகள் குறுக்கிட்டுக் காணப்படில், சித்தப்ரமைக்கு அறிகுறியாம்.

சுக்கிர மேட்டிலுள்ள சிறு ரேகைகள் புத்தி ரேகையோடுசேருமாயின், சிக்கலான தொந்தரவுகளைக் குறிக்கும்.

புத்தி, இருதயம், ஆயுள், ஐக்கியம் முதலிய ரேகைகளைச் சுக்கிர மேட்டிலுள்ள ஒரு ரேகை குறுக்கிடுமாயின், விவாக சம்பந்தமான தொந்தரவுகளைக் குறிக்கும்.

புத்தி ரேகையிலிருந்து ஒரு கிளை குரு மேட்டுக்குச் சென்று, நக்ஷத்திரப் புள்ளியுடன் நிற்குமாயின், பெருத்த அதிர்ஷ்டம்—சம்பத்து—உண்டாம் என்பதாம்.

புத்தி ரேகையின் கிளை குரு மேட்டுக்குச் சென்று, ஒரு சூலத்துடன் நிற்குமாயின், எதிர்காலத்தில் வரும் கஷ்டத்தைக் குறிப்பிடுவதாகும். இதர ரேகைகள் நன்கு அமைந்திராவிடில், சூலம் தோன்றும்.

புத்தி ரேகையின் கிளை குரு மேட்டுக் கொன்று இரண்டு சேர்ந்த முனையாகவோ, அல்லது குரு மேட்டின் உச்சியில் சூலம் காணப்படில், செல்வம் உண்டாகும் என்பதாம்.

புத்தி ரேகையின் கிளை செங்குத்தாய் சென்று சுண்டு விரலுக்கும், மோதிர விரலுக்கும் மத்தியில் சென்றிருக்குமாயின், சித்திர வேலையால் உண்டாகும் லாபத்தையும், கௌரவத்தையும் குறிக்கும்.

புத்தி ரேகையிலிருந்து ஒரு ரேகை நன்கமைந்த சூரிய மேட்டுக்குச் சென்றிருந்தால், வித்தையினு லுண்டாகும் அபார கீர்த்தியை அறிவிப்பதாகும்.

புத்தி ரேகையிலிருந்து ஒரு ரேகை புதன் மேட்டுக்குத் தங்கு தடையின்றிச் சென்றிருந்தால், செய்கின்ற தொழிலெல்லாம் லாபமும், பிரசித்தியும் என்பதைக்குறிப்பதாகும்.

புத்தி ரேகையிலிருந்து ஒரு கிளைரேகை இருதயரேகையோடு ஐக்கியப்பட்டு விடுமாயின், வினைக்கிடமான ஆபத்துண்டாம்.

புத்தி ரேகையிலிருந்து சில சிறு ரேகைகள் இருதய ரேகையைக் குறுக்கிடாமல் நின்றுவிட்டால், மற்றவர்கள் சொல்லும் யோசனைக் குட்படுபவர் என்பதாம்.

புத்தி ரேகையின் இறுதி இருதய ரேகையோடு மேல் நோக்கிச்சென்று ஐக்கியப் படுமாயின், காரண மின்றி அன்பு செலுத்தார் என்பதைக் குறிக்கும்.

## புத்தி ரேகையின் கிளைகளும் பிளவு (கப்பு) களும் அவைகளின் பலாபலன்களும்

புத்தி ரேகையின் சிறு கிளைகள் சுக்கிர மேட்டுக்குச் சென்றிருந்தால், அன்புக்குரிய காரண காரியங்களை உய்த்துணர்பவர் என்பதாம்.

புத்தி ரேகையின் உற்பத்தியில் குரு மேட்டில் மூன்று அல்லது அதற்கதிகமாக கப்பும் கிளையுமா யிருந்தால், செல்வந்தர் என்பதாகும்.

புத்தி ரேகையிலிருந்து ஒரு கிளை மேல்நோக்கி குரு மேட்டுக்குச் செங்குத்தாய்ச் சென்றிருந்தால், அபிவிர்த்தியில் மிக்க சிந்தை யுள்ளவர் என்பதாகும்.

புத்தி ரேகையின் கிளையொன்று குரு மேட்டுக்குச் சென்று, பின் சனி மேட்டை அடையுமாயின், மதப்பற்று விசேஷமா யுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையின் கிளை குருமேட்டின் அடியில் படிந்து, சனிமேட்டுக்குச் செல்லுமாயின், வாயாடி, ஆடம்பரக்காரர் என்பதாகும். இவரது காரியம் வாய்ப்பேச்சோடு நின்று விடும் என்பதாம்.

விதிரேகை நன்கமைவதோடு புத்தியின்கிளை சூரிய மேட்டுக்குச் செல்லுமாயின், செல்வவிர்த்தி யுண்டாகும் என்பதை அறிவிக்கும்.

புத்தி ரேகையின் பல கிளைகள் சந்திர மேட்டில் பரவி யிருக்குமாயின், தொழில் அபிவிர்த்தியைக் குறிக்கும்.

புத்தி ரேகையும், இருதய ரேகையும், சனி மேட்டுக்கு நேர் ரேகையும், சனி மேட்டுக்குநேரே கப்பும் கிளையுமா யிருப்பின், நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

புத்தி ரேகையின் இறுதியில் சந்திரமேட்டில் வளைந்து இரண்டு கிளையாகி, ஒன்று சந்திர மேட்டில் தொங்கியும், மற்றொன்று புதன் மேட்டையும் மேல்நோக்கிச் சென்

திருக்குமாயின், புனைசுருட்டு, புரட்டுருட்டுள்ளவர் என்பதை அறிவிப்பதாகும்.

ஆளுக்குத் தக்கபடி கை அமைப்பால் சிறுத்து விரல் மூன்ரும் அங்குலாஸ்திகள் அகலமாயும், புத்தி ரேகையின் இறுதி முனை இரண்டு சிறு கிளையாகி யிருப்பின், நம்பத் தகாதவர் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையின் இறுதி மிகச் சிறிய கிளைகளாகி, கீழ் நோக்காமலும், மேல் நோக்காமலும், சந்திர மேட்டின் மத்தியில் காணப்படில், வருங்காலச் செய்தி கூறத்தக்க தெய்வீக சக்தியுடையவர். சிலருக்கு எதிர்கால சம்பவங்கள் கனவில் கதையாகவும் தோன்றும் என்பதாம்.

புத்தி ரேகையின் இறுதிக் கிளைகள் சந்திர மேட்டில் கீழ்நோக்கிச் சென்றிருந்தால், கெட்ட எண்ண முள்ளவர் என்பதைக் குறிக்கும்.

### புத்தி ரேகையிலுள்ள சில குறிகளும் பலன்களும்

புத்தி ரேகையில் வெண்மையான புள்ளிகள் காணப் படில், அபூர்வமான விஷயங்களைக் கண்டுபிடிப்பவர் என் பதைக் குறிக்கும்.

சனி மேட்டுக்கு நேரே புத்தி ரேகையில் வெண்மை யான புள்ளிக ளிருந்தால், செல்வத்தைப் பற்றிய விவரங் களில் ஜெய மென்பதைத் தெரிவிக்கும்.

புத்தி ரேகையின் கிளைகள் சனிமேட்டுக்கு நேரே இரு தயரேகையோடு வெள்ளைப் புள்ளியிலிருந்து சேருமாயின், வித்தையில் ஜெயப் பிரதாபத்தைக் குறிக்கும்.

புதன் மேட்டுக்கு நேராக புத்தி ரேகையில் வெண்மை யான புள்ளி காணப்படில், சாஸ்திர சம்பந்தமான ஆராய்ச்சியில் வெற்றி யடைவர் என்பதாகும்.

புத்தி ரேகையில் கருப்பு அல்லது இருண்ட புள்ளி காணப்பட்டு, ஆயுள், ஆரோக்கிய ரேகைகளும் நிறமாறித் தோன்றினல், ஜுரத்துக்கான தன்மை தோன்றும்.

இரத்தப் பசையின்றிய புத்திரேகையும், அதில் கருப் புப்புள்ளியும் காணப்பட்டு ஆயுள் ரேகை உற்பத்தியில் சிறு

கிளைகளோ டிருந்தால், மூளை சம்பந்தமான கஷ்ட நோய் சம்பவிக்கு மென்பதாகும்.

நீல நிறமான புள்ளி புத்தி ரேகையிலிருந்து, அந்தப் புள்ளியிலிருந்து சிறியதோர் முக்கோணக் குறியும், செவ் வாய் மேடு பிரதானப்பட் டிருப்பின், கொலை செய்யத்தக்க எண்ண முண்டாகும் என்பதை அறிவிக்கும்.

புத்தி ரேகை அலைபோல் முன்னும் பின்னுமாய் சம் பந்த மின்றியும், நிறங்குன்றியும், நீலநிறப் புள்ளியு மிருந் தால், ஈரல் சம்பந்தமான நோயுண்டாகும் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையில் சிவப்பான புள்ளியும், ரேகை சனி மேட்டுக்கு நேரே துண்டுபட் டிருப்பின், எதிர்பாராதபடி தலையில் அடி அல்லது காய முண்டாகும் என்பதாம்.

புத்தி ரேகையில் முக்கோணக்குறி காணப்படில், எதிர் பாராத ஆபத்தைக் குறிக்கும். புத்தி ரேகை அலைகள் போலிருந்த சந்திரமேட்டில் தொங்கும் தன்மையி லிருப் பின், உயிருக்கே ஆபத்து சம்பவிக்கு மென்பதாம்.

புத்தி ரேகையில் ஒரு சூலம் தோன்றி, அதில் ஒரு கிளை முதல் விரலை நோக்கிச் சென்றிருந்தால், சிக்கலான (பின்னப்பட்ட) அபிலாஷையைக் குறிக்கும்.

புத்தி ரேகையில் நக்ஷத்திரப் புள்ளி யிருந்தால், தலை யில் காய முண்டாவதை அறிவிக்கும்.

புத்தி ரேகை குறுகியும், உற்பத்தியில் கிளைகளுடன் தோன்றி, குரு மேட்டுக்குச் சென்றிருந்தால், கர்வத்தா லழிவர் என்பதாம்.

புத்தி ரேகையில் நக்ஷத்திர மிருந்து அதிலிருந்து ஒரு கிளை குருமேட்டில் சென்றிருந்தால், எண்ணிய எண்ணம் பலிக்கும். ஜெய முண்டாகும் என்பதாம்.

புத்தி ரேகை வெகுவாய் வளைந்து சந்திர மேட்டின் அடியில் சென்று ரேகையின் இறுதியில் சூலம் அல்லது நக்ஷத்திரக் குறி காணப்படில், திடீரென தற்கொலைசெய்து கொள்வார் என்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகை சந்திர மேட்டில் வளைந்து இறுதியில் நக்ஷத்திரப்புள்ளி யிருந்தால், ஜலத்தில் மரணம் சம்பவிக்கு மென்பதாம்.

புத்தி ரேகையில் வட்டக்கோடு காணப்பட்டு, ஆரோக்கிய ரேகையின் இறுதியில் சூலமும் இருந்தால், கண் குருடு என்பதைத் தெரிவிப்பதாகும். (வட்டமான ரேகையே குருடர் என்பதற்குப் போதுமான அத்தாக்ஷி யாகுமென அநேக சாஸ்திரிகள் அபிப்பிராயப் படுகின்றனர்.)

புதன் மேட்டுக்கு நேரே புத்திரேகையில் முக்கோணக் குறி காணப்படில், சாஸ்திர ஆராய்ச்சியைக் கொண்டு அற்புதங்களைக் கண்டு பிடிப்பதில் கீர்த்தி பெறுவர் என்பதாகும்.

படம் 1:—புத்திரேகை கையில் குறுக்கே போயிருந்தால், தீர்மானமுள்ள புத்தியையும், தொழிலில் கீர்த்தியையும் குறிக்கும்.

படம் 2:—புத்தி ரேகை வெகுவாய் வளைந்திருந்தால், தீர்க்காலோசனை, நூதன யுக்தி, கற்பனை, தீவிர புத்தி கூர்மை இவைகளை அறிவிக்கும்.

படம் 3:—புத்தி ரேகை அதிகமாய் வளைந்து சந்திர மேட்டில் குறுக்கே நீண்டிருந்தால், அசாத்திய புத்தி, அளவுக்கு மிஞ்சிய யோசனை, சஞ்சல சித்தம், தற்கொலைக்கான எண்ணமும் உதிக்கு மென்பதாம்.

படம் 4:—புத்திரேகை சிறு விரலை நோக்குமாயின், தீர்மான புத்தி, முரட்டு சுபாவம், பிறரை இம்சிக்கு மெண்ணம், தன் காரியத்தில் விக்னம் செய்வோரைக் கொலை செய்யவும் துணிந்திடுவர் என்பதைக் குறிக்கும்.

படம் 5:—ஆயுள் ரேகை சம்பந்தமின்றி புத்தி ரேகை உற்பத்தியாயின், தன்னம்பிக்கை, சுறுசுறுப்பு, அவசர புத்தி இவைகளைக் குறிக்கும்.

படம் 6:—ஆயுள் ரேகையும் புத்தி ரேகையும் கொஞ்ச தூரம் உற்பத்தியில் ஒருமைப்பட் டிருந்தால், தன்னம்பிக்கையின்மை, அதிஜாக்கிரதை, நீண்ட யோசனை இவைகளை அறிவிப்பதாகும்.

## புத்திரேகையின் சித்திர விளக்கம்




படம் 7 :—புத்திரேகை உற்பத்தியிலிருந்து நேரே குறுக்கிட்டுச் சென்றிருந்தால், அபூர்வமான மூளைச்சக்தி, பிரவேசிக்கும் காரியங்களில் அதீதமாகப் பார்ப்பது. இருதய் ரேகையும் படத்திலுள்ளபடி அமையின், அதீதம் அல்லது கஷ் [illegible]

படம் 8:—புத்தி, இருதய ரேகைகள் இரண்டும் பக்கத்திலிருந்து ஒரே மாதிரி சென்றிருந்தால், சூதுவாதற்ற மனம். எல்லா விவகாரத்திலும் ஒரே எண்ணத்தோடு நீதி வழுவாது நடப்பவர் என்பதாம்.

படம் 9:—புத்தி, இருதயம், ஆயுள் இந்த மூன்றும் ஒன்ருய், அமைந்திருப்பின், எதிர்பாராத ஆபத்தையும், துர்மரணத்தையும் குறிக்கும். இத்தகையோருக்கு யோசனை குறைவு. வலுவில் கஷ்டத்தில் சிக்கி கெடுதல் செய்யும் தன்மை யுடையவராகும்.

---

# 11-வது அத்தியாயம்

## விதி ரேகை

முந்தின வியாசத்திலே புத்தி ரேகையைப்பற்றி விரிவாய் எழுதினேம். இப்பொழுது அதைப்போன்று அதி முக்கிய கர்மகாண்டத்துக்கு அடிப்படையாயுள்ள விதி ரேகையைப்பற்றி விவரிப்போம்.

இந்த விதிரேகை செங்குத்தாய் கங்கண ரேகைகளுக்கு மேல் ஆயுள் ரேகைக்குப் பக்கமாகச் சனிமேட்டை நோக்கிச் சென்றிருக்கும். விதிரேகையை கூர்ஜரதேசத்து சாஸ்திரிகள் தனரேகை, அதிர்ஷ்ட ரேகையென்று வழங்குகின்றனர். தனத்தையும் அதிர்ஷ்டத்தையும் குறிக்கக் கூடிய ரேகைகள் பிரத்தியேகமாய் முன் அத்தியாயங்களில் சொல்லி யிருப்பதை நேயர்கள் கவனித்திருக்கலாம். நமது பாரத நாட்டில் புராதன சாஸ்திரங்களை அனுசரித்து எழுதப்பட்ட நூல்களிலும், இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி, நியூயார்க் முதலான விடங்களிலிருந்து வெளியான நூல்களையும் ஆராய்ச்சி செய்ததில், விதிரேகையைக் கர்மரேகையென்றே வியாக்கியானம் செய்திருக்கின்றனர். இது மாத்திரமன்றி முக்கிய ரேகைகளின் உற்பத்தியைக் குறிப்பிடுவதிலும் அபிப்பிராயபேத மிருந்து வருகிறது. என்ருலும், அனுபவத்துக்கும் ஆராய்ச்சிக்கும் ஒத்து வருவதையே நடுநிலைமை வகித்தறிந்து உற்பத்தியைக் குறிப்பிட் டிருக்கிறோம்.

விதிரேகையை வாழ்வுக்கே அதி முக்கியமெனக்கருதி தீர்க்கதரிசிகளான மகான்கள் விரிவாய் ஆராய்ச்சி செய்திருக்கின்றனர். இந்த விதிரேகையைச் சிலர் சனிரேகையென்றும் சொல்லுகின்றனர். இஃது ஒப்புக்கொள்ளத்தக்கதே. விதி சனிபகவானல் ஆளப்பட்டு வருகிற தென்பதால் பொருத்த முடையதே. மேலும், இந்த விதிரேகை சனி மேட்டுக்கு நேராக அமைந்துளது; சந்தர்ப்பம் வாய்ப்பதைக் குறிக்கும் ரேகையென்று ஓர் ஆங்கில சாஸ்திரி கூறுகின்றார்.

"கர்மமும் பலனும்" என்பதும், "விதியும் பலனும்" என்பதும் ஒன்ருகும். விதியின்பலன் என்பது விதித்த வினைக்கான பலன் என்பதாகும். மனிதரின் பிறப்புக்கு வினை காரண மென்பர். இந்த ஜன்மத்தில் ஒருவர் அனுபவிக்க வேண்டிய பாப புண்ணிய மிரண்டையும் பாகுபடுத்தி, இந்த இரண்டையும் அறிந்து நடக்கவே புத்தி யென்னும் பெருஞ் செல்வத்தையுங் கொடுத்துள்ளார் கடவுள். விதியை ஆராயுமிடத்து, தவராஜ சிம்மமாகிய தாயுமானுரும் ஒரு கவி பாடியுள்ளார்.

"விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையிற்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை யெப்படிக் கண்டு களிப்பதே."

வினையும் பலனும் என்ருலும், வேலையும் கூலியும் என்பதே சால பொருத்த முடையதாம். விதி ரேகை ஒருவருக்கிருந்து இதர கிரகங்களின் அனுகூல மில்லையெனில், வேலைசெய்த வரை கூலிதான் கிடைக்கும். விசேஷமாய்ப் பாடுபட்டும் பாடுபட்டதற்குத் தக்கபடி பலனில்லை என்று சொல்வாருமுண்டு. இன்னும் வேலை செய்தும் கூலி கிடைப்பதில்லை எனில், இஃது எவ்வாரும். எனவே, விதிரேகை ஒருக்காலும் தனரேகை யாகாதென்பது வெளிப்படை.

### விதிரேகையின் அமைப்பு

விதிரேகை சனிமேட்டை யொத்ததாயினும், இதர கிரகங்களை நோக்கியும் செல்லும். அப்பொழுது அதற்குப் பலன் வேறு சொல்லவேண்டும்.

விதிரேகை சூரியமேட்டை நோக்கிச் சென்ருல், சித்திரவேலை, கையால் தொழில்செய்யக்கூடிய தச்சு, கொல்லு முதலிய தொழில்களைக் குறிக்கும்.

விதிரேகை மிக அழுந்தி, சிவந்த நிறமாகச் சனிமேட்டைத்தாண்டி இரண்டாவது விரலின் மூன்ரும் அங்குலாஸ்திக்குச் சென்ருல், யோக்கியமற்ற மரணம் சம்பவிக்குமென்பதாம். (9-வது படத்தைப் பார்க்க.)

விதிரேகை இருதய ரேகைக்குக் கால் சங்கிலிப்போல் அமையப் பெற்ருல், நேசத்தில் சங்கட முண்டாவதைக் குறிக்கும்.

உள்ளங்கைக்கு விதிரேகை செல்லும்போது பட்டும் படாமல் மங்கலா யிருப்பின், ஜீவிய திசையின் மத்திய பாகத்தில் கஷ்ட முண்டாவதைத் தெரிவிக்கும்.

விதிரேகையைத் தொடர்ந்து மற்ற ஒரு ரேகை எவ்வளவு தூரம் செல்லுகிறதோ, அதுவரை மற்றவர்களின் ஆதரவில் வாழ்நாள் செல்லும் என்பதாகும்.

விதிரேகை அலை போலும், சங்கிலியைப் போலும், இன்னுமொரு ரேகை கலந்து சிக்கலானது போலு மிருந்தால், சந்தோஷமற்ற வாழ்க்கையைக் குறிக்கும்.

விதிரேகை இல்லாம லிருந்தால், அவரது வாழ்க்கை அஸ்திவார மற்றது; ஆதார மற்றது என்பதாகும்.

விதிரேகை யில்லாத ஒருவர், குடும்பத்தின் கௌரவத்தினுலும், கல்வியின் மேன்மையாலும், உயர் பதவியி லிருந்து வந்ததைப் பார்த்தோம். ஆனுல், அவருடைய உத்தியோக நிலைமை நித்தியகண்டம் பூரண ஆயுசு என்பதுபோல இருந்து வந்தது. அவர் செய்த வேலையும் பற்றற்ற தன்மையைக் காட்டியது.

விதிரேகை உற்பத்தியில் பல பின்னல்களோடும், குறுக்கிட்ட ரேகைகளோடு மிருந்தால், இளமையில் தரித்திர நிலைமையைக் குறிக்கும்.

மணிக்கட்டு ரேகையிலிருந்து விதிரேகை உற்பத்தியாகித் தங்கு தடையின்றி நேரே இரண்டாவது விரலின் மூன்ரும் அங்குலாஸ்திக்குச் சென்ருல், இதர கிரக நிலை

யைக்கொண்டு பலனறிய வேண்டும். என்றாலும், 'விதிவசம்' என்பது நூதனமாகவே யிருக்கும். ஆனால், அத்தகைய ரேகையுள்ளோர் பொதுவாக மூரட்டு சுபாவத்தினாலேயே விதிவச மடங்குவர் என்பது நிச்சயம்.

மணிக்கட்டுக்குள் கீழேயிருந்து விதிரேகை உற்பத்தியானால், வாழ்வு துயரமுற்றதா யிருக்கு மென்பதாம்.

மணிக்கட்டிலிருந்து விதிரேகை உற்பத்தியாகிக் குறுகிய புத்தி ரேகையில் போய் முடியுமாயின், தொழில் அல்லது வியாபார நஷ்டத்தைக் குறிக்கும்.

சந்திர மேட்டில் விதிரேகை உற்பத்தியாகில், முதல் விரலும், மூன்றும் விரலும் சற்றே நீண்டும், சங்கைப்போல் கையு மிருந்தால், அதீதமான அருட்சத்தியின் வரப்பிரசாதி, வாக்கு பலிக்கும், தெய்வபக்தி யுண்டு என்பதாம்.

விதிரேகையைத் தொட்டு அநேக சிறு ரேகைகள் சந்திரமேட்டை நோக்கிச்சென்றால், தொடர்ந்த பயணம் என்பதைக் குறிப்பதாகும்.

விதிரேகை முக்கோணத்தில் உற்பத்தியா யிருந்தால், சிரமமான வேலையைக் குறிக்கும். விதிரேகை மறுகையிலும் அப்படியே காணப்படில், மூளையின் உழைப்பு, கஷ்டமான வேலை இவைகளால் நல்ல சந்தர்ப்பம் கிடைக்கு மென்பதாம்.

விதிரேகை புத்தி ரேகையிலிருந்து உற்பத்தியானால், பிரவர்த்தியாயின், பிரதாபம் நெடுங்காலம் சென்று உண்டாவதாகும். புத்திரேகையிலிருந்து விதிரேகை உற்பத்தியாகும்போது, 35-முதல் 37-வயதுக்குமேல் என்ற காலத்தைக் காட்டுவதாகும்.

புத்தி ரேகையிலிருந்து விதிரேகை உற்பத்தியாகிச் சனிமேட்டில் வளைந்து காணப்படில், மிக்க அபாரமான வேலை செய்வ ரென்பதாகும்.

விதிரேகை புத்தி ரேகையில் உற்பத்தியாகி, குரு, சூரியன், புதன் முதலிய கிரகங்கள் நன்கு அமையப் பெறாவிடில், மந்த புத்தி என்பதைக் குறிக்கும்.

விதி ரேகை புத்தி ரேகையிலிருந்து உற்பத்தியாகிக் குரு, சுக்கிர மேடுகள் நன்றாய் அமைந்திருந்தால், பரோபகாரமான வேலை செய்வர் என்பதாம்.

விதிரேகை சந்திரமேட்டில் உற்பத்தியாகித் தங்கு தடையின்றி, சனிமேடு வரை சென்றிருந்தால் (மேடு எல்லை கடவாதிருப்பின்), நிரந்தரமான நீடித்த சுகவாழ்வைக் குறிக்கும்.

விதிரேகை இரண்டு கைகளிலும் புத்தி ரேகையோடு பட்டும் படாமல் நின்று விடுமானால், தவறான வழியிற் சென்றதா லுண்டான துரதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

விதிரேகை இருதய ரேகையோடு நின்றுவிடுமாயின், ஏக்கம், மனத்தளர்வு இவைகளைக் குறிப்பதாகும்.

விதிரேகை இரண்டு கைகளிலும் புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், தொழில் அபிவிர்த்தியில் ஜெயத்தைக் குறிக்கும்.

விதிரேகை துண்டு படுவதற்குத் தக்கபடி சங்கட முண்டு; அல்லது மாறுத லுண்டு.

## விதிரேகையோடு இதர ரேகைகள் சம்பந்தப்படுவதா லுண்டாகும் பலாபலன்கள்

அநேக சிறு ரேகைகள் விதிரேகையைக் குறுக்கிட்டிருந்தாலும், அல்லது துண்டுபட்டிருந்தாலும், தொடர்ந்த துரதிர்ஷ்ட மாகும்.

விதிரேகை, ஆயுள்ரேகை இரண்டையும், சிறு ரேகைகள் குறுக்கிட்டிருந்தால்,—எத்தனை குறுக்கிட்டுள்ளனவோ, அத்தனை—துன்பம், துயரம், மனக்கவலை முதலியன என்பதாகும்.

சுக்கிர மேட்டிலிருந்து ஓர் அழுத்தமான ரேகை விதிரேகையைத் தொட்டிருந்தால், அளவுக்கு மிஞ்சிய காம ஆசை. மற்றுமொரு சிறு ரேகை தொடர்ந்திருக்குமாயின், ஆசைப்பட்டதால் ஏற்பட்ட கஷ்டமும், அந்தக் கஷ்டத்தின் முடிவு நல்ல சுகவாழ்வைக் கொடுக்கு மென்பதாம்.

படம் 1:—மணிக்கட்டிலிருந்து விதிரேகை உற்பத்தியாகி, இரண்டாவது விரலை நோக்கிச் சென்றிருக்கிறது. விதிரேகை தங்கு தடையின்றி யிருப்பதோடு, இதர முக்கிய ரேகைகளும் நன்கு அமைந்திருந்தால், திடகாத்திரமும், வசீகரமான தோற்றத்தையும் குறிக்கும், எடுத்த காரியங்களில் பலித முண்டு.

## விதிரேகையின் வேறுபாடுகள்.




முதல் விரலை நோக்கிச் சென்றிருந்தால், அல்லது விதி யின்கிளை ரேகை சென்றிருந்தால் (புள்ளிக்கோடு). ஆட்சி புரியும் கௌரவ ஸ்தானத்தை அடைவர்.

மூன்ருவதான மோதிர விரலை விதிரேகை நோக்கிச் சென்றிருந்தால் (புள்ளிக்கோடு), பொதுவான வாழ்க்கையில் கீர்த்திப் பிரதாபம் உண்டாவதை முன்னதாய் அறிவிக்கும். வக்கீல், தேசத்தலைவர், நாடகநடிகர், பிரசங்கி முதலானேர்களாயின், வெகு பிரசித்தி யுண்டு. குரு மேட்

டுக்கு விதி ரேகை செல்வதால், பொறுப்புள்ள ஆட்சியும், கௌரவமும் மிக்க உண்டாகும். அதாவது, தேசத்தலைவர், அதிபதி, இராஜா, ஜமீன்தார், கவர்னர், கவர்னர் ஜனரல், மற்றும் தொழில் தலைவர், அதிகாரி, அபிவிர்த்தியுள்ள எஜமானர் முதலானோர்களுக்கு மேற் சொன்ன பலன்கள் பலிதமாம்.

படம் 2:—விதி ரேகை இரண்டு துண்டாகக் காணப் படில், அந்தக் காலத்தில் பெருங் கஷ்டத்தையும், அழிவை யும் முன்னெச்சரிக்கையாய் அறிவிப்பதாகும். உள்ளங்கை மத்தியில் அவ்வித மிருப்பின், சுமார் 35-வயதைக் குறிக் கும். (ஆயுள்) ரேகையில் வயதைக் குறிக்கும். படத்தைப் பார்க்கவும்.

படம் 3:—விதி ரேகை ஆயுள் ரேகையோடு கலந்து போயிருந்தால், இளமையில் மற்றவர்களின் நன்மைக் காகப் பாடுபடுவதைக் குறிக்கும். இத்தகைய ரேகை அமைப்பு தன்னலங்கருதாத ஸ்திரீ புருஷர்களிடம் காணப் படும். அதாவது, பெற்றோர்களுக்காவது இனத்தார்களுக் காவது உழைக்க நேரிடும். இளமையில் விவாகம் செய்து கொள்வோர் கைகளிலும் படத்திற் கண்டபடி ரேகை அமையும்.

படம் 4:—விதி ரேகை சுக்கிர மேட்டில் உற்பத்தியாகி' ஆயுள் ரேகையைக் குறுக்கிட்டுச் சென்று, புத்திரேகையும் நன்கமையாவிடில், ஆசை வழிபட்ட வாழ்க்கை என்ப தாகும். மனைவி மூலமாக செல்வம் வந்து சேரும்.

படம் 5:—விதி ரேகை சந்திர மேட்டின் இறுதியி லிருந்து உற்பத்தியாயின், வாழ்க்கையின் ஆரம்பத்தி லேயே தனிப்பட்ட பொறுப்பு உண்டாகும். மற்றவர்களுக் காக ஒரு சிறிதும் நலம் செய்ய இணங்கார். புத்திரேகை வளைவின்றி நீளமாயிருப்பதே முதற் காரணமாகும். எவ்வ ளவுக்கு விதி ரேகை சந்திர மேட்டின் அடிமட்டத்தில் உற் பத்தி யாகிறதோ அவ்வளவுக்கு, குடும்பத்தாராலும், மற் றும் எவராலும் வசப்படுத்த முடியாதென்பதாம்.

படம் 6:—விதிரேகையில் தீவு காணப்படில், துண்டு (பட்டாலுள்ள) அவ்வளவு கெடுதலுண்டாகாது. அந்தத்தீவு மறையும்வரை, கஷ்டம், மனோசக்தியின் குறைவு, உத்தி யோக நீக்கம் இவைகளுண்டாம்.

படம் 7,—விதிரேகை இரண்டுபட்டு முன்னும் பின்னுமாக அமைந்திருந்தால், அதாவது, ஒன்று நின்றுவிடுமுன் மற்றொன்று தொடர்ந்திருந்தால், கெடுதல் யாதுமில்லையானாலும் முற்றிலும், செய்தொழிலில் மாறுதலுண்டு. தொடர்ந்த ரேகை நன்கமைந்திடில், மிக்க நலந்தரும் என்பதாகும்.

படம் 8:—விதிரேகை புத்தி ரேகையில் நின்று, புத்தி ரேகையின் மற்றோரிடத்திலிருந்து புதிதாக உற்பத்தியானால், 38-வயதுக்குமேல் 40-வயதுக்குள் இடமாற்றம், சொற்ப கஷ்டம், மனைவியாகுலம் இவைகளைக் குறிக்கும்.

விதிரேகையின் கிளை, கப்பு, குறிகள் முதலியன




விதிரேகையின் கிளைகள் இருபக்கமும் கீழ்நோக்கியிருக்குமாயின், அசாதாரண தொந்தரவைக் குறிப்பதாகும்.

விதிரேகையின் கிளையொன்று சூரிய மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், செல்வப்பெருக் குண்டாம்.

விதிரேகையின் உற்பத்தியில் குறுக்கிட்ட சிறு ரேகை காணப்படில், இளமையிலுள்ள வறுமையைக் குறிக்கும்.

விதிரேகை இருதய ரேகையைச் சேர்வதன்முன் சங்கிலிபோல் பின்னலாக விருந்தால், இதுவும் ஒருவித தொந்தரவைக் குறிப்பதாகும்.

விதிரேகையின் இறுதியில் சூலமும், புதன் மேட்டில் நெருப்புபட்ட தழும்புபோலு மிருப்பின், தூர்மரணத்தைக் காட்டுவதாம்.

நக்ஷத்திரக் குறிகள் விதிரேகையி லிருந்தால், ஆபத்துக் குரிய பயமுறுத்தல் உண்டாகும்.

விதிரேகையின் இறுதியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சந்திரமேட்டில் ஒரு நக்ஷத்திரக் குறியும் இருந்தால், உயிரை மாய்த்துக் கொள்ளும் எண்ண முண்டாம்.

விதிரேகையின் இறுதியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், ஆயுள் ரேகையின் இறுதியில் ஒரு நக்ஷத்திரக் குறியுமாக இரண்டு கைகளிலும் காணப்படில், பாரிசவாயுவினுல் ஆயுள் முடிவென்பதைக் குறிக்கும்.

விதிரேகையில் ஒரு தீவும், அதன் கப்புகள் சுக்கிர மேட்டுக்கும், இருதய ரேகைக்கு மத்தியில் காணப்படில், தாரத்தைத் தள்ளிவைப்பர் என்பதைக் காட்டும்.

குறிப்பு :—விதிரேகை அல்லது வினைப்பயன் முக்கியமாய் உலக வாழ்க்கையிலுள்ள முன்னேற்றத்தையும், நிலைமையின் ஏற்றத் தாழ்வையும் விளக்குவதாகும். அவரவர் நிலைமைக்கு ஏற்றவாறு விதிரேகை, ஆயுள் ரேகையிலிருந்து அல்லது மணிக்கட்டு, உள்ளங்கை, சந்திரமேட்டின் வெளி முதலான விடங்களிலிருந்து உற்பத்தியாகும்.

விதிரேகை ஆயுள் ரேகையிலிருந்து உற்பத்தியாயின், தன் முயற்சி, தன் பலம் கொண்டு முன்னேற்ற மடைவதைத் தெரிவிப்பதாகும்.

இரட்டையான விதிரேகை அமைந்திருந்தால், மிகச் சிறப் புடையதாகும். என்ருலும், இரண்டும் வெவ்வேறு கிரகமேட்டை நோக்கிச் சென்றிருக்க வேண்டும்.

விதிரேகை யில்லாததைப் பற்றிய பலனை முன்னுல் எழுதி யிருக்கிறோம். அவர்களின் வாழ்வு உண்டு, உறங்குவதே யாம். வாழ்க்கை யந்திரச்செயலாகும். சந்தோஷத்தை யாவது, துக்கத்தையாவது உணர்வார்களென்று சொல்ல முடியாது. சுகதுக்கம் கலந்ததே வாழ்க்கை.

இனி அடுத்த வியாசத்தில் அதிர்ஷ்ட ரேகையைப் பற்றி விவரிப்போம்.

# 12-வது அத்தியாயம்

## அதிர்ஷ்ட ரேகை அல்லது சூரிய ரேகை




இதற்கு முன் சூரிய மேட்டைப்பற்றி இரு முறை சொல்லியிருப்பது நமது வாசகர்களுக்கு ஞாபக மிருக்கலாம். சூரிய மேட்டுக் குரித்தான ரேகையும், முக்கிய ஏழு ரேகைகளில் ஒன்றாகும். இதனை "தீக்ஷணிய" ரேகை

யென்றும் சிலர் சொல்லுகின்றனர். இந்த சூரிய ரேகை அநேக விஷயங்களுக்கு ஆதாரமா யிருக்கிறது. வித்தை, கல்வி, பேசுந்திறமை, வாக்கு பலம் காரியசித்தி இவைகள் வெகுவாய் இந்த சூரிய ரேகையைப் பொருத்திருக்கின்றன. பொதுவாய்த் தனரேகை அல்லது அதிர்ஷ்ட ரேகை என்றும் இதைச் சொல்லுவார்கள். பூமிக்கு சூரியன் எவ்வளவு அத்தியாவசியமோ, அப்படியே ரேகையிலும், முக்கியமான விவரங்களைப் படத்தில் விவரித் திருக்கிறோம்.

படம் 1:—சூரிய ரேகை மணிக்கட்டின் மேற்பாகத்திலிருந்து உற்பத்தியாகி, மோதிர விரலை நோக்கிச் சென்றிருப்பதைக் கவனியுங்கள். இப்படி ஒருவருக் கமைந்திடில், எடுத்தகாரியத்திலெல்லாம் வெற்றி. விருத்தியுள்ள அதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

படம் 2:—சூரிய ரேகை சுக்கிர மேட்டில் உற்பத்தியாகி, மோதிர விரலை நோக்கிச் சென்றிருந்தால், வாழ்க்கைத் துணைவரால் வரும் பெரும் சம்பத்தையும், ஜெயத்தையும் அறிவிப்பதாகும்.

படம் 3:—சூரிய ரேகை சந்திர மேட்டின் வெளியிலிருந்து உற்பத்தியாகி, மோதிரவிரலை நோக்கிச் சென்றிருந்தால், பொதுஜன ஆதரவிலிருந்து எதிர்பார்க்கப்படும் அதிர்ஷ்டத்தைக் குறிப்பதாகும். அதாவது, நாடக நடிகர், சங்கீத வித்வான், சித்திர வேலையாளர் முதலானவர்களைப் பற்றியதாகும். முதல் படத்திலுள்ளது போல் அவ்வளவு அதிர்ஷ்டத்தைக் குறிக்காது.

படம் 4:—விதிரேகையிலிருந்து சூரியரேகை உற்பத்தியாகி, மோதிர விரலை நோக்கிச் சென்றிருந்தால், அந்தக் கால முதல் அதிர்ஷ்டத்தை ஊர்ஜிதப் படுத்துவதாயும், ரேகை தங்குதடையின்றி யிருந்தால், தொடர்ந்த அதிர்ஷ்டமாகும்.

படம் 5:—சூரிய மேட்டில் நாலைந்து சிறு ரேகைகள் அமையப்பெறின், பல சிறிய தொழில்களைச் செய்து அதிர்ஷ்டத்தை அடைவர். ஆனால், ஒற்றை நீண்ட ரேகைக்குச் சமத்துவ மாகாது.

படம் 6:—சூரிய ரேகை புத்தி ரேகையிலிருந்து உற்பத்தியாகிச் சென்றிருந்தால், வாழ்வின் மத்திய காலத்தில்

அதிர்ஷ்ட முண்டாகும் அதுவும் புத்தியின் பலத்தைக் கொண்டதாகும்.

படம் 7:—சூரிய ரேகை துண்டுபட்டு விடுமானுல், அந்தக் காலத்தில் (குறித்த காலம்வரை) எல்லா சம்பத்தையும் இழந்து கஷ்டப்படுவர். குறித்த காலம் கடந்த பிறகு எல்லாம் நன்மையாகி விடும். தீவு காணப்படில், துண்டு படுவதாலுள்ள அவ்வளவு கஷ்டம் உண்டாகாது. என்ருலும், தீவுக் குறி பின்னுல் நேரிடக்கூடியசங்கடம், பொதுஜன வாழ்வில் கௌரவத்தை இழத்தல் முதலியவைகளை எச்சரிப்பதாகும்.

படம் 8:—சூரிய ரேகையிலிருந்து கிளைகள் உற்பத்தியாகி, இதர கிரக மேடுகளுக்குச் சென்றிருந்தால், அந்த கிரகங்களின் சிறந்த பலன் குறிப்பதாகும்.

ஒரு கிளை புள்ளிக்கோடு குருமேட்டுக்குச் சென்றிருப்பதால், மற்றவர்களை அடக்கி ஆளுங் கீர்த்தியைக்குறிக்கிறது.

மற்ரெரு கிளை சனி மேட்டுக்குப் போயிருப்பதால், பிரதாபத்தையும், பெருங் கீர்த்தியையுங் குறிப்பதாகும்.

சூரிய மேட்டுக்கு இன்னெரு கிளை போயிருப்பதால், கௌரவம், பொதுஜன வாழ்க்கையில் கீர்த்தி இவைகளைக் குறிக்கிறது.

இன்னுமொரு கிளை புதன் மேட்டுக்குப் போயிருப்பதால், கைத்தொழில், வியாபாரம், சாஸ்திரம், இன்னும் அனுபவ மார்க்கங்களிலும் ஜெயப் பிரதாபத்தைக் குறிக்கிறது.

சூரிய ரேகை பொதுவாக புத்திக் கூர்மையைக் குறிப்பதாக ரேகை சாஸ்திர மேதாவிகள் கூறுகின்றனர்.

சூரிய ரேகை இரண்டு கையிலும் காணப்படில், நிச்சயமான ஜெயத்தைக் குறிக்கிறது.

சூரிய ரேகை தங்குதடை அதாவது வெட்டு, பிளவு, தீவு யாது மின்றி யிருந்தால், செல்வப் பெருக்கையும், செல்வாக்கையும் குறிக்கும்.

உள்ளங்கை குழி விழுந்து, விரல்கள் முறுக்கினுற் போலிருந்து சூரிய ரேகையும் நீண்டு சென்றிருக்குமாயின், புத்தியும் யுக்திசாதனங்களும் தீய வழிக்கே உபயோகமாகு மென்பதைத் தெரிவிப்பதாகும்.

சூரிய ரேகை பட்டும் படாமல், வெளுத்தாப்போல் மங்கியிருந்தால், சித்திர வேலையில் நிபுணத்துவ மிருப்பி னும், அதைச் செலுத்தப் போதுமான சக்தி யின்மையை அறிவிப்பதாகும்.

சூரிய ரேகை நன்கு அழுந்தியிருக்க அமையப்பெற்று குருமேடும் ஒத்திருந்தால், பெரிய மனிதர்களின் நட்பைக் குறிப்பதாம்.

சூரிய ரேகையில் நக்ஷத்திரக்குறியிருப்பின், புத்தியினு லுண்டாகும் கீர்த்தியைத் தெரிவிக்கும்.

சூரிய ரேகையில் அநேக சிறு ரேகைகள் குறுக்கிட் டிருந்தால், தடுமாற்றத்தைக் குறிக்கும். (இதர கிரகங்களின் நிலைமையைக்கொண்டு தீர்மானிக்க வேண்டும்.)

நன்ருயமைந்துள்ள சூரியரேகையோடு விதிரேகையும், குருமேடும் ஒத்திருக்குமானுல், அபீஷ்டத்தைக் குறிக்கும்.

சூரிய ரேகை இரண்டு கைகளிலும் இருந்து, புத்தி ரேகை தொங்கலாக வளைந்தும், இரண்டாவது மூன்ருவது விரல்கள் ஓரளவில் அமைந்திருந்தால், சூதாட்டத்தை விரும்புவர் என்பதாம்.

அநேக துண்டுபட்ட சூரிய ரேகையிலிருந்தும், அது இல்லா திருப்பதே மேலாகும். இதனுல் லாபமு மில்லை; நஷ்டமு மில்லை.

சூரிய ரேகை பதிந்தும் பதியாமலு மிருந்து, ஆரோக் கிய ரேகையில் ஒரு தீவும் காணப்பட்டு, விதிரேகை சில சிறு ரேகைகளால் குறுக்கிட்டு மிருந்தால், செல்வத்தை யெல்லாம் பலரறிய இழப்பர் என்பதாம்.

## சூரிய ரேகையோடு சம்பந்தப்பட்ட இதர ரேகைகள்

சூரிய ரேகையில் ஐக்கிய ரேகை குறுக்கிட்டிருந்தால், பொருத்த மற்ற விவாகத்தால் செல்வாக்கை யிழப்பர் என் பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையின் கிளை சூரிய ரேகையோடு சம்பந்தப் படுமாயின், ஓர் அபூர்வ ஜெயத்தைக் குறிப்பதாகும்.

சனி மேட்டிலிருந்து ஒரு ரேகை சூரிய ரேகையில் குறுக்கிடுமானல், செல்வத்துக் குறியாக வருவா யின்மையையும், அதனல் தொழில் பிரசித்தியாகா திருப்பதையும் குறிக்கும்.

சூரிய ரேகை அலைபோல் காணப்படில், தவருன வழியில் வரும் செல்வத்தை அறிவிப்பதாகும்.

இரட்டித்த சூரிய ரேகைகள் நன்கு பதிந்திருக்குமாயின், கீர்த்தியையும், சொல்லுக் கடங்காத அதிர்ஷ்டப் பெருக்கையும் குறிப்பதாகும்.

சூரிய ரேகையில் புதன் ரேகை குறுக்கிட்டிருந்தால், புத்தியின் தடுமாற்றத்தா லுண்டான அபஜெயத்தைக் குறிப்பதாம்.

### சூரிய ரேகையின் கப்புகள், கிளைகள், குறிகள் முதலியன

சூரிய ரேகை இருதய ரேகையிலிருந்து உற்பத்தியாகி, இறுதி கூர்மையான கப்புகளாகத் தோன்றினல், பிரதாபம், செல்வப் பெருக்கு முதலியன புத்தியின் பலத்தால் தானே சம்பாதித்தவை என்பதைக் குறிக்கும்.

சூரிய ரேகையிலிருந்து மூன்று மெல்லிய கிளைகள் உற்பத்தியாகி, இறுதியில் வளைந்து நிற்குமாயின், பெருஞ் சொத்துக்கு ஆதாரமின்றி ஆசைப்படுவர் என்பதாகும்.

சூரிய ரேகை சமமாக மூன்று கிளைகளாகி, ஒன்று புதன் மேட்டுக்கும், மற்ளுென்று சனிமேட்டுக்கும் போயிருந்தால், பெருங் கீர்த்தியும், பெருவாழ்வு முண்டென அறிவிக்கும்.

சூரிய ரேகை இருதய ரேகையோடு சம்பந்தப்படுகின்ற விடத்தில், கருப்புப் புள்ளி காணப்படில், அந்தக் காலத்தில் குருட்டுத் தன்மை அடைவர் என்பதாம்.

சூரிய ரேகைக் கருகில் சூலமிருந்தாலும், அல்லது ரேகையை ஒட்டிக்கொண் டிருந்தாலும், பக்தி சிரத்தையுடையவ ரென்பதாகும்.

சூரிய ரேகையின் இறுதியில் ஒரு நக்ஷத்திரக் குறி காணப்படில், பரோபகாரம் அல்லது மற்றவர்களின் உதவியாலான லாபத்தைக் குறிக்கும்.

சூரிய ரேகையில் தீவு கண்டு, நோய்க்குரிய அடையாளமும் ஆயுள் ரேகையில் காணப்படில், இருதயரோக முண்டாகும் என்பதை முன்னதாய் அறிவிப்பதாகும்.

---

# 13-வது அத்தியாயம்

## ஆரோக்கிய ரேகை

ஆரோக்கிய ரேகையைப் பற்றி வெளி நாடுகளில் விசேஷ ஆராய்ச்சி காணப்படவில்லை. கூீரோ என்ற ஆங்கில மேதாவி ஆரோக்கிய ரேகை கையில் இல்லாதிருப்பதே நலமென்று அபிப்பிராயப்பட்டிருக்கிறார். அமெரிக்கா தேச பிரபல ரேகை சாஸ்திரிகள் நோய்க்குரிய காரணங்களை இதிலிருந்து நிச்சயிக்கலா மென்று சொல்லுகின்றனர். கூீரோ இதை உத்தேசித்தே இந்த ரேகை இல்லாதிருப்பது நலமெனக் கருதினர் போலும்; பிரபஞ்சரேகை சாஸ்திரிகள் முக்கியமான ஏழு ரேகைகளில் ஆரோக்கிய ரேகையும் ஒன்றென எழுதி யிருக்கின்றனர். வங்க தேசத்திலுள்ள ஒரு ஆராய்ச்சிக்காரர் ஆரோக்கிய ரேகையை அதிர்ஷ்ட ரேகை என்று வியாக்கியானம் செய்திருக்கிறார். இம்மட்டோடன்றி, ரேகைகளோடுங் கலந்து விசேஷ பலன்களைக் குறித்திருக்கிறார்.

ஆரோக்கிய ரேகை பொதுவாக ஆயுள் ரேகையின் இறுதிக் கடியிலாவது, அல்லது ஆயுள் ரேகையிலிருந்தாவது உற்பத்தியாகி சந்திர மேட்டின் வெளியில், அல்லது உள்ளங் கையிலும், அல்லது புதன் மேட்டை நோக்கியும் போய் நின்றுவிடும்.

இந்த ரேகை சிலரிடத்தில் காண்பதரிது. இல்லாதிருப்பின், வரப்பிரசாதமென மகான் ஜெர்மெயின் என்ற தீர்க்கதரிசி எழுதி யிருக்கின்றனர்.

இந்த ரேகை தேகாரோக்கியத்தைக் குறிப்ப தென்பதில் சந்தேகமில்லை. இது ஆயுள் ரேகையோடு சம்பந்தப்படாதிருந்தால், தீர்க்காயுளைக் குறிப்பதாகும்.

ஆங்கில மேதாவியாகிய கூீரோ முதற்கொண்டு அவரைப் பின்பற்றிய அவரது நூல்களைக் கற்றுணர்ந்து இந்தி

யாவில் பிரவிர்த்தி செய்வோரும், ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையில் எந்தப் பாகத்தில் உற்பத்தியாகிறதோ, அந்தக் காலத்தில் ஆயுள் முடிவைக் குறிக்கின்றனர். இது எமது அனுபவத்துக்குக் கொஞ்சமும் பொருத்தமில்லை. ரேகை சாஸ்திரம், சாமுத்ரிகா லக்ஷணம் என்னும் சாஸ்திரத்தின் ஒரு பகுதி அல்லது அத்தியாயம் என்று ஏற்கனவே எழுதி யிருப்பது வாசகர்கள் மறந்திருக்க மாட்டார்கள். சாமுத்ரிகாலக்ஷண சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்து, ரேகை சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்து, ரேகை சாஸ்திரத்தை மாத்திரம் அநேக மேற்கோள்களுடன் நிரூபிக்கும் வங்கநாட்டு சாஸ்திரி ஆரோக்கிய ரேகையை அதிர்ஷ்ட ரேகை என்று சொல்வதைத் தள்ளற்பாலதன்று. ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையில் உற்பத்தியானாலும், அந்தக் குறித்த காலம் கழித்து வாழ்ந்துவரும் அநேகரைப் பார்த்து வருகிறோம்.

ஆரோக்கிய ரேகை சந்திர மேட்டில் ஒதுங்கி நீண்டு அமைந்திருந்தால், கடல் கடந்து செல்லும் பல பிரயாணங்களைக் குறிக்கும்.

செங்குத்தாய் தங்கு தடையின்றி யிருப்பதோடு, புத்தி ரேகையும் வளைவின்றிக் குறுக்கே போயிருந்தால், நல்ல ஞாபக சக்தியைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை மிக மெல்லியதாயும், ரேகை தனித்த ஒரு நிறமாகவும், ஆயுள் ரேகையும் அப்படியே இருக்குமாயின், ஜுரம் கொண்ட நிலைமை யிருக்கும் என்பதைத் தெரிவிக்கும்.

ஆரோக்கிய ரேகை அலைபோலும், தொடர்ச்சியின்றிப் பட்டும் படாமலிருந்து, புத்தி ரேகையும் மெல்லிய தன்மையிலிருந்தால், அஜீரண நோயைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை வளைந்து வளைந்து போயிருந்தால், கடும் பித்தத்தைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை நீளமாகவும் அலைபோன்றுமிருந்து, அதைப் போலவே விதிரேகையும் அமைந்திருந்து, எல்லா விரல்களிலும் இரண்டாவது அங்குலாஸ்தி மற்றவைகளைவிட நீளமா யிருந்தால், பற்களெல்லாம் சொத்தையாயிருக்கு மென்பதைக் குறிக்கும்.

கையிலுள்ள முக்கிய ரேகைகளெல்லாம் பலஹீனமாய் அதாவது மெல்லிதாயிருந்து, ஆரோக்கிய ரேகையும் பட்டும் படாமல் அமைந்திருந்தால், பக்கவாத முண்டாகும் என்பதாம்.

புத்தி ரேகையும் ஆரோக்கிய ரேகையும் மெல்லியதாயிருந்து, இறுதியில் சூல மிருப்பின், பொதுவாய் பலஹீனமுள்ளவர் என்பதை அறிவிக்கும்.

ஆரோக்கிய ரேகையின் உற்பத்தியில் சிகப்புப் புள்ளியிருந்தால், இருதயத் துடிப்பு உண்டாவதைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையைத் தொடும்போது சிகப்பு நிறம் காணப்படில், மூர்ச்சா ரோக முண்டாவதை அறிவிக்கும்.

ஆரோக்கிய ரேகை மஞ்சள் நிறமாய் இருந்தால், சரீரத்தில் பலநோய் காணப்படு மென்பதாம்.

சூரிய மேட்டை நோக்கி ஆரோக்கிய ரேகை செல்லுமாயின், நல்ல சம்பத்து உண்டாயிருப்பதைத் தெரிவிப்பதாகும்.

புதன் மேட்டை நோக்கிச் சென்றால், நீண்ட ஆயுளைக் குறிப்பதாகும்.

ஆரோக்கிய ரேகை, செவ்வாய் மேட்டுக்குக் கீழே, சந்திரமேட்டில் சக்கரம்போல் வளைந்திருந்தால், ஞான திருஷ்டி யிருப்பதை அறிவிக்கும். (இதை அருள் ரேகையென்றும் சொல்ல வேண்டும்.)

### ஆரோக்கிய ரேகைக்கும் இதர ரேகைகளுக்கு முள்ள சம்பந்தம்

ஆயுள் ரேகையிலிருந்து ஆரோக்கியரேகை உற்பத்தியாகி, புத்திரேகை இருதய ரேகையோடு சம்பந்தப்பட்டிருக்குமாயின், வலிப்பு நோய் உண்டாவதைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை ஆயுள்ரேகையோடு சம்பந்தப்பட்டு நீலம் சிகப்பு நிறப் புள்ளிகளோடு ஒழுங்கீனமாய் அமைந்திருந்தால், இருதயரோக முண்டாகும்.

ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையைக் குறுக்கிடும்போது சூலமாய் காணப்பட்டு இரண்டு கைகளிலும் காணப்படில், ரகஸ்யமாய் விளங்கத்தக்க சாஸ்திரங்கள், அதாவது

ஜோதிடம், ரேகைசாஸ்திரம், வான சாஸ்திரம் இவைகளுள் ஒன்றில் விற்பன்னராய் விளங்குவர் என்பதாம்.

ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையோடு ஒன்றுபட்டும், ஆயுள் ரேகையில் குறுக்கிட்ட பல சிறு ரேகைகள் காணப்படில், மூளை சம்பந்தமான நோயுண்டாகு மென்பதை அறிவிக்கும்.

சந்திரமேட்டில் ஆரோக்கியரேகை புத்திரேகையில் குறுக்கிட்டு போகுமிடம் சூலமாகத் தோன்றில், அளவுக்கு மிஞ்சிய எண்ணம்—யோசனை—கற்பனுசக்தி இவைகளைக் குறிக்கும்.

ஆரோக்கிய, ஆயுள், புத்தி ரேகைகள் ஆகிய மூன்றும் சிறியதோர் முக்கோணமாய்க் காணப்படில், சாஸ்திர ஆராய்ச்சியில் மிகுந்த உற்சாகமும், தெய்வானுக்கிரகமும் உண்டு. மூன்றும் ஒழுங்கானமுறையில் முக்கோணமாயின், ஸூக்ஷ்மமான ஞான திருஷ்டியைக் குறிப்பதாகும்.

இரட்டையான ஆரோக்கிய ரேகைகாணப்படில், நல்ல தேகாரோக்கியத்தையும் தேக வண்மையையும் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகையில் நக்ஷத்திரக் குறி காணப்படில், சந்ததியற்ற தன்மையைக் குறிப்பதாகும்.

ஆயுள், புத்தி, ஆரோக்கிய முதலிய ரேகைகளால் உண்டான முக்கோணத்துக்குள்ளே நக்ஷத்திரக் குறியிருந்தால், குருட்டுப் பார்வையை அறிவிக்கும்.

ஆரோக்கிய ரேகை சுக்கிர மேட்டிலிருந்து உற்பத்தியா யிருந்தால், தூர்த்த அல்லது கற்புநிலை தவறக் கூடியவர் என்பதாம்.

ஆரோக்கிய ரேகை புதன் மேட்டுக்குச் சென்றிருந்தால், நல்ல அதிர்ஷ்டம், வாக்கு வன்மை, சிறந்த புத்தியுள்ள மேதாவி அல்லது இராஜ தந்திரியாவர் என்பதைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை சூரிய மேட்டுக்குச் சென்றால், செல்வம் பொங்கு மென்பதாம்.

படம் 1:—ஆரோக்கிய ரேகையின் உற்பத்தியையும், எல்லையையும் காட்டுகிறது.

படம் 2:—ஆயுள்ரேகை துண்டு துண்டாகவோ, சங்கிலியைப் போன்றே இருந்து, ஆரோக்கிய ரேகை அழுத்த,




மாய்ப் பதிந்திருந்தால், ஆயுள் காலமெல்லாம் நோய் நொடிகள் இல்லாதிருக்காது. ஒருக்கால் ஆரோக்கியமிருந்தாலும், துர்ப்பலத்தைக் குறிப்பதாகும்.

படம் 3:—ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையினின்று உற்பத்தியைக் காட்டுகிறது. சந்திப்பில், அந்தக் காலத்தில் கடுமையான நோயுண்டாகுமென எச்சரிக்கை செய்வதாகும். இது விஷயமாக வுள்ள அபிப்பிராய பேதங்களையெல்லாம் சென்ற வியாசத்தில் எழுதியிருக்கிறோம்.

படம் 4:—புத்தி இருதய ரேகைகளின் மத்தியில் ஆரோக்கிய ரேகையின் தீவு காணப்படில், நாசி, தொண்டை சம்பந்தப்பட்ட நோய் உண்டாகு மென்பதைக் குறிக்கும்.

படம் 5:—ஆரோக்கிய ரேகையின் தீவு புத்தி ரேகையில் மேலும் கீழுமாய் அமைந்திருந்தால், மார்பு நோய், ஈரல் நோய் முதலியன உண்டாகு மென்பதாம். விரல், நகங்கள் முக்கியமாய் பாதங் கொட்டையைப்போல் அமைந்திருக்கும்.

படம் 6:—ஆரோக்கிய ரேகை உற்பத்தியில் இரண்டு கிளைகளாகி, ஒன்று ஆயுள்ரேகையைக்குறிக்கிட்டு (இரண்டு துண்டாகி) சுக்கிர மேட்டுக்குள் சென்றிருக்குமாயின், மரண பயம் உண்டென்பதை அறிவிக்கும்.

படம் 7:—ஆரோக்கிய ரேகை உற்பத்தியில் சந்திர மேட்டின் அடிவாரத்தைச் சற்றே வளைந்து, ஆயுள் ரேகையை நோக்காதிருப்பின், எவ்வித நோய் வரினும் உடனே நீங்கும். பொதுவாய் நீண்ட ஆயுளைக் குறிப்பதாகும்.

படம் 8:—ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையோடு நின்று முக்கோணத்தைப் புலப்படுத்துமாயின், ஜோதிடம், ரேகை சாஸ்திரம் அல்லது தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியைக் குறிப்பதாகும்.

---

# 14-வது அத்தியாயம்

## அருள் ரேகை அல்லது ஞான திருஷ்டி




இந்த அருள் ரேகை சந்திரமேட்டில், செவ்வாய் மேட்டின் அடியில் செங்குத்தாய் குட்டையாகவாவது, நீளமாகவாவது அமைந்திருக்கும். புத்தி ரேகைக்கும், அருள் ரேகைக்கும் நெருங்கிய சம்பந்தமிருப்பதால், அருள் ரேகை புத்தி ரேகையில் படிந்து சந்திரமேட்டில் விளங்கும்.

அநேக ரேகை ஆராய்ச்சிக்காரர் புத்தி ரேகை நீண்டு சந்திரமேட்டில் யானை துதிக்கையைப்போல் அமைந்திருந்தால், அருள் ரேகை என்றும், ஞான ரேகை என்றும் சொல்லுகின்றனர். புத்தி ரேகை லௌகீக விவகாரத்தைச் சேர்ந்தது. புத்திக்கெட்டிய நியாயப்படி மனிதர்கள் நடந்து கொள்கின்றனர். ஞானிகள் சுத்த சித்த விருத்திப் படி நடக்கின்றனர்.

அருள் ரேகையும் குருமேட்டில் வளைந்த ரேகையு மிருந்தால், பக்தி, தத்துவ விசாரமும், யோகமும், ஞானமுமுண்டாகும்.

அருள் ரேகை மாத்திரம் இருந்தால், அதனுலுண்டாகும் பலனை ஆச்சரியத்தோடு அனுபவிப்பர். ஆனல் அதன் காரணத்தை யறிந்து விர்த்தி செய்யமாட்டார்.

புத்தி ரேகையின் இறுதிமுனை மெல்லியதாக மேல் நோக்கிச் சற்றே வளைந்திருந்தால், அருள்வழி கனவின் மூலமாய்க் காட்டும்.

குருமேட்டு ரேகையும், அருள் ரேகையும் நன்கு அமையப் பெற்றிருந்தால், உபசரணை யுள்ளவரென்றும், ஐம்புல னுக்கும் எட்டாத எதிர்கால சம்பவங்களைச் சாமான்யமாகப் புகன்றிடுவர்.

குருமேடும், புதன் மேடும் ரேகைகளோடு நன்கு அமைந்திருந்தால், தத்துவ விசாரம், வேதாந்த விசாரணை யுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

அருள் ரேகை உற்பத்தியில் தீவு காணப்படில், சொர்ப்பன மூலமாக ஞானதிருஷ்டி உண்டாம்.

ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையோடு சம்பந்தப்படு கிற காலத்தில் அதை அருள் பாகம் என விவரித்திருக்கின்றனர். (ஆரோக்கிய ரேகையை வங்கநாட்டு ஆராய்ச்சிக்காரர் அதிர்ஷ்ட ரேகை என்று வர்ணித்திருப்பதாக முன்னமே அறிவித்துள்ளோம்.)

குறிப்பு :—அருள் ரேகை அமையப்பெறுபவர் வெகு சிலரேயாம். கடவுளைத் தியானிப்பவருக்கெல்லாம் அருளும், தத்துவ விசாரம் செய்வோருக்கெல்லாம் ஞானம் உண்டாகு மென்று சொல்வதற்கில்லை. அருள்ரேகை யுள்ளோர் கடவுளைத் தியானித்த மாத்திரத்தில் அருள் விளங்கும்; நிஷ்டை கூடி சிந்தனை செய்வோருக்கு அருள் வாழ்க்கையில் உயர் ஒழுக்கத்திலும் வழிகாட்டும். அருள்ரேகையுள்ள புண்ணிய சிலர் உற்றுணர்ந்து மனோசாந்தி பெற்று வழிபடு கடவுளை இடைவிடாது சிந்தித்திருப்போருக்கு ஞானோதயம் தானே யுண்டாகும். அருள்ரேகை யுள்ளோர் போகத்தைக் கூடிய வரை நீக்கி, சாதனங்களை அனுசரித்து அனுதினமும் யோகத்தி லிருப்பாராகில், சகஜமாக லௌகீகத்தில் கலந்திருந்தும், தாமரை இலை நீர் போல விளங்குவர்; சர்வ சித்தியு முண்டாகும்.

அருள்ரேகை யுடையோர் மேன்மேலும் கடவுளின் கருணை கடாட்சத்துக்குப் பாத்திரமானவர் என்பதே தக்க பொருளாகும். "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்று திருவாய்மலர்ந்த திருவாசகமே சான்றாம்.

---

# 15-வது அத்தியாயம்

## ஐக்கிய ரேகை அல்லது விவாக ரேகை

இவ்வுலக வாழ்வில் மாந்தர்க்கு விவாகம் ஒரு முக்கிய சம்பவம். பலர் அரிய சடங்குகள் நடத்திக் கலியாணம் செய்வது மாத்திரம் ஐக்கிய மென்பதாகாது. பிறர் அறிந்தோ அறியாமலோ காதலிப்பது முண்டன்றோ? காலத்துக்கு ஏற்றவாறும், குலாசாரத்துக்குத் தக்கபடியாகவும் விவாகம் நடைபெறுகிறது. ஒருவர் தம் வாழ்க்கையில் விவாகத்துக்குப் பிறகே சொல்லுதற்குரிய மாறுதல்கள் ஏற்பட்டு விடுகின்றன. இது நன்மையாகவோ தீமையாகவோ முடியுமென்றாலும், முக்கியமாய் நன்மையை அதிகமாய் எதிர்பார்க்கக் கூடியதாகவே இருக்கிறது.

இந்த ஐக்கிய ரேகை சுண்டுவிரலுக் கடியிலுள்ள புதன்மேட்டின் சரிவில் தோன்றும்.

ஸ்திரீ புருஷ வாழ்க்கையில், ஐக்கியத் தன்மையால் உண்டாகும் தேகமாறுதலும், நாடி நரம்புகளின் அமைப்பிலும் திருத்தங்கள் உண்டாய் விடுவதால், புதிய தோற்றத்தைக் கொடுப்பதாகும்.

ஐக்கிய சம்பந்தமான காதல்—அன்பு—இருதய சம்பந்தமானது. விவாகத்தைக் குறிக்கக்கூடிய அநேக ரேகைகள் இருக்கின்றன. நீதிக்குட்படாத அல்லது ஒழுக்கமற்ற வழியிலுண்டாகும் ஐக்கியத்தையும் ரேகைகள் .வெளிப்படுத்தும்.

சுண்டு விரலுக்கடியில் இருதய ரேகைக்கு மேலே இந்த ஐக்ய ரேகைகள் தோன்றும். அழுத்தமாய் அல்லது ஆழமாய்ப் பதிந்துள்ள ரேகைகள்தான் விவாகத்தைக் குறிப்பதாகும். ஆனல், அதிகப் பட்ட ரேகைகள் குட்டையாயும், மெல்லியதாகவும் அமைந்திருந்தால், விவாகமல்லாத சம்பந்தத்தைக் குறிக்கும். என்றாலும், சில சந்தர்ப்பங்களில் பலனற்றதாகவு மிருக்கலாகும்.

ஐக்கிய ரேகையின் இறுதியில் இரண்டு சிறு கிளைகள் தோன்றினல், நாயக நாயகியின் விரோத பாவத்தைக் குறிக்கும்.

ஐக்கிய ரேகையின் இறுதி இருதய ரேகையை நோக்கி வளைந்திருக்குமாயின், வாழ்க்கைத் துணைவர் அடிக்கடி

பிணிவாய்ப்படுவர் என்பதாம். இருதய ரேகையை நெருங்குமாயின், வாழ்க்கைத் துணைவரை இழந்துவிடுவ ரென்பதைக் குறிக்கும்.

ஐக்ய ரேகை இரண்டு துண்டாகக் காணப்படில், விவகாரத்தைக் குறிப்பதாகும்.

சுக்கிர மேட்டில் ஒரு ரேகை உற்பத்தியாகி ஆயுள், புத்தி, இருதயம் முதலிய ரேகைகளைக் குறுக்கிட்டுச் சென்றிருந்தால், விவாகத்தால் ஏற்படும் சச்சரவைக் குறிக்கும்.

ஐக்ய ரேகையில் கருப்புப்புள்ளி யிருந்தால், வாழ்க்கைத் துணைவரை இழப்பர் என்பதைக் குறிக்கும்.

ஐக்ய ரேகையில் மற்றொரு சிறு ரேகை குறுக்கிடுவதால் சூலம் காணப்படில், விவாகமானதும் காலகதி யடைவர் என்பதைக் குறிக்கும்.

ஐக்ய ரேகையில் தீவு காணப்படில், அது உள்ளவரை, நாயக நாயகிக்குள்ள தொந்தரவைக் குறிப்பதாகும்.

ஐக்ய ரேகை முற்றிலுமே தீவுகளாய்க் காணப்படில், விவாகம் செய்துகொள்ளா திருப்பதே மேலாகும்.

குறிப்பு:—விவாக ரேகைகளோடு சிறிதான ரேகைகள் இருபக்கங்களிலும் காணப்படும். மாசற்ற அன்புசெலுத்துவதைக் குறிப்பதே யன்றி, ஐக்யத்தைக் குறிப்பதன்று. அன்போடு நேசிக்கப்படுபவர் எத்துணை என்பது விளக்குவதாகும். சில ரேகை சாஸ்திரிகள் விபரீதமான அர்த்தங்களையும் கூறுவதுண்டு. ஐக்ய ரேகை எவ்வளவுக்குச் சுண்டு விரலின் மூன்றும் அங்குலாஸ்திக்கு நெருங்கியிருக்கிறதோ, அவ்வளவுக்குச் சீக்கிரத்தில் விவாகம் நடக்கு மென்பதைக் குறிக்கும். ஐக்ய ரேகையின் இருபக்கங்களிலும் மயிர்க்கால் போன்ற சிறு ரேகையொளி காணப்படில், நோயைக் குறிப்பிடுவதாகும். சந்திர மேட்டிலிருந்து ஒரு நீண்ட செல்வாக்கு ரேகை விதி ரேகையோடு சம்பந்தப்பட்டு, விதி ரேகையும் நன்கு பதிந்திருந்து, அதே விடத்தி லிருந்து சூரிய ரேகையும் உற்பத்தியாகிச் செல்லுமாயின், பிரபலமான விவாகத்தைக் குறிப்பதாம். அத்தகைய ரேகைகளையுடையோர் புகழ், கீர்த்தி, செல்வம் முதலியன ஒருங்கே பெறுவர்.




படம் :—சுண்டு விரலுக்கடியில் இருதய ரேகைக்கு மேலுள்ள ஐக்ய ரேகையைக் காட்டுகிறது. இவ்விதம் அமைந்திருக்கப் பெற்ருல், சந்தோஷமான வாழ்க்கையைக் குறிக்கும்.

படம் 2 :—ஐக்ய ரேகை வளைந்து, இருதய ரேகையைக் குறுக்கிட்டுச் சென்றிருந்தால், வாழ்க்கைத் துணைவரை இழப்பர் என்பதாம்.

படம் 3:—ஐக்ய ரேகையில் இரண்டு கிளைகள் தோன்றிஞல், வாழ்க்கைத் துணைவர் பிரிந்திருப்பர்.

படம் 4 :—ஐக்ய ரேகையின் கிளைகள் இருதய ரேகையை நோக்கி வளைந்திருக்குமாயின், விவாகத்துக்கு முன் தடை, தொந்தரவு, பிரிவினை இவைகளைக் குறிக்கும்.

சுக்கிர மேட்டில் ஒரு ரேகை உற்பத்தியாகிக் குறுக்கிட்டுச் சென்று, ஐக்ய ரேகையில் சம்பந்தப்படில், விவாக ரத்து ஏற்படும்.

படம் 5 :—ஐக்ய ரேகை வளைந்து, சூரிய ரேகையைக் குறுக்கிட்டுச் சென்ருல், உத்தியோகத்தை யிழப்பர். விவாக சம்பந்தத்தால் செல்வத்தை அடைவர்.

படம் 6 :—விவாகரேகை இரண்டு கிளைகளாகி, அதில் இருதய ரேகையின் கிளையொன்று சம்பந்தப் படுமாயின், மிக்க துக்ககரமான வாழ்க்கையைக் குறிக்கும். துர்க்குணமும், கடுஞ்சினமுங் கொண்டவ ராவர். வாழ்வில் பிரிவினையாயினும், சில சமயம் வல்வினையால் உயிரைத் தானே மாய்த்துக்கொள்வர்.

படம் 7:—விவாக ரேகையிலிருந்து கிளையாக ஒரு ரேகை புத்தி ரேகையோடு சம்பந்தப் பட்டிருப்பின், மத பேதத்தால் எப்பொழுதும் சச்சரவு; மனச்சங்கட முண்டாவதால், வாழ்க்கை சந்தோஷ மற்றதாகவே யிருக்கும்.

படம் 8 :—ஐக்ய ரேகையிலிருந்து கிளை, நீண்டு இரண்டாவது விரலுக்கடியில் விதிரேகையின் மேல் ஒரு சிறு சூலம் அமைந்திருந்தால், தூக்குமரத்தோடு துணைவரின் வாழ்வு முடிவாகும்.

படம் 8 :—விவாக ரேகை வளைந்து, தீவுடன் காணப்படில், பெரிய ஆபத்து அல்லது துக்கத்தைக் குறிப்பதாகும். வாழ்க்கைத்துணைவர் நெடுங்காலம் பிணிவாய்ப்பட்டுக் காலகதி யடைவர்.

படம் 10 :—ஐக்ய ரேகையின் கிளை மேல்நோக்கிச் சூரிய ரேகையோடு சம்பந்தப் படுமாயின், விவாகத்தால் பெருஞ் செல்வமும் கீர்த்தியும் உண்டாகும்.

படம் 11 :—ஐக்ய ரேகை இரண்டு கிளைகளாகி, அதிலிருந்து தொடர்ந்த ரேகையில் சூரிய மேட்டுக்கு நேரே தீவும் காணப்படில், விவாகம் விவகாரத்தில் முடிந்து, அதனுல் நிலைமை தடுமாறி அவமானத்துக் குட்படுவர்.

படம் 12 :—விவாக ரேகை உற்பத்தியிலேயே தீவு காணப்படில், விவாகத்துக்கு முன் வசீகரணத்தால் உண்டான கஷ்டத்தைத் தெரிவிக்கிறது. ஐக்ய ரேகை ஒழுங்காய் நீளமா யிருந்தால், எல்லாம் நன்மையாய் முடியும்.

படம் 13 :—ஐக்ய ரேகை மிகச் சிறியதாகவும், மேல் நோக்கி வளைந்து மிருந்தால், விவாகம் ஒருபோதும் நடவாதென்பதைக் குறிக்கும்.

படம் 14 :—சந்திர மேட்டிலிருந்து விதிரேகையைச் சாரும் சிறிய ரேகைகள் செல்வாக்கு ரேகைகளாகும். இவைகளும் விவாகத்தைக் குறிப்பதாகும். செல்வாக்கு ரேகை சந்திக்கு மிடம் விதிரேகையில் அழுத்தமாய் பதிந்த நிலைமையி லிருந்தால், விவாக சம்பந்தத்தால் செல்வாக்கு, கீர்த்தி, செல்வம் முதலியன உண்டாகும். செல்வாக்கு ரேகை விதி ரேகையோடு சந்திக்குமிடம் பட்டும் படாமலாவது தீவு காணப்படினும். விவாகத்தால் துரதிர்ஷ்ட முண்டாகும்.

படம் 15 :—ஐக்ய ரேகையின் மேல் செங்குத்தாய்க் காணப்படும் ரேகைகள் குழந்தைகளைக் குறிப்பதாகும். பதிவான ரேகைகள் ஆண் குழந்தைகளையும், மெல்லிய ரேகைகள் பெண் குழந்தைகளையும் குறிப்பதாகும். பூதக் கண்ணுடியால் பார்த்தால் நன்கு விளங்கும்.

———

# 16-வது அத்தியாயம்

## சுக்கிர வளையம்

## (The Girdle of Venus)




சுக்கிர வளையம் சனி மேட்டையும், சூரிய மேட்டையும் வளைந்து நிற்கும். அநேகமாய் எல்லோருடைய கையிலும் காண்பதரிது. என்றாலும், சப்த ரேகைகளில் ஒன்றாய்க் கருதப்படுகிறது. இது சனி வளையமென்றும் சொல்லப்படும். மூன்றாம் பிறைச் சந்திரனைப் போல் வளைந்திருக்கும். குரு மேட்டுக்கும் சனிமேட்டுக்கும் மத்தியில் உற்பத்தியாய் சூரிய மேட்டுக்கும் புதன் மேட்டுக்கும் மத்தியில் செல்லும்.

"கை சதை பிடித்து மிருதுவாயும், சந்திரமேடு அதிக முதிர்ச்சி பெற்றும், நன்கு பதிந்த சுக்கிர வளையமும் அமையப் பெற்றிருந்தால், கேடு விளைவிக்கும் சித்தமுள்ளவர் என்று திட்டமாய்ச் சொல்லலாம்: எந்த விவகாரத்திலும் அளவுக்கு மிஞ்சியே நிற்பர். இத்தகையோர் முடிவுக்கு சட்டதிட்ட மில்லை. மிகச் சோம்பலும் பிடிவாதமு முள்ளவர்" என்று ரேகை சாஸ்திரத்தில் நிபுணத்துவம் பெற்றவர் எழுதி யிருக்கிறார். சுக்கிர வளையத்தைப்பற்றி எந்த சாஸ்திரக்காரரும் சிலாகித்துச் சொல்லவில்லை. இதை யுத்தேசித்து சுக்கிர வளையத்தைப் பற்றி யாதும் எழுதாமல் விட்டுவிட எண்ணினேம். இவ்வித ரேகையுடையோர் ஒருவர் இருவரைப் பம்பாயில் பார்த்த ஞாபக முண்டு. அவர்கள் முகம் மூர்க்ககுண முடையதாய்க் காட்டியது. ஒருவர் கையைப் பார்த்த மாத்திரத்தில், முக்கிய குணத்துக்கான

ரேகையைக் கவனித்திருக்கிறோம் ஆனால், சுக்கிர வளையத்தைக் கண்டோமில்லை. இங்கிலாந்தில் பிரபல ரேகை சாஸ்திரிகளாகிய மிஸ்டர் ஹெரோன் அல்லன், மிஸ்டர் ஹென்றி, மிஸஸ் கதேரின் முதலானவர்களும், இத்தாலி தேசத்தில் அநேக சிஷ்யர்களோடு விளங்கிய திசபொரலி என்ற தீர்க்க தரிசியும், சுக்கிர வளையம் அறிவுக்காதார மானதாயிருந்தாலும், கட்டை விரல் நீண்டும், புத்தி ரேகை மெல்லிதாக நன்கு அமைந்துமிருந்தால், மனோ சக்தியால் நல்வழிப் படுவர் என்று சொல்லுகின்றனர்.

சுக்கிரவளைய முள்ளோரை இளமையிலேயே சங்கீதம், கவித்வம் இவைகளில் பழக்கிவிட்டால், நாளடைவில் தங்களுக்குள்ள முழு சாமர்த்தியத்தையுங் காட்டி மகிழ்வர்.

சுக்கிரவளைய முடையோர் ஆசை வழிப்பட்டால், தமக்குள்ள அபாரமான மிருக பலத்தையும், மூர்க்கத்தையும் கொண்டு முயற்சிப்பர். இவர்களுடைய புத்தியின் வன்மை சொல்லத் தரமன்று, தவரான வழியில் செல்வரேல், நொடிப்பொழுதில் நாசம் செய்யக்கூடிய இராக்ஷசகுண முடையவர். உண்மையில் இவர்களிடம் மனக்கோட்டை யிருக்கிறது—ஆகாசக் கோட்டையில்லை. எப்படி யெனில், நினைத்த வண்ணம் செய்யக்கூடிய வல்லமையுடையவர் என்பதே. காரியாம்ஸமான நல்வழியில் இவர்கள் புகுவரேல் பேருபகார மன்றோ! திசபொரலி என்ற மகான் சுக்கிர வளைய முள்ளோரிடம் அபார சக்தி இருக்கிறது; உபயோகமாகுந் தன்மையைப் பொருத்திருக்கிறது என்று சொல்லி யிருக்கிறார். இந்த மகான் ஒருவரே சிலாகித்திருக்கிறார். இவருடைய சிஷ்யராகிய ஜெர்மெயின் என்ற தீர்க்கதரிசி அமெரிக்காவிலுள்ள அநேகரிடம்,—செல்வாக்குள்ள மேதாவிகளிடமும் சுக்கிரவளைய ரேகையைக் கண்டிருப்பதாய்த் தமது நூலில் எழுதியிருக்கிறார். அந்நாட்டினர் மிகுதியும் தொழில் துறையில் இருந்துவருவதால், மிகுந்த செல்வ விர்த்தியோடு, செழிப்பு முடையவர்களாய் இருக்கின்றனர் போலும்.

மேற் சொன்ன அபிப்பிராயங்களைத் தவிர, கீழ்க் கண்ட சில பலன்களையும் தெரிவிக்கிறோம்.

சுக்கிர வளையம் மெல்லியதாகவும், நன்கு அமைந்துமிருந்தால், கல்வியில் நேசம், அபார புத்தி, தமாஷ் இவைகளைக் குறிப்பதாகும்.

சுக்கிரவளைய ரேகையில் சூரியமேட்டில் குறுக்கிட்ட ரேகை யிருந்தால், பெண்களுக்குப் பொருள் சேரும். பின்னப்பட்ட கையில் மேற்சொன்னவாறு இருந்தால், விபசாரத்தால் அதிர்ஷ்டம் நீங்கும் என்பதாம்.

சுக்கிரவளைய ரேகை புதன் மேட்டுக்குச் சென்றிருந்தால், எடுத்த காரியத்தைச் சிரத்தையோடு செய்து முடிப்பர் என்பதைக் குறிக்கும்.

சுக்கிர வளையம் துண்டிக்கப்பட்டாவது, சிறு ரேகைகளால் குறுக்கிட்டிருந்தாலும், கெடுவழிக்கே புத்திகூர்மை செல்லும் என்பதாம்.

விதி, சூரியன், ஆரோக்கியம் முதலிய ரேகைகளைச் சுக்கிர வளைய ரேகை குறுக்கிட்டுச் சென்றால், லாபம் அடையும் வழிகளில் முரட்டுச் சுபாவத்தால் சங்கட முண்டாவதைக் குறிக்கும்.

சுக்கிர வளையரேகை ஐக்கிய ரேகையைத் தேடுமானல், விவாக சுகத்துக்கு எதிரிடையான தன்மையைக் குறிப்பதாகும்.

குறிப்பு :—பிறைவட்டம்போ லிருக்கும் இந்தச் சுக்கிர வளைய ரேகைக்குச் சில ரேகை சாஸ்திரிகள் விபசாரத்தையே மிகைபடுத்திக் கூறி யிருக்கின்றனர். இது பொருத்த மல்லவென ஒரு ரேகை சாஸ்திர சங்க அதிபதி மறுத்திருக்கின்றார். இந்த ரேகைக்குச் சாதாரணமாய் இரட்டித்த சக்தி, புத்தி, பலம் என்று சொல்லப்படுகிறது.

———

# 17-வது அத்தியாயம்

## செவ்வாய் ரேகை

இந்த செவ்வாய் ரேகை ஆயுள் ரேகைக்கு அடுத்தபடியாய், உடன் பிறந்தாப்போல், சுக்கிரமேட்டில் அமைந்திருப்பதைப் படத்தில் காணலாம்.

செவ்வாய் ரேகை தங்குதடையின்றி, ஆயுள் ரேகைக்குச் சமமாகச் சென்றிருந்தால், ஆயுள் ரேகையில் உண்டான புள்ளி, தங்கு தடை இவைகளா லுண்டாகும் கெடுதிகளைத் தடுக்கும். இது மாத்திரமன்றி, இதோடு நல்ல குருமேடும் அமையப் பெற்றிருந்தால், சுய மரியாதையையும், சுகவாழ்வையும் உறுதிப்படுத்துவ தாகும். இன்னும் கம்பீரமான கர்வத்தையுங் கொடுக்கும். நல்ல சம்பத்துண்டாகும்.

செவ்வாய் ரேகை கொஞ்சதூரம் ஆயுள் ரேகையைப் பின்பற்றிப் போயிருந்தால், அதுவரைதான் அதன் செல்வாக்கு என்பதைக் குறிப்பதாகும்.

செவ்வாய் ரேகை நன்ருய்ப் பதிந்தும், அகண்டும், சிவந்தும் காணப்படில், கொதிப்புள்ள புத்தி யுடையவராகும். அற்ப காரியத்திலும் கோபம் கொள்வர்; சக்தி வாய்ந்தவராயும் விளங்குவர்.

செவ்வாய் ரேகை இறுதியிலிருந்து ஒரு கிளை சந்திரமேட்டை நோக்கிச் செல்லுமாயின், மதுபானம் செய்பவராயும், மெய்ம்மறந்த மூர்க்ககுண முடையவராயும் விளங்குவர்.

## கங்கண ரேகை

இந்த கங்கண ரேகையிலும் ரேகை சாஸ்திரிகளுள் அபிப்பிராயபேத மிருந்து வருகிறது. கங்கண ரேகையின் அமைப்பைக் கொண்டே ஒருவரது சரித்திரத்தைச் சொல்லிவிடலா மென்கின்றனர் ஒரு சாரார்.

இந்த கங்கண ரேகை மணிக்கட்டில் குறுக்கே அமைந்திருப்பதைப் படத்தில் காண்க.

கங்கண ரேகையில் மூன்று அமைவதுதான் சிரமமென்று சொல்லப் படுகிறது.

ஒரு கங்கண ரேகை நன்ருய்ப் பதிந்து அமைந்திருந்தால், 23-முதல் 28-வரை ஆயுள் குறிக்கப்படுகிறது.

இரண்டு கங்கண ரேகைகள் காணப்படில், 46-முதல் 59-வரை ஆயுளைக் குறிப்பதாகும்.

மூன்று கங்கண ரேகைகள் காணப்படில், 59-முதல் 84-வரை ஆயுளைக் குறிப்பதாகும்.

கங்கண ரேகைகள் நன்கு புலப்படுவதாயும், நல்லநிறத்தோடும் இருந்தால், ஆரோக்கியம், செல்வம், நல்லதிர்ஷ்டம் தடையற்ற வாழ்க்கை இவைகளை அறிவிக்கும்.

முதல் கங்கண ரேகை சங்கிலியைப்போல் பின்னப்பட்டிருந்தால், ஆரம்பத்தில் கஷ்டவேலையும், நாளடைவில் நல்ல லாபத்தையும் குறிப்பதாகும்.

கங்கண ரேகைகள் பட்டும் படாமலும் காணப்படில், ஆராதுரமான தன்மையைக் குறிப்பதாகும்.

முதல் கங்கண ரேகை உள்ளங்கையோடு சேர்ந்து நன்ருய்ப் பதிந்திருந்தால், மூத்திரேந்திரிய சம்பந்தமான நோயைக் குறிப்பதாகும்.

கங்கண ரேகையின் கிளைகள் சந்திர மேட்டை நோக்கி எத்தனை சென்றிருக்கிறதோ, அத்தனைக் கப்பல்யாத்திரை அல்லது வெளியூர் பிரயாணங்கள் என்பதை அறிவிக்கும். நீண்ட ரேகைக்குத் தக்கபடி நீண்ட பயணமாகும்.

கங்கண ரேகையின் கிளையொன்று சுக்கிரமேட்டின் வழியாகக் குருமேட்டை நோக்கினுல், வெளியூர்ப் பயணம் லாபகரமான தென்பதை அறிவிக்கும்.

கங்கண ரேகையின் கிளை சனிமேட்டை நோக்கிவிடுமாயின், வெளியூர்பயணம் சென்றவர் திரும்பார் என்பதாம்.

கங்கண ரேகையின் கிளை மேல்நோக்கி ஆயுள் ரேகையைத் தொடுமாயின், பயணத்தில் அந்தக் குறித்த காலத்தில் ஆயுள் முடிவைக் குறிக்கும்.

கங்கண ரேகையின் கிளை நேரே புதன் மேட்டை நோக்கிச் சென்ருல், திடீரெனச் செல்வ முண்டாகும் என்பதைத் தெரிவிக்கும்.

சூரிய மேட்டை நோக்கிச் சென்றால், கௌரவமான பெரிய மனிதர்களின் நட்பும் கீர்த்தியு முண்டாகும்.

ஆரோக்கிய ரேகையில் கலக்குமானல், காலமெல்லாம் சொற்ப அதிர்ஷ்ட மென்பதைக் குறிக்கும்.

கங்கண ரேகையில் குறுக்கிட்ட சூலம் காணப்படில், முற்றிலும் கஷ்ட நிஷ்டூரமாயினும், இறுதியில் சமாதான முண்டாகு மென்பதாம்.

கங்கண ரேகையின் மத்தியில் முக்கோணம் காணப்படில், கஷ்டப்பட்டு சம்பாதிக்கும் செல்வத்தையும் கீர்த்தியையும் குறிப்பதாகும்.

குறிப்பு:—ரேகை சாஸ்திரிகள் அநேகர் இதைப்பற்றி விவரிக்காது விட்டிருக்கின்றனர். கங்கண ரேகையைக் கொண்டு யாத்திரை சம்பந்தமான விஷயங்களை அறியலாம். ஒருவர் இருவரே இதைப்பற்றி விஸ்தாரமாய் எழுதியுள்ளார்கள்.

---

## 18-வது அத்தியாயம்

### சதுரமும் முக்கோணமும்

ஒருவர் கையைப் பார்த்த மாத்திரத்தில், மேல்வாரியாக முக்கோணம், சதுரம் இவ்விரண்டும் முக்கிய ரேகைகளின் பொது அமைப்பில் விளங்கும்.

கையில் மேல்பாகத்தில் இருதய ரேகைக்கும் புத்தி ரேகைக்கும் மத்திய பாகம் சதுர மெனப்படும். ஆயுள் ரேகைக்கும் புத்திரேகைக்கும் இடையில் உட்பட்டது முக்கோணம் என்பதாகும்.

முகத்தைப் பார்த்தவுடன் குணாதிசயங்களைக் கண்டு கொள்வதுபோல, கையில் ரேகை அமைப்பைக் கொண்டு பொதுவான குணவிசேஷங்களையும் அறிந்து கொள்ளலாகும்.

### முக்கோணம்

முக்கோண ரேகைகள் கையில் செங்குத்தாய் இருதய புத்திரேகைகளைத் துளைத்துக்கொண்டு செல்வதாகும். முக்

கோணத்துக்கான குறிக் காதாரமாய் செங்குத்தாய் அமையக் கூடிய ரேகைகளாவன :—1. ஆயுள் ரேகை. 2. சூரிய ரேகை. 3. ஆரோக்கிய ரேகை. 4. விதி ரேகை. செங்குத்தாய் அமையாமல், சற்று கோணலா யிருந்தாலும் குணம் பலிதமாகாது.

ஆயுள் ரேகையுடனும் புத்தி ரேகையுடனும் மேற் கூறிய விதி ரேகையோ, சூரிய ரேகையோ, ஆரோக்கிய ரேகையோ முக்கோண வடிவமாக அமைவதே முக்கோணம்.

சில ரேகை சாஸ்திரிகள் இருதய ரேகையின் இறுதியிலும், புத்திரேகையின் உற்பத்தியிலும் முதல் இரண்டு விரல்களுக் கடியில் அமையும் சிறிய முக்கோணத்தையே ஏற்றுக்கொண்டு பலன், சொல்லி யிருக்கின்றனர். இது சற்றும் பொருந்தாதென அநேகர் கண்டிக்கின்றனர். இது ஒரு வகையில் நியாயமா யிருக்கிறது. எப்படியெனில், சதுரத்துக்கு இரண்டு பெரிய ரேகைகளை ஆதாரமாக ஏற்றுக் கொண்டு, முக்கோணத்துக்கு மாத்திரம் ஒரு ரேகையின் கிளையைக்கொண்டு தீர்மானிப்பது பொருந்தாது. ஆகையால், இந்த விஷயத்தில் ஜெர்மெயின் மகான் எழுதியுள்ளதைப் பின்பற்றுவாம்.

முக்கோணம் நன்கு அமையப்பெற் றிருந்தால், நியாயமாய் நடப்பதைக் குறிக்கும்.

முக்கோணத்தில் புத்திரேகை நன்றாயமைந்து, கட்டை விரலில் இரண்டாவது அங்குலாஸ்தி அகண்டு செவ்வையாய் காணப்பட்டு முக்கோணம் விசாலித்து மிருந்தால், தாராள மான கொள்கையையும், பெருநோக் குள்ளவர் என்பதையும் குறிக்கும்.

இருதய ரேகை கீழ்நோக்கி முக்கோணத்துக்கு ஆதாரமாயிருந்தால், அற்ப புத்தி யுள்ளவர் என்பதைக் குறிப்பதாகும்.

புத்தி ரேகை இருதய ரேகையை நோக்கி முக்கோணத்துக்கு ஆதாரமானால், திமிர் பிடித்தவர் என்பதாகும்.

நாலாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தி நீளமாயிருந்து, முக்கோண மத்திய பாகம் ஒடுக்கமாய்க் காணப்படில், வஞ்சகத் தன்மையை அறிவிப்பதாகும்.

முக்கோண மத்திய பாகம் ஒடுங்கியும், பெருமிதமான குருமேடும் அமையப்பெற் றிருந்தால், வைதீகத் தன்மையி

லும், மதா சாரத்திலும் அளவுக்கு மிஞ்சியவர் என்பதைக் குறிக்கும்.

முக்கோணம் குறுகியும், ரேகைகள் சிவந்தும், இருதய ரேகை சிறுத்தும், செவ்வாய் மேடு பெருமிதமாகவும் காணப்படில், குரூரத் தன்மையைத் தெரிவிக்கும்.

முக்கோணம் இரு கைகளிலும் ஒடுங்கியும், புதன்மேடு அதீதமாகவும் இருந்தால், பொய்யில் நிபுணர் என்பதைக் குறிக்கும்.

ஒடுங்கிய முக்கோணமும், செவ்வாய் புதன் மேடுகள் அதீதமாகவும் அமைந்திருந்தால், காரணமற்ற தன்மையில் நடப்பவர் என்பதாகும்.

ஒடுங்கிய முக்கோணமும், ஒழுங்கற்ற ஆரோக்கிய ரேகையும் அமைந்திருந்தால், ஸ்வாசரோகம், உட்சுரம், இவைகளைக் குறிக்கும்.

கைவிரல்கள் பின்னிப்போய் உள்ளங்கையை நோக்கியும், ஒடுக்கமான முக்கோணமும் இருக்குமாயின், யாவரிடத்திலும் பிடிவாத முள்ளவர் என்பதை அறிவிப்பதாகும்.

அநேக சிறு ரேகைகளால் முக்கோணமும், அகண்டகையும், நீண்ட உள்ளங்கையும், குறுகிய விரல்களும் அமைந்திருந்தால், மந்தமாய்க் கிரகிப்பவர் என்பதாகும்.

முக்கோணமும், சனி மேட்டுக்குக்கீழே சூல ரேகையும், ஒழுங்காயும் சுத்தமாயும் அமையப்பட்ட அருள் ரேகையும் இருந்தால், ஐம்புலனுக்கும் எட்டாத விஞ்ஞான (சோதிட) சாஸ்திர ஆராய்ச்சிக்காரர் என்பதைக் குறிக்கும்.

முக்கோணமும், செவ்வாய் மேட்டுக்கு மேலே ஒரு சூலமும் காணப்படில், செல்வாக்குடன் பயணம் செய்பவர் என்பதாகும்.

முக்கோணத்தின் மத்தியில் ஒரு நக்ஷத்திரக் குறி காணப்படில், பெருங் கீர்த்தி உண்டாகும்.

முக்கோணத்தின் மத்தியில் பெரிதாகவும் விளக்கமாகவும் நக்ஷத்திரக் குறி இருந்தால், நற்குணமும் சத்தியமும் உள்ளவராயும், காதலிக்கும் ஸ்திரீயின் அனுதாபத்துக் குட்பட்டவராயுமிருப்பார் என்பதாகும்.

முக்கோண ரேகை அமைப்பில் மூன்று முனையோடு அமைவதாயின், ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையில் உற்பத்தியாகி புத்திரேகையைத் தொட்டாகிலும், துளைத்தாகிலும் போயிருக்கவேண்டும்.

ஆரோக்கிய ரேகை அநேகமாய் எல்லோருடைய கையிலும் இருக்கக் காணலாம்.

முக்கோணத்தில் மூன்று முனைகளும் நன்றாய் விளங்கும்.

முக்கோணத்திலுள்ள மத்தியபாகம் சற்றே உயர்வாய்க் காணப்படில், அடக்க முடையவரென்பதைக் குறிக்கும். இரண்டு கைகளிலும் உயர்வாய்க் காணப்படில், தைரியசாலி என்பதைத் தெரிவிப்பதாகும்.

முக்கோணம் அகண்டு ரேகை நன்கு அமைந்திருந்தால், தாராளமான சிந்தையை யுடையவர் என்பதாகும்.

முக்கோணம் அகண்டு பெரிதாகவும், இருதய ரேகையின் இறுதி பிளவுபட்டுக் கிளையோடுங் கூடியிருந்தால், பச்சாதாபமுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

முக்கோணத்தின் மூன்று ரேகைகளும் சுத்தமாகவும் ஒரே நிறமாகவு மிருந்து, மத்திய வெளி பெரிதா யிருந்தால், நன்றாய்க் கவனிக்கக் கூடியவர் என்பதாகும்.

சனிமேடு அடங்கியும் முக்கோணம் தட்டையாயு மிருந்தால் வாழ்வில் சிறப்பொன்றுமிராது என்பதைக்குறிக்கும்.

முக்கோண அமைப்பில், ஆரோக்கிய ரேகை இறுதியில் வளைந்து புத்தி ரேகையோடு கலந்து போயிருக்குமாயின், பிரவிர்த்தி (தொழில்) நஷ்டமாகும் என்பதாகும்.

## சதுரம்

உள்ளங்கைக்கு மேலே இருதய ரேகைக்கும் புத்தி ரேகைக்கும் மத்தியில் மேலெழுந்த வாரியாய்க் காணப்படுவதே சதுர மெனப்படும்.

முக்கோணம் எல்லோருடைய கையிலும் அமைவது போல சதுரம் அமையப்பெறுவது அபூர்வமே. புத்திரேகை கீழ்நோக்கித் தொங்கலாகவளையாதிருப்பதே சதுர அமைப்புக்குச் சிறப்புடையதாகும். சதுரத்துக்கு முக்கியமாகச்

செவ்வாய்மேடு கவனிக்கப்படுகிறது. இந்தச் செவ்வாய்மேடு இரண்டு இடங்களி லிருக்கிறதென்று முன் வியாசங்களி லிருந்து வாசகர்களுக்கு ஞாபக மிருக்கலாம். அதாவது, முதலாவது செவ்வாய் மேடு குரு மேட்டுக்குக் கீழே ஆயுள் ரேகைக்கு மேலே அமைவதாகும். புதன் மேட்டுக்குக் கீழே, இருதய ரேகைக்கு நெருக்கமாக சந்திர மேட்டுக்கு மேலே அமைவது மற்றொன்றாகும்.

சதுரம் பெரும்பாலும் மேதாவிகள், இராஜதந்திரிகள், பிரபுக்கள், தளகர்த்தர் முதலானவர்கள் கையில் அமையும் சதுரத்தில் புத்திரேகையின் கௌரவம் கொண்டாடப்படு கிறது. இருதய புத்தி இவ்விரண்டு ரேகைகளுக்கு மத்தியில் சதுரமாய்க் காணப்படுமென்று சொல்லப் படுகிறது. இதற்கு மெல்லிய ரேகைகள் இருபுறங்களிலும் குறுக்கிட் டிருக்கும். இதைப் பூதக்கண்ணாடி கொண்டு பார்த்தால் விளங்கும். புத்தி ரேகை வளையாதிருந்தாலே விசேஷ நன் மைகள் குறிப்பிடப்பட் டிருக்கின்றன. இது சதுரத்துக்கு சார்ந்து செவ்வாய் மேடுகளுக்கு மேலே சதுரக்கட்டம் தோன்றுமாயின், அகண்ட அறிவு, விசாலமான நோக்கம் பெற்று மகா மௌனியாய் உலகில் அநேக காரியங்களைச் சாதிக்க வல்லார் என்பதைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டில் சூலம் காணப்படில், கப்பல் யாத் திரை செய்து கீர்த்தி அடைவர் என்பதைத் தெரிவிப்ப தாகும்.

சதுரத்துக்குள் சூலம்காணப்படில், சாஸ்திர சம்பன்ன ராயும் எதிர்காலச் செய்திகளை எடுத்தியம்பும் பேரறியுடைய வர் சனி மேடு ஒத்தும், அருள் ரேகையும் அமைந்திருப் பின், பிரம்ம ஞானியாய் விளங்குவர்.

சதுரம் அமையுமிடத்தில் சிறு ரேகைக்கூட்ட மிருந் தால், சிந்திக்குந் தன்மை குறைவு என்பதைக் குறிக்கும்.

சதுரத்தின் மத்தியில் நக்ஷத்திரங் காணப்படில், பெருங் கீர்த்தியும் மேன்மேலும் விர்த்தியாகு மென்பதைக் குறிக்கும்.

இனி அடுத்த வியாசத்தில் விரல்களின் அங்குலாஸ்தி யில் காணப்படும் குறிகளைப்பற்றி எழுதப்படும்.

# 19-வது அத்தியாயம்

### சந்தர்ப்ப ரேகைகள் — அங்குலாஸ்திகளிலும் கட்டை விரல்களிலு முள்ள குறிகள்

இதுவரை பதினான்கு முக்கிய ரேகைகளைப் பற்றி, பற்பல கைகளை சோதித்ததற் கிணங்கவும், பல ரேகை சாஸ்திர ஆராய்ச்சியைக் கொண்டும் விவரித்தோம். இப்பொழுது அப்போதைக் கப்போது தோன்றி மறையும் சந்தர்ப்ப ரேகைகளைப் பற்றித் தெரிவிக்கின்றோம்.

அநேகமாய் சந்தர்ப்ப ரேகைகள் கட்டை விரலிலும், மற்ற விரல்களின் அங்குலாஸ்திகளிலும் காணப்படுகின்றன. இதற்குமுன் சுக்கிரமேட்டில் தோற்றுவதாய் எழுதியது நேயர்களுக்கு நினைவிலிருக்கும். அதைச் செல்வாக்கு ரேகைகள் என்று தெரிவித்தோம், ஆழ்ந்து சிந்தித்த எண்ணங்கள் சிறு ரேகைகளாய் சுக்கிர மேட்டில் தோன்றும். ஆனால், பலிதப்படும் விஷயம் இதர ரேகைகளைக் கொண்டு நிச்சயிக்க வேண்டும். சந்தர்ப்ப ரேகைகள் இருதய புத்தி ரேகைகளிலும் காணப்படும். அந்தந்த ரேகையை ஒட்டியே பலா பலன்கள் வெளியிடப்பட்டன. இங்கே அதிகப்பட்ட துண்டு அல்லது ஒளி ரேகைகளையே சந்தர்ப்ப ரேகை என்று சொல்லப்படுகிறது. இதை சாதாரணமாக ரேகை பார்த்துக் குறி சொல்லுவோர் கவனிப்பதே கிடையாது. அதிர்ஷ்டத்தைச் சொல்லுவோர் பிரவிர்த்தியினிமித்தம் விசேஷித்து ஒன்றுக்குப் பத்தாய் வருங் காலத்தில் நல்ல பலன்களை வாக்குச் சாதுர்யமாய்ச்சொல்லி விடுவார்கள். சமய சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறும் புகழ்ந்துரைக்கலாம். ஆத்ம சக்தி, அருள், தெய்வ பக்தி, நுண்ணறிவு முதலியவைகளில் யாதேனும் ஒன்றிருந்தாலும், அவர் ஜோதிடம் அல்லது ரேகை சாஸ்திர நுட்பங்களை அறிந்து சொல்ல வல்லவராவர்.

சந்தர்ப்ப ரேகை அல்லது குறி, மிக்க ஆழ்ந்து பொறுமையுடன் கவனிப்போருக்கே விளங்கும். ஒரு கூர்ஜர ரேகை சாஸ்திரியிடம் சில வருடங்களுக்கு முன் எமது கையைக் காட்டியபோது, சுமார் 10 நிமிஷத்துக்கு மேலே உற்றுப்பார்த்து அவர் சந்திரமேட்டில் மூன்று புள்ளிகளிருக்கின்றன என்றார். சந்திர மேட்டை எத்தனை முறை

யோ பார்த்திருந்தும் யாம் கண்டு கொண்டோ மில்லை. ஆரம்பமுதல் பூதக் கண்ணாடியைக் கொண்டோ உற்று நோக்கினர். ஆயுள், புத்தி, இருதய ரேகைகளைப் பார்த்தும், சந்தர்ப்ப ரேகை யாதேனு முளதோ வென்பதே அவரது ஆராய்ச்சியா யிருந்தது. எனவே, சந்தர்ப்ப ரேகை அல்லது குறியைக்கண்டு பிடிப்பது கஷ்ட சாத்திய மானதே யாகும். நுண்ணறிவும், பொறுமையுமே மிகுதியும் வேண்டும். சந்தர்ப்பக் குறிகளை எடுத்தியம்பும்போது ஆங்கிலத்தில் கற்பனையாகப் புதிய பதப்பிரயோகம் செய்கின்றனர். ஆனல், நாம் 'சந்தர்ப்பம்' என்ற ஒரு பதத்தையே உபயோகிக்கின்றோம். அக்கினி புராணத்தில் வேறுயிருப்பினும், அதை மற்றோர் வியாசத்தில் வெளியிடுவோம்.

கட்டை விரலில் இரண்டு அங்குலாஸ்திகளும், மற்ற நான்கு விரல்களிலும் மூன்று அங்குலாஸ்திகளு மிருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியும். நகமுள்ள அங்குலாஸ்தி முதலாவதாகும். நடுவிலுள்ள அங்குலாஸ்தி இரண்டாவதாகும். அதற்கடுத்தது மூன்றாவது அங்குலாஸ்தியாகும்.

கட்டை விரலின் முதல் அங்குலாஸ்தி மனே சக்தியைக் குறிக்கிறது. இரண்டாவது அங்குலாஸ்தி தார்க்கிகத்தைக் குறிப்பதாகும். விரல்களின் முதல் அங்குலாஸ்தி தேவாம்ஸம் பொருந்தியது. இரண்டாம் அங்குலாஸ்தி புத்தியைப் புலப்படுத்துவதாகும். மூன்றாம் அங்குலாஸ்தி ஜடமான இயற்கை அறிவைக் குறிக்கும். இப்பொழுது இந்த ஐந்து அங்கத்தினர்கள் கூடி விளக்கும் சிறு பிரபஞ்ச ரகஸ்யங்களை இனி யாதென அறிவோம். அண்டத்தின் பூத பௌதிகம் வேறுனலும், இது பிண்டத்தின் மர்மங்களை வெளியிடுவ தாகும்.

சந்தர்ப்ப ரேகை நலம் தீது இவ்விரண்டையும் தெற்றென விளக்கும் வினைகள் பிரவிர்த்தியாலும், பிராப்தத்தாலும் நிகழ்வனவாகும். பிரவிர்த்தி முயற்சிக்குட்பட்டால் பலன் இருந்தாலும் இல்லாவிடிலும் சுக்கிரமேட்டில் கணக்கின்றி ரேகை தோன்றும். பிராரப்தமோ அந்தந்தக் காலங்களிலே தான் சம்பவிக்கும்.

## 1. கட்டை விரலின் குறிகளும் ரேகைகளும்

நகத்துக் கருகிலுள்ள கட்டை விரலில் இரண்டு நக்ஷத்திரக்குறிகள் காணப்படில், குதர்க்கவாதி என்பதைக் குறிக்கும்.

சுக்கிர மேடு அதிகப்பட்டும், கட்டைவிரல் முதல் அங்குலாஸ்தியில் ஒத்தை நக்ஷத்திரக் குறியிருந்தால், துன்மார்க்கத்தை அறிவிப்பதாகும்.

கட்டை விரலின் இரண்டாவது அங்குலாஸ்தியில் ஒன்று அல்லது இரண்டு நக்ஷத்திரக் குறி யிருந்தால், நேசிக்கும் தன்மையைப் புலப்படுத்தும்.

## 2. நான்கு விரல்களின் ரேகைகள்

எல்லா விரல்களின் அங்குலாஸ்தியின் முடிச்சுகளில் செங்குத்தாய்ப் பதிந்த ரேகை காணப்படில், திடும் சம்பவமாய் நேரிடும் மரணத்தைக் குறிக்கும்.

ஒரு நீண்ட ரேகை எல்லா விரல்களிலும் அமையப் பெறின், அழியாப் பெருங் கீர்த்தியை அறிவிக்கும்.

எல்லா விரல்களின் முதல் அங்குலாஸ்திகளில் அநேகச் சிறு ரேகைகள் செங்குத்தாய்க் காணப்படில், பொதுவாய் தேகாரோக்கிய மற்றிருப்பதைக்குறிப்பதாகும்.

முதல் அங்குலாஸ்திகளில் சிறு கீறல்களாகக் காணப்பட்டு நகங்கள் ஒடுங்கியிருந்தால் பலஹீனத்தைக் குறிக்கும் குறுக்காய் அலைபோன்று ரேகைகள் முதல் அங்குலாஸ்தியில் இருந்தால் ஆபத்துவரப் போவதைக் குறிக்கும்.

## 3. முதல் விரலின் குறியும் ரேகைகளும்

முதல் ஆள்காட்டிவிரலில் நீண்ட ரேகை மூன்று அங்குலாஸ்தியிலும் சென்றிருந்தால், பெருந்தன்மை, நல்லொழுக்கம், பெருங்கீர்த்தி, செல்வாக்கு இவைகளைக் குறிக்கும்.

முதல் விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறிகாணப்படில், காரியம் அனுகூலப்படு மென்பதைத் தெரிவிக்கும்.

முதல் விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியாவது அல்லது இரண்டாவது அங்குலாஸ்தியில்

வட்ட வளையமான, ரேகை காணப்படினும், ஆரா துரியத்தைக் குறிக்கும்.

முதல் விரல் முதல் அங்குலாஸ்தியின் முடிச்சில் சூலம் காணப்படில், வித்தையில் ஜெயம் என்பதாகும்,

இரண்டாவது மூன்ருவது அங்குலாஸ்திகளில் குறுக்கு மருக்கான ரேகைகள் காணப்படில், பொறுமைச் சிந்தையுடையவர் என்பதைக் குறிக்கும்.

முதல் விரலின் மூன்ரும் அங்குலாஸ்தியில் ஆயுள் ரேகையின் கிளை மேல்நோக்கிச் சென்றிருந்தால், செல்வப் பெருக்கைக் குறிப்பிடுவதாகும்.

## 4. இரண்டாவது விரலின் குறியும் ரேகைகளும்

இரண்டாவது விரலில் நெருங்கிய பல ரேகைகள் காணப்படில், ஊக்கமுடையவர் என்பதைக் குறிக்கும். அலைபோன்ற செங்குத்தான ரேகைகள் இரண்டாவது விரலில் காணப்பட்டு, சனிமேட்டில் குறுக்குமருக்கான ரேகை யொளியும் காணப்படில், ஆபத்தின்மேல் ஆபத்து அடுத்து வருவதைக் குறிப்பதாகும். இரண்டாவது விரலில் முக்கோணம் காணப்படில், ஐம்புலன்களுக்கும் எட்டாத விஞ்ஞான சாஸ்திர ப்ரக்ஞையை அறிவிக்கும்.

இரண்டாம் விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக்குறி காணப்படில், படுகாய முண்டாவதைக் குறிக்கும். மறுகை விரலிலும் காணப்பட்டாலும், வெட்டுக் காயத்தால் ஆபத்தைத் தெரிவிக்கும். இது கொலையாளிகள் கையில் காணப்படுமெனச் சொல்லப்படுகிறது.

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சனிமேட்டில் முக்கோணமும் காணப்படில், பாவத் தன்மையைக் குறிக்கும்.

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், அந்த விரல் பிரண்டு முனை ஒடுங்கியுமிருப்பின், சாஸ்திர விசாரணையில் நுண்ணிய அறிவுடன் ஆழ்ந்துள்ளவர் என்பதைக் குறிக்கும்.

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் கருப்புப்புள்ளி யிருந்தால், குளிர்க் காய்ச்சலைக் குறிக்கும்.

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் இரண்டு நக்ஷத்திரக் குறிகளும், இரண்டாம் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும் இருந்தால், மரணம் தூக்கு மரத்தில் என்பதாகும்.

இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் அநேக செங்குத்தான ரேகைகள் காணப்பட்டு, முதல் அங்குலாஸ்தி மிருதுவாகவு மிருந்தால், சுதந்திரத் தன்மையைக் குறிக்கும். மூன்றும் அங்குலாஸ்தியிலிருந்து ஒன்றிரண்டு ரேகைகள் இரண்டாம் அங்குலாஸ்திக்குச் சென்றிருந்தால், ஞானவான் என்பதைக் குறிக்கும்.

### 5. மூன்றும் விரலின் குறியும் ரேகைகளும்

மூன்றுவது விரலின் அடியிலிருந்து இரண்டாவது அங்குலாஸ்தி முடிப்புவரை ஒற்றை ரேகை காணப்படில், பெருங் கீர்த்தியைக் குறிக்கும்.

மூன்றும் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் அடியிலிருந்து அநேக சிறு ரேகைகள் முதல் முடிச்சுவரை காணப்படில், ஒரு ஸ்திரீ காரணமாகப் பழைய நிலைமைக்குத் திரும்பியதைக் குறிக்கும்.

மூன்றும் விரலின் முதல் அங்குலாஸ்தியில் சூலம் காணப்பட்டுக், குருமேடும் நன்கு அமைந்திருந்தால், நல்லொழுக்கம், கற்பு இவைகளைக் குறிக்கும்.

மூன்றும் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியிலிருந்து ஒன்று அல்லது இரண்டு ரேகை இரண்டாம் அங்குலாஸ்திக்குச் சென்றிருந்து, கையில் அகண்ட முக்கோணம் சதுரமு மிருந்தால், ஒழுக்கத்தினால் கீர்த்தி பெற்றவர் என்பதைத் தெரிவிப்பதாகும்.

ஒன்று அல்லது இரண்டு ரேகை மூன்றும் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியிலிருந்து இரண்டாம் அங்குலாஸ்திக்கு எட்டியிருக்குமாயின், மகா புத்திமான் என்பதாகும்.

ஒற்றை ரேகை மூன்றும் அங்குலாஸ்தியிலிருந்து நன்கு அழுத்தமாகப் பதிந்து இரண்டாம் அங்குலாஸ்திக்குச் சென்றிருந்தால், ஞானத்தைக் குறிக்கும்.

மூன்றும் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் செங்குத்தான ஒற்றை ரேகை யிருந்தால், சுகவாழ்வைக் குறிப்பதாகும்.

மூன்றும் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் அர்த்த சந்திரனைப்போல் காணப்படில், அசௌகரியத்தையும், சந்தோஷ மற்ற வாழ்க்கையையும் தெரிவிக்கும்.

### 6. நான்காம் விரலின் குறியும் ரேகைகளும்

நான்காம் விரலின் ஒரு மூனையிலிருந்து மறு மூனை வரை ஒரு ரேகை வளைந்து போயிருந்தால், சத்தியவாதி என்பதைக் குறிக்கும்.

இரண்டு செங்குத்தான ரேகைகள் நான்காம் விரலில் சென்றிருந்தால், நேர்மையல்லது யதார்த்தத் தன்மையைத் தெரிவிக்கும்.

நான்காம் விரலின் இரண்டாம் அங்குலாஸ்தியில் சிக்கலான ரேகைகள் காணப்படில், உண்மையற்ற தன்மையைக் குறிப்பதாகும்.

நான்காம் விரலின் இரண்டாம் அங்குலாஸ்தியில் குறுக்கிட்ட ரேகைகள் காணப்படில், வஞ்சகத் தன்மையைப் புலப்படுத்தும்.

நான்காம் விரலின் மூன்றும் அங்குலாஸ்தி அடிவாரத்திலிருந்து ஒரு ரேகை முளைத்து நீண்டு காணப்படில், கூர்மையான புத்தியைக் குறிப்பதாகும்.

நான்காம் விரலில் ஒரு முறுக்கலான ரேகை மூன்றும் அங்குலாஸ்தியிலிருந்து இரண்டாம் அங்குலாஸ்திக்குச் சென்றுல், சூது வாதான தன்மையைக் குறிக்கும்.

அநேக ரேகைகள் சேர்ந்த சிக்கல் அல்லது ஒரு சூலம் நான்காம் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் காணப்படில், திருட்டுத் தன்மையை அறிவிக்கும்.

நான்காம் விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு சூலம் காணப்படில், பிரம்மசரியத்தைக் குறிக்கும்.

நான்காம் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் இரண்டு நக்ஷத்திரக் குறிகள் காணப்படில், அகௌரவமான தர்மத்தைத் தெரிவிக்கும்.

புதன் மேட்டிலுள்ள ஒன்று அல்லது இரண்டு ரேகை நான்காம் விரலின் மூன்றும் அங்குலாஸ்தியை நோக்கிச் சென்றிருந்தால், தத்துவ ஞானம், ஆத்ம விசாரணை, சாஸ்திர ஆராய்ச்சி இவைகளின் முதிர்ச்சியை அறிவிப்பதாகும்.

சித்திர விளக்கம்



படம் 1:—இது பெருவிரல் அல்லது கட்டை விரலி லுள்ள புள்ளி, நக்ஷத்திரக் குறிகளைக் காட்டுகிறது.

படம் 2:—முதல் (ஆள்காட்டி) விரலிலுள்ள செங்குத் தான நீண்ட ரேகை, வட்ட வளையம், நக்ஷத்திரக்குறி இவை களைக் காட்டுகிறது.

படம் 3:—முதல் விரலின் இரண்டாவது, மூன்றாவது அங்குலாஸ்திகளில் தோன்றிய குறுக்கு மருக்கமான சிறு ரேகைகளைக் காட்டுகிறது.

படம் 4:—இரண்டாவது (நடு) விரலில், முதல் அங்கு லாஸ்தியிலுள்ள நக்ஷத்திரக் குறியையும், மூன்றும் அங்கு லாஸ்தியிலுள்ள முக்கோணத்தையும் விளக்குகிறது.

படம் 5:—இது மூன்றும் (மோதிர) விரலின் முதல் அங்குலாஸ்தியிலுள்ள சூலம், இரண்டாம் அங்குலாஸ்தியி லுள்ள முக்கோணம், மூன்று நான்கு அங்குலாஸ்திகளில் பதிந்துள்ள ரேகைகளைக் காட்டுகிறது.

படம் 6:—இதுவும் மோதிர விரலின் மூன்றும் அங்கு லாஸ்தியிலுள்ள அர்த்தசந்திர வளையம், பின்னலான ரேகை இவைகளைக் குறிக்கிறது.

படம் 7:—இது நாலாவது (சுண்டு) விரலின் மூன்று அங்குலாஸ்திகளிலும் சென்றுள்ள ரேகையையும், மூன் றும் அங்குலாஸ்தியிலுள்ள நக்ஷத்திரக் குறியையும் விளக்குகிறது.

படம் 8:—இதுவும் சுண்டுவிரலின் முதல் அங்கு லாஸ்தியிலும், மூன்றும் அங்குலாஸ்தியிலுள்ள சூலத்தை யும், இரண்டாம் அங்குலாஸ்தியிலுள்ள ரேகையையும் குறிக்கிறது.

படம் 9:—இதுவும் சுண்டு விரலின் இரண்டாம் மூன்றும் அங்குலாஸ்திகளிலுள்ள ரேகைகளையும், குறுக்கு மருக்கமான சிறு ரேகைகளையும் குறிக்கிறது.

---

# 20-வது அத்தியாயம்

## ரேகை அகராதி

கைரேகை பார்க்க வருகிறவர்கள் முக்கியமாய்ச் சில கேள்விகளைக் கேட்டு விடுகின்றனர். அதாவது, "நான் எவ்வளவு காலம் ஜீவித்திருப்பேன்?" "எனக்கு ஆயுள் எவ்வளவு?" இன்னும் இதைத் தொடர்ந்தாப்போல் அந்திய காலத்தில் சம்பவிக்கும் அல்லது நேரிடும் ஆபத்து இவைகளையும் வினவுகின்றனர். இதை உத்தேசித்து, தத்தம் கை ரேகைகளைப் பார்த்துக் கொள்ளக் கூடியவர்களுக்கு அனுகூலமாக சவிஸ்தாரமாக வெளியிடுகின்றோம்.

இது பண்டைய காலத்து சாஸ்திரத்துடன் ஒப்பிட்டு அனுபவத்துக்கு ஒத்தததா யிருக்கும். நூல் பெரிதா யிருப்பினும், பற்பல விஷயங்களை நன்கு அறிந்து கொள்ளச் சௌகரியமா யிருக்கும்.

ஏட்டில் படித்ததை அனுபவத்துக்குக் கொண்டு வருவதே சிலாக்கியமாகும். இதில் தர்க்கிக்கக் கூடிய விஷயமாவது, கணக்கிடக் கூடிய வகையாவது யாதொன்றுமில்லை.

ஒருவர் கையைப் பார்த்ததும், முதலாவது, வயதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். வயதைக் குறிக்கும் இரண்டு கை ரேகைப்படங்க்ள் நினைவி லிருத்திக் கொண்டால், திரிகாலத்தைப் பற்றியும் சற்று சிந்திக்கலாம். அவசரப்பட்டுப் பலனை முன்பின்னுகச் சொல்லி விடுவது குற்றமாகும். முதலாவது, படிப்போர் தம் கையை நன்ருய் ஆராய்ச்சி செய்தும், மற்றவர்கள் கைகளோடு ஒப்பிட்டும், இதுவரை வெளியான பலாபலன்களையும், இனி வரும் அகராதியில் குறிப்பிட்டவைகளையும் கவனித்து ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். ஒருவருடைய பலாபலன்களை அறிந்து சொல்ல வேண்டிய மார்க்கத்தைப் பிரத்தியேகமாய்த் தெரிவிப்போம்.

விஷயம் தெளிவா யிருக்கவேண்டி, முதலாவது, இளமைப் பருவம், சரீர தத்துவ நிலைமை, வாழ்நாட்களிலுள்ள சுகாசுகங்கள், அந்தியகாலம் இவைகளைத் தெரிவித்து விட்டு, வாழ்வில் சம்பவிக்கக் கூடிய இதர பலாபலன்களை

யும், குணுதிசயங்களையும் வெளியிடுவோம். ரேகை சாஸ்திரத்தைப் படித்து ஆழ்ந்து சிந்திப்போருக்கு ரேகை அகராதி மிக்க அனுகூலமா யிருக்கும்.

## 1. இளமைப்பருவம் தேகதத்துவம் முதலியன

அபூர்வப்பிறவி—(அதாவது ஒழுக்கந் தவறியவிடத்துதித்தது) விதிரேகை சிக்கலாகவும், உற்பத்தியில் தீவும் காணப்படும். ஆயுள் ரேகையிலும் உற்பத்தியில் தீவுடனிருக்கும்.

ஆயுள் ரேகை உற்பத்தியில் மட்டும் தீவிருந்தால், பரம்பரையாய்த் தொடர்ந்து வரும் நோயைத் தெரிவிக்கும்.

விதி ரேகை கயிற்றைப்போல் பின்னலாகவும், உற்பத்தியில் குறுக்கு மருக்காகவும், சூலம் போன்று மிருக்குமாயின், இளமையில் துரதிர்ஷ்டத்தையும், அசௌகரியத்தையும் குறிக்கும்.

ஆயுள் ரேகையின் உற்பத்தியிலேயே சூல மிருந்தால், இளமையி லுண்டாகும் இடையூறைக் குறிக்கும். அதனோடு ஒரு புள்ளியு மிருந்தால், ஆபத்தை ஊர்ஜிதப் படுத்துவதாகும்.

ஆயுள் ரேகை சங்கிலிபோல் குரு மேட்டுக்குக் கீழே காணப்படில், பால்யத்திலுள்ள பலஹீனத்தை அறிவிக்கும்.

சரீர தத்துவங்கள் மெலிவடைந் திருக்கிறதை அறிவிக்கும் இதர குறிகள்:—நீண்டு மெல்லிய நகங்கள்; ஆயுள்ரேகை அகண்டு மங்கலாய்த் தோன்றுதல்; சங்கிலியாக ஆயுள் ரேகை கிளைகளுடன் தோன்றுதல்; அகண்டு மங்கலாய்த் தோன்றும் இருதய ரேகை, பட்டும் படாமல் காணப்படும் ஆரோக்கிய ரேகையும், புத்தி ரேகையும்.

அகால மரணத்தைக் குறிக்கக் கூடியவைகள்:—இருதய ரேகை சனிமேட்டில் உற்பத்தியாகி, புத்தி ரேகையின் மத்தியில் தோன்றும் சூலம்; இருதய ரேகை திருகலாக புதன்மேட்டுக் கருகில் புத்தி ரேகையோடு வளைந்து சம்பந்தப்படுதல்; புத்தி ரேகை விதி ரேகை குறுகிடுமுன் நின்றுவிடுதல்.

மூன்று கங்கணரேகைகள் யாதொரு சிக்கல் பின்னல் இல்லாமல் தோன்றியிருக்குமானல், நல்ல தேகாரோக்கியத்தைக் குறிப்பதாகும். நீண்ட ஆயுள் ரேகை சுக்கிரமேட்டை நன்கு வளைத்திருத்தல், இருதய புத்திரேகைகள் செங்குத்தாயும் நீளமாயு மிருத்தல், செவ்வாய் ரேகை இரண்டு கை

களிலுமிருத்தல், (இது ஆயுள்ரேகைக்குப் பக்கமாய் சுக்கிர மேட்டில் தோன்றும்) இவைகளும் திடகாத்திரத்தைக் குறிப்பதாகும்.

ஆரோக்கிய ரேகை இல்லாமலும் உள்ளங்கையில் தோன்றும். அமையும் முக்கோணத்தில் ஒருகோணமாவது செம்மையா யிருந்தால், சாதாரணமாக நல்ல ஆரோக்கியத் தன்மையைக் குறிப்பதாகும்.

ஆரோக்கிய ரேகை நீளமாய்ப் புதன் மேடுவரை சென்று, மூன்ருவது கோணம் அகண்டு நன்கமைந்திருந் தால், தீர்க்காயுளைக் குறிப்பதாகும்.

ஆயுள் ரேகை துண்டுபட்டும், ஏணிபோல் சிக்கலாயிருந் தால், எப்பொழுதும் நோயாளியா யிருப்பதைக் குறிக்கும்.

அகண்ட ஆரோக்கிய ரேகையின் இறுதியில் இரண் டாகத் துண்டிக்கப்பட்டு, ஆயுள் ரேகையில் குறுக்கிட்ட ரேகைகளும் காணப்படில், ஆபத்துக் கிடமான நோயைக் குறிக்கும்.

நகங்களில் மஞ்சள் நிறமான புள்ளி அல்லது வடு காணப்பட்டு, ஆயுள் ரேகை துண்டுபட்டு முக்கியமாய்க் கீழ்ப்பாதி சுக்கிர மேட்டை நோக்கி யிருந்தால், சமீபத்தில் மரணத்தைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை மிக மெல்லியதாகவும், மத்தியில் பட்டும் படாமல் மங்கலாயிருந்து, ஒரு புள்ளியோடு ரேகை நின்றி ருக்குமாயின், திடீம் சம்பவமான ஆபத்தைக் குறிக்கும். இன்னும், கப்புக் கிளையின்றி இருதய ரேகை சனிமேட்டி லிருந்து உற்பத்தியாவதும், ஆயுள் ரேகை சில சிறு ரேகை களோடு நின்று விடுவதும், புத்திரேகை வளைந்து, கங்கண ரேகைக்கு நெருங்கி, இறுதியில் நக்ஷத்திரக் குறி அல்லது சூலம் (கிராஸ்) காணப்படுவதும் திடீரென உண்டாகும் மரணத்தைக் குறிக்கும்.

உற்பத்தியில் ஆயுள், புத்தி, இருதயம் ஒன்றுபட்டும், செவ்வாய் மேட்டில் குறுக்கு மருக்கான ரேகைக் கூட்டம் காணப்பட்டும், விதிரேகையின் இறுதியில் சூலம் போன்ற குறுக்கிட்ட தன்மையு மிருந்தால், துர் மரணத்தைக் குறிக்கும்.

கங்கண ரேகையிலிருந்து ஒரு பயண ரேகை உற்பத்தி யாகி, மேல் நோக்கி ஆயுள் ரேகையோடு சம்பந்தப்படு மாயின், பிரயாணத்தில் ஆயுள் முடிவைக் குறிக்கும்.

செவ்வாய்மேட்டில் வட்டவளையமான ரேகையும், சந்திர மேட்டில் தோன்றும் வட்டவளைய ரேகையும், புத்திரேகை சந்திர மேட்டில் தொங்கி, இறுதியில் நக்ஷத்திரக் குறியும் இவைகள் ஜலத்தில் ஆயுள் முடிவு என்பதைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டின் மேற்பகுதியில் நக்ஷத்திரக் குறியும், செவ்வாய் மேட்டிலிருந்து ஒரு ரேகை கோணலாய்ச் சனி மேட்டுக்குச் செல்வதுமான இவ்விரண்டும் யுத்தகளத்தில் மரணமென்பதை அறிவிக்கும்.

புதன் மேட்டில் குறுக்கு மருக்கான ரேகைக்கூட்டம் காணப்படில், திருட்டு அல்லது கொள்ளையடிக்கு மிடத்தில் மரண மேற்படு மென்பதாகும்.

விதிரேகை முக்கோணத்திலிருந்து உற்பத்தியாகி, இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் சென்றிருந்தால், காராக்கிரஹத்தில் மரண மடைவதைக் குறிக்கும்.

விதிரேகை சனி மேட்டுக்கு நேராக வெட்டப்பட்டும், ஆயுள் ரேகையின் இறுதி முக்கோணத்திற்குள் நின்றும் அதில் ஒரு சூலமும், இரண்டாம் விரலின் இரண்டாவது மூன்றாவது அங்குலாஸ்திகளில் ஒரு நக்ஷத்திரக் குறியுமிருந்தால், தூக்குமரத்தடியில் ஆயுள் முடிவைக் குறிக்கும்.

புத்திரேகை வளைந்து, அலைபோல் அமைந்து, அதில் ஒரு முக்கோணமும் சூலமும் காணப்படில், விபத்தால் ஆயுள் முடிவை யறிவிக்கும்.

சனிமேட்டுக்குக் கீழே புத்திரேகை துண்டுபட்டு, சிவந்த புள்ளியும் காணப்படில், தலையின் மேல் விபத்து ஏற்படு மென்பதைக் குறிக்கும்.

இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சனி மேட்டில் உற்பத்தியான ஒரு ரேகை சுக்ர வளையத்தில் குறுக்கிட்டு மிருந்தால், கத்தி குத்தாலான விபத்தைக் குறிக்கும்.

சனி செவ்வாய் மேடுகளில் ஒரு நக்ஷத்திரக்குறியும் காணப்படில், மிருகங்களால் ஏற்படும் அபாயத்தைக் குறிக்கும்.

சுக்கிர மேட்டிலுள்ள ஒரு ரேகை சனி மேட்டுக்குச் சென்றிருந்தால், நான்கு கால் பிராணிகளா லுண்டாகும்

விபத்தைக் குறிக்கும். அந்த ரேகை கிளைக ளிருப்பின், உயிருக்கே ஆபத்தென்பதைக் குறிப்பிக்கும். கீழே புத்தி ரேகை துண்டுபட்டிருந்தாலும், மேற்சொன்ன பலனைக் குறிக்கும்.

## 2. நோய்களைக் குறிக்கும் ரேகைகள்

இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு கருப்புப்புள்ளி குளிர்ஜ்வரத்தைக் குறிக்கும்.

செவ்வாய் ரேகை இரண்டு கைகளிலும் கப்புக்கிளைக ளோடு சந்திரமேட்டை நோக்கியிருந்தாலும், ஆயுள்ரேகை யின் கிளை யொன்று சந்திர மேட்டுக்குச் சென்று, ஒரு நக்ஷத்திரக் குறியோடு முடியுமானால், மதுவுண்டதினு லேற் பட்ட கோளாறுகளைக் குறிக்கும்.

இருதய ரேகையின் மத்தியில் ஆழமான தழும்பு காணப்பட்டாலும், ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையில் குறுக்கிடும்போது செந்நிறமா யிருந்தாலும், ஜன்னி உண் டாகு மென்பதைக் குறிக்கும்.

இருதய ரேகையிலிருந்து இரட்டைக்கிளை சந்திர மேட்டை நோக்கிச் சென்றால், ஜன்னியால் ஆயுள் முடி வைக் குறிக்கும்.

இருதய ரேகை புத்தி ரேகையோடு இணங்கி யிருந் தால், சுவாசகாச நோயைக் குறிப்பதாகும்.

கையில் எப்பொழுதும் ஈர மிருந்தாலும், ஆரோக்கிய ரேகை அலைபோல் அமைந்திருந்தாலும், அதிகரித்த பித்த நோயை அறிவிக்கும்.

வட்டரேகை அல்லது வட்டமான புள்ளி ஆயுள் ரேகை யில் இருந்தாலும், புத்திரேகையின் வட்டவடிவமான ரேகையும் ஆரோக்கிய ரேகையில் சூலமும் காணப்படில், அந்தகன் என்பதைக் காட்டும். இன்னும் ஆரோக்கிய ரேகைக்கருகில் ஒரு நக்ஷத்திரக்குறியும், சூரிய ரேகை இரு தய ரேகையோடு சந்திக்கும்போது ஒரு கருப்புப் புள்ளி யிருந்தாலும், மேற்சொன்ன பல னுண்டாம்.

புத்தி ரேகை மங்கலாய் அகண்டு கருப்புப் புள்ளிக ளோடு ஆயுள்ரேகை உற்பத்தியில் கப்புங் கிளையுமா யிருந் தால், புத்தி மாறாட்ட முண்டாகும் என்பதாம்.

சுக்கிர மேட்டிலிருந்து ஒரு ரேகை புத்தி ரேகையில் நின்றுவிட்டாலும், புத்திரேகை அலைபோல் சென்று ஆரோக்கிய ரேகையைத் தொடுமானாலும், விதிரேகை புத்தி ரேகையோடு நின்றுவிட்டாலும், புத்தி ரேகை ஆரோக்கிய ரேகையோடு ஒன்றுபட் டிருந்தாலும், ஆயுள் ரேகை அநேக கிளைகளோடு உற்பத்தியானாலும், புத்தி ரேகையின் கிளை ஆயுள் ரேகையைக் குறுக்கிட்டு வெட்டியும் புதன்மேடு உப்பலா யிருந்தாலும், இவைகளெல்லாம் மூளைத்தொந்தரவைக் குறிப்பிடுவதாகும்.

மேல்நோக்கிய சந்திரமேடு உப்பலா யிருந்தால், பீனசம் அல்லது விடாத ஜல தோஷத்தைக் குறிக்கும்.

இருதய ரேகை மிக மெல்லியதாயும், வளைவின்றிச் செங்குத்தாயும் இருப்பது, புதன் மேட்டுக் கருகில் அநேக குறுக்கிட்ட சிறு ரேகைகள் ஆயுள் ரேகை கட்டை விரலுக்கு நெருக்கமா யிருத்தல், புத்தி ரேகையும் ஆரோக்கிய ரேகையும் ஒரு நக்ஷத்திரக் குறியால் சந்தித்தல், இரண்டாவது விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறி இருத்தல் முதலிய இவைகளெல்லாம் (குழந்தை யில்லாத) மலட்டுத் தன்மையைக் குறிக்கும்.

நகங்கள் சற்றே நீண்டும், அகண்டு நீல நிறமா யிருந்தாலும், இருதய ரேகை மங்கலாய் அகண்டிருந்தாலும், ரத்த ஓட்டம் சரியா யில்லாததை அறிவிக்கும்.

நகங்கள் நீண்டு வளைந்து கேடுற்றதாயும், நாடாக்கள் சேர்ந்ததுபோலும், புத்தி ரேகையில் சின்னஞ்சிறிய தீவுகள் காணப்பட்டாலும், க்ஷயரோக முண்டாவதற்கு அடையாளங்க ளாகும்.

இரு கைகளிலுள்ள புத்தி ரேகையிலும் கருப்புப் புள்ளியுடன் ஆயுள் ரேகையின் இறுதி சந்திரமேட்டை நோக்கி ஒரு நக்ஷத்திரக் குறியோடு முடியுமானால், ஒரு விதச் சித்தப்ரமை யுண்டாவதைக் குறிக்கும்.

புத்தி ரேகையில் குருமேட்டுக்குக் கீழே புள்ளிகள் காணப்படில், அவை செவிட்டுத் தன்மையைக் குறிக்கும்.

சந்திர மேட்டில் ஒரு நக்ஷத்திரக் குறி யிருந்தால், மகோதர நோய் உண்டாவதைக் குறிக்கும்.

குறுகிய நகங்கள், புத்திரேகை துண்டுபட்டுக் காணப்படுதல் இவை அபஸ்மாரக ரோகத்தைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை ஆயுள் ரேகையில் உற்பத்தியாகி, புத்தி ரேகை இருதய ரேகையை நோக்கிச் சென்ருலும், மயக்கம் தரும் ஙாக்காய் வலிப்பைக் குறிக்கும்.

புத்திரேகையில் அழுக்கடைந்த புள்ளிகளும், ஆரோக்கிய ரேகை செந்நிறமாயும் இருந்தால், தேகம் அதிக உஷ்ணமாயும் ஜ்வர முள்ளதுபோலும் தோன்றும்.

முதல் கங்கணரேகை உயர்ந்து பிதுங்கினமாதிரி யிருந்தால், மூத்திராசய சம்பந்தமான ரோகங்களைக் குறிக்கும்.

உப்பலால் மேல்நோக்கிய சந்திர மேடும், சந்திர மேட்டில் அகண்டு செங்குத்தான ரேகையில் குறுக்கிட்ட ரேகையும், ஆயுள் ரேகை இறுதிக் கிளைகளோடும், அதிலொன்று சந்திரமேட்டையும் நோக்கி யிருந்தால், வாயு பிடிப்பு முதலிய நோய்களைக் குறிக்கும்.

புத்தி ரேகை இறுதியில் இருதய ரேகையை நோக்கிச் சென்றிருந்தால், (மயக்கம்) கிறுகிறுப்பு உண்டாவதைக் குறிக்கும்.

இருதய ரேகை புத்தி ரேகையோடு இணங்கியும், ஒழுங்கற்ற ஆரோக்கிய ரேகையும் (Hay Fever) ஒருவித ஜுரத்தைக் குறிக்கும்.

சங்கிலிபோன்ற கோர்வையுற்ற புத்தி ரேகையும், சிறு ரேகைகள் புத்தி ரேகையில் குறுக்கிட்டும் உள்ள இவை அடிக்கடி உண்டாகும் தலைவலியைக் குறிக்கும்.

சனி மேட்டுக்குக் கீழே இருதய ரேகை துண்டுபட்டு இரண்டு முனைகளும் ஒன்றுக்கொன்று பின்ன லானாலும், (Heart Disease) இருதயரோகம் உண்டாவதைக் குறிக்கும்.

நகங்கள் குட்டையாகவும் சதுரமாகவும் இருத்தல், சுக்கிரமேட்டிலிருந்து ஒரு ரேகை இருதயரேகையோடு ஒன்றுபட்டிருத்தல், அகண்டு வெளுத்த இருதய ரேகை, இருதய ரேகை இல்லாதிருத்தல், பட்டும் படாத புத்திரேகை, ஆரோக்கிய ரேகை அலைபோ லிருத்தல், சூரிய ரேகையில் தீவும், ஆயுள் ரேகையில் நோய்க்குரிய குறியு மிருத்தல் இவைகளெல்லாம் (Heart Troubles) இருதய சம்பந்தமான சங்கடங்களைக் குறிக்கும்.

கை ஒழுங்கற்றும், சந்திர மேட்டில் ஒரு நக்ஷத்திரக் குறியு மிருந்தால் (Dangerous Hysteria) அபாயமான மூர்ச்சாரோக முண்டாவதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகையில் குறிக்கிட்ட அநேக சிறு ரேகைகள் காணப்படில், அடிக்கடி நோயுண்டாகும் என்பதைக் குறிக்கும். (ஆனால், அபாயமில்லை.)

ஆரோக்கிய ரேகையில் அழுந்திக் குறுக்கிட்ட ரேகை காணப்படில், பொதுவாய் நோய்வரப்போவதைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டிலுள்ள ரேகை இருதய ரேகையில் குறுக்கிட்டுச் சென்றால், துக்கங் காரணமாய் உண்டான நோயைக் குறிக்கும். நோய்க்குள்ள குறியுமிருக்கவேண்டும்.

ஆயுள் ரேகையின் உற்பத்தியில் தீவு காணப்படில், பரம்பரையாய்ப் பற்றிவரும் நோயைக் குறிக்கும்.

சந்திர மேட்டில் (இரு கைகளிலும்) நக்ஷத்திரக் குறி யிருந்தால், ஜலத்தினால் அபாயம் உண்டாகும்.

புத்தி ரேகை மங்கலாயும், கட்டைவிரல் மிகச் சிறியதாயு மிருந்தால், அசமந்தத்தைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை துண்டுபட்டிருந்தால், வரும் நோயால் பிழைப்பதரிது. துண்டுபட்ட இரண்டு முனைகளும் உள்ளங்கையை நோக்கியிருந்தால், குணப்படலாம் என்பதாகும்.

ஆயுள்ரேகையில் வெட்டுகள், துண்டுகள்பட்ட விடங்களிலெல்லாம் ஒவ்வொன்றுக்கும் ஒரு நோயுண்டாகும் என்பதை அறிவிக்கும்.

ஆரோக்கிய ரேகை அகண்டு அழுந்திப் பதிந்திருந்தால், வயோதிகத்தில் நோயுண்டாவதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை துண்டுபட்ட விடம் மெல்லிய ரேகையால் இணைக்கப்பட் டிருந்தால், நோயினின்றும் தப்பித்துக் கொள்வர் என்பதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை சதுரத்துக்குள் துண்டுபட் டிருந்தால், கடுநோயினின்றும் மீட்சி பெறுவர் என்பதாம்.

ஆரோக்கிய ரேகை அகல வடிவா யிருந்தாலும், இன்னும் அதில் தீவு காணப்படினும், ஒழுங்காய் நீண்ட புத்தி ரேகையும், இவைகளெல்லாம் அஜீரண நோயைக் குறிக்கும். சந்திர மேட்டில் சந்திரனைப் போன்ற குறி யிருந்தாலும், ஆயுள்ரேகையின் இறுதி நைந்துபோயிருந்தாலும்,

அதினின்றும் ஒரு கிளை சந்திரமேட்டை நோக்கி யிருந்தாலும், புத்திரேகை அலைவடிவாய் இருதய ரேகையை நோக்கி வளைந்திருந்தாலும், புத்திரேகை மிக்க வளைந்து சந்திர மேட்டில் தொங்கலாக இருந்தாலும், புத்திரேகை சனி மேட்டுக்குக் கீழே துண்டுபட் டிருந்தாலும், இவையெல்லாம் ஒருவிதச் சித்தப்பிரமை (பைத்தியம்) யைக் குறிக்கும்.

இருதய ரேகையின் கிளை சந்திர மேட்டுக்குச் சென்று ஒரு நக்ஷத்திரக் குறியோடு நிற்குமாயின், பரம்பரையான காமப்பித்தைக் குறிக்கும்.

புத்தி ரேகையின்மேல் நீண்டதோர் ரேகை சந்திர மேட்டிலிருந்து குறுக்கே விழுந்திருப்பதோடு, ஆரோக்கிய ரேகை முக்கோணச் சாயலில் இருந்தால், மத சம்பந்தமான பித்தைக் குறிக்கும். ஆனால், குரு மேட்டிலும் சுக்கிர மேட்டிலும் மூன்றும் பிறைவளைவு ரேகை காணப்படில், மத விஷயங்களில் நடுவு நிலைமையைக் குறிப்பதாகும்.

செவ்வாய் மேட்டின் மேற்பாகத்தில் சந்திரனைப் போன்ற குறி யிருந்தால், மூர்க்கமான பைத்தியத் தன்மையைக் குறிக்கும்.

ரேகைகள் மஞ்சள் நிறமாயிருந்தால், மஞ்சட் காமாலை உண்டாவதைக் குறிக்கும்.

இருதய ரேகை மாத்திரம் மஞ்சள் நிறமாயிருந்தாலும், புத்தி ரேகை நிறமாற்றமா யிருந்தாலும், அதில் நீலப்புள்ளி காணப்பட்டாலும், பித்தாசய சம்பந்தமான நோயுண்டாகும் என்பதை அறிவிக்கும்.

புத்தி ரேகை குருமேட்டுக்கும் சனி மேட்டுக்கும் மத்தியில் உற்பத்தியாகி யிருந்தால், தேகத்தில் ரத்த மில்லாக் குறைவைக் குறிக்கும்.

சுக்கிர மேட்டில் ஒரு சிறு வட்டப்புள்ளி காணப்படில், காதல் சம்பந்தமான நோயைக் குறிக்கும்.

சுக்கிர மேட்டிலிருந்து ஒரு ரேகை சனி மேட்டுக்குச் சென்றிருந்தால், ஸ்திரீகளுக்குப் பிரசவ சம்பவமான ஆபத்தைக் குறிக்கும்.

சுக்கிர மேட்டில் வெந்த தழும்புபோல் தடித்துக் காணப்படில், விஷாத ரோகத்தை (Chronic Melancholia)க் குறிக்கும்.

புத்தி ரேகை பல துண்டுகளாகவும் சதுரங்களாகவும் காணப்படில், ஞாபக மின்மையைக் குறிக்கும்.

ஆயுள் ரேகையில் கருப்புப் புள்ளி காணப்பட்டு, அதிலிருந்து ஒரு ரேகை கிளையாகத் தோன்றினால், நோயினால் கஷ்டப்பட்டபின் உண்டான நரம்புகளின் பலஹீனத்தைக் குறிக்கும்.

சந்திரமேட்டில் வலைபோலும் ரேகைகள் பின்னப்பட்டிருந்தாலும், ஒரு புள்ளி இருந்தாலும், அயன்மாரரோகத்திலிருந்து சித்தப்பிரமைக்குக் கொண்டுவிடுமென்பதைக் குறிக்கும்.

புத்தி ரேகையில் ஒரு தீவு காணப்படில், நரம்புகளின் அசதியைக் குறிக்கும்.

ஆரோக்கிய ரேகை உற்பத்தியில் செந்நிறமாயிருந்தால், இருதயத் துடிப்பைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை உற்பத்தியிலும் இறுதியிலும் நக்ஷத்திரக் குறியும் விதிரேகையின் இறுதி நக்ஷத்திரக் குறியோடுமிருந்தால், பக்கவாதத்தால் முடிவைக் குறிக்கும்.

நகங்கள் முக்கோணமாகவும், பட்டையாகவும், மெல்லியதாகவுமிருந்து, இதர ரேகைகள் மங்கலாய்க் காணப்படில், அடிக்கடி பக்கவாத நோய் உண்டாம் என்பதைக் குறிக்கும்.

ஆயுள் ரேகையிலிருந்து ஒரு கிளை மேல் நோக்கிச் சனிமேட்டில் தீவுடன் நின்றுவிடுமானல், சூலை நோயைக் குறிக்கும்.

தேகம் எண்ணெய் தடவியதுபோல் மினுமினுப்பாயிருந்தாலும், ஆயுள் ரேகையின் இறுதியில் ஒற்றைக் கிளையிருந்தாலும், வாயு சம்பந்தமான நோய் உண்டாகும் என்பதைக் குறிக்கும்.

மெலிவற்ற கையில் இரண்டாவது விரலின் முதல் அங்குலாஸ்தியும், அளவுக்கு மிஞ்சி உப்பலாயுள்ள குருமேட்டுடன் புத்திரேகை ஆரோக்கிய ரேகையோடு இணங்கியிருந்தாலும், விதிரேகை மங்கலாய், அநேக குறுக்கிட்ட ரேகைகளுடன் கூடிய ஆயுள் ரேகையும், விதி ரேகையின் இறுதியில் ஒரு நக்ஷத்திரக் குறியும், சந்திரமேட்டில் நக்ஷத்திரக் குறியும் இருந்தாலும், இவைகளில் ஒவ்வொன்றும் தற்கொலை புரிந்து கொள்ள எண்ணமுண்டாக்கக் கூடியதென்பதை அறிவிக்கும்.

சூரிய மேட்டுக்குக் கீழே புத்தி ரேகையில் தீவு காணப்படில், (Sun stroke) வெப்பக் கொதிப்பு உண்டாகும் என்பதாம்.

நீண்டு மெல்லிய நகங்கள் நொய்தானதாயிருந்தால், தொண்டை நோய் உண்டாகுமென்பதைக் குறிக்கும்.

இருதய ரேகையில் புள்ளிகளும், இருகையிலும் சனி மேட்டுக் கீழே புத்தி ரேகை துண்டுபட்டிருந்தாலும், துண்டு பட்டவை ஒன்றின்மேலொன்ருய் விழுந்திருந்தாலும், ரண காய முண்டாவதைக் குறிக்கும்.

செவ்வாய் மேட்டில் புள்ளி யிருந்தால், சண்டையினுல் காய முண்டாகும்.

குரு மேட்டில் மயிர்க்கால் போன்ற ரேகைக் கூட்ட மிருந்தால், தலையில் காய முண்டாவதை அறிவிக்கும்.

---

துரதிர்ஷ்டத்தைக் குறிக்கும் கை



## அதிர்ஷ்டத்தைக் குறிக்கும் கை



திரண்ட செல்வம், கீர்த்தி, செல்வாக்கு, தீர்க்காயுள் முதலானவைகளுடன் சந்தோஷமாய் வாழ்பவர்க்குரிய லக்ஷணங்களைக் குறிக்கும். கைரேகைப் படத்தைப் பார்க்கவும். அதற்கு எதிரிடையாய் ஆரோக்கியமற்று துரதிர்ஷ்ட வாழ்க்கையைக் குறிக்கும் கைரேகைப் படத்தையும் பார்க்கவும். எல்லாம் தெய்வீகமாக ஏற்பட்ட குறிகளென்பது நன்கு விளங்கும். இரண்டு படங்களிலும் காணப்படும் பல வித ரேகைகளையும் குறிகளையும் நிதானமாகக் கவனித்துணரும்படி கோருகின்றோம். அவரவர் கைரேகைகளைப் பொறுமையுடன் ஆராய்ச்சி செய்யக்கூடிய சக்தி உதயமாயின், த்ரிகாலத்தையும் அறிபவர் அல்லது த்ரிகாலஞானி

என்று ஏன் சொல்லக்கூடாது என்று ஒரு மகான் எழுதியிருக்கிறார். (பற்றற்ற தன்மையுமிருக்கவேண்டும்.) எண்ணற்ற நோய்களுக்குக் குறிகாட்டிச் செல்வதாயின் எல்லையில்லையென்றே அப்பகுதியை ஒருவாறு முடித்தோம்.

இனி இங்கிலீஷ் அகராதியில் கண்டபடி, ஆசை வழிப்பட்ட மாந்தர்கள் எவ்விதம் சுகாசுகங்களுக்குத் தங்களை ஈடுபடுத்திக் கொள்கிறார்கள் என்பதை எளிதில் அறிந்து கொள்ளலாம். இகபர மிரண்டுக்கும் வினை காரண மென்பதும், அதற்குத் தெய்வீகமான புத்தியைக் கொண்டே தீர்மானிக்க வேண்டியதாகும். ஒருவன் தன் இடைவிடா முயற்சியால் முன்னேற்ற மடைந்தாலும், லக்னத்துக்குள்ளவன் செயலென ஜோஸ்யர் சொல்லிக் கேட்பதுண்டல்லவா? எனவே, இகபர சுகத்துக்கும் முயற்சியே காரணமாயினும், அது புத்தியின் வன்மையைக் கொண்டே நடைபெற வேண்டும்.

### 3. காதல், அதனாலுண்டாகும் நன்மை தீமைகள்

Chastity :—நன்கமைந்த குருமேடும், மூன்றாம் விரலின் முதல் அங்குலாஸ்தியில் ஒரு சூலமும் காணப்படில், கற்பின் மேன்மையைக் குறிக்கும்.

Constancy :—குறுக்கிடப் படாத அநேக ரேகைகள் கட்டை விரலை நோக்கிச் செல்லுதல், நடுத்தரமான சுக்கிர மேடும், நீண்ட புத்தி ரேகையும், கெட்டியான கட்டைவிரலும், சுக்கிர மேட்டில் ஒரு சூலமும் கிளையுடன் உற்பத்தியாகும் இருதய ரேகை அதின் இறுதிக் கிளை குரு மேட்டை நோக்கிச் செல்லுதல், இவை ஒவ்வொன்றும் மன உறுதி அல்லது திடச்சித்தத்தைக் குறிப்பதாகும்.

Copuetry :—அளவுக்கு மிஞ்சிய சுக்கிரமேடும், இருதய ரேகை சங்கிலி வடிவாக அல்லது மங்கலாயு மிருந்தால், ஆசை காட்டி ஏய்க்குந் தன்மையைக் குறிக்கும்.

Disappointment Through Loved Ones :—இருதய ரேகையின் கிளைகள் கீழ்நோக்கி யிருந்தால், காதலுற்ற விடத்தில் ஆசாபங்கம் ஏற்படுவதைக் குறிக்கும்.

Engagement (Broken) :—இருதய ரேகை துண்டுபட்டிருந்தால், பிரிவினை யுண்டாகும். சனி மேட்டுக்குக் கீழே

துண்டுபட்டிருந்தால், சந்தர்ப்பத்தால் நேர்ந்த பிரிவினை யைக் குறிக்கும். சூரிய மேட்டுக்குக் கீழே அப்படி யிருந் தால், பணக்கஷ்டத்தால் நேர்ந்த காதலர் பிரிவினையைக் குறிக்கும். புதன்மேட்டுக்குக் கீழ் அவ்விதம் துண்டுபட்டிருந் தால், சபல சித்தத்தால் நேர்ந்த பிரிவினையைக் குறிக்கும்.

Heartlessness:—சுக்கிர சூரிய மேடுகள் இரண்டு கைகளிலும் அமைப்பின்றியும், கிளைகளற்ற இருதய ரேகையும் இரக்கமற்ற தன்மையைக் குறிக்கும்.

Happiness in love :—சுக்கிர மேட்டில் ஒரு ரேகை உற்பத்தியாகி, தங்கு தடை குறுக்கீடின்றி, புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தாலும், ஒழுங்கான இருதய ரேகை யும் அதன் கிளை குரு மேட்டை நோக்கி யிருந்தாலும், அன்பு நிறைந்த சுகவாழ்வை உடையவர் என்பதாகும்.

Immorality :—சுக்கிரமேடு அதீதமாய் அமையப் பெற் றும், கட்டை விரலின் முதல் அங்குலாஸ்தியில் நக்ஷத்திரக் குறியும், முதல் விரலின் முதல் அங்குலாஸ்தியில் நக்ஷத் திரக் குறியும் அல்லது இரண்டாம் அங்குலாஸ்தியிலிருந்து (அர்த்தபாதி) சந்திரவளையம் நெருங்கி யிருந்தாலும், கட்டை விரலின் அடிபாகத்தில் குறுக்கு மருக்கான ரேகைகள் அழுந்தி யிருந்தாலும், இவையெல்லாம் துன்மார்க்கத்தைக் குறிப்பிக்கக் கூடியவை யாகும்.

Influence of Opposite Sex:—இருதய ரேகையிலிருந்து பலரேகைகள் புத்தி ரேகையின்மேல் விழுவதுபோ விருந் தாலும், சுக்கிர மேட்டிலிருந்து ஒரு ரேகை முக்கோணத் தில் சென்று, பிறகு சதுரத்தில் நக்ஷத்திரக் குறியோ டிருந் தாலும், சுக்கிரமேட்டில் நக்ஷத்திரக் குறி இருந்தாலும், காதலிக்கப்படுவோர் (வசப்பட்டு) காதல் காரணமாய் நடப் பார் என்பதாகும்.

Jealousy :—இருதய ரேகை ஒரே நீளமாய்க் கையில் அமைந்து, சுக்கிர மேடும் அதீதமா யிருந்தாலும், நீண்ட இருதய ரேகையும், சந்திர மேடு அதீதமா யிருப்பதோடு சுக்கிரவளையமும் அமைந்திருந்தால், பொறாமையை விளக் குவதாகும். இன்னும் இருதய ரேகை விரல்களுக்கு நெருக் கமாய்ச் சென்றிருந்தாலும் பொறாமையைக் குறிக்கும்.

Loveless:—ஆயுள் ரேகையும் இருதயரேகையும் கிளைகளின்றி யிருந்தால், அன்பில்லா வாழ்க்கையைக் குறிக்கும்.

Love Affair (Fatal):—சந்திர மேட்டிலிருந்து ஒரு ரேகையும், சுக்கிர மேட்டிலிருந்து ஒரு ரேகையும், ஆயுள் ரேகையில் சந்தித்தாலும், புத்தி ரேகை ஆயுள் ரேகையோடு நெருங்கி உற்பத்தியாகி, சனி மேட்டுக்குக் கீழே இருதய ரேகையை நோக்கிச் சென்று, யதாஸ்தானத்தை அடைந்தாலும், புத்தி ஆயுள் இருதய ரேகைகள் உற்பத்தியில் ஒன்றுபட்டு, புத்திரேகை இரண்டு கிளையாக சந்திர மேட்டில் தொங்குமானாலும், காதல் வசப்பட்டு அழுந்துவர் என்பதாம்.

Love (Ardor in):—ஆரோக்கிய ரேகை இரட்டித்திருந்தால், காதல் தன்மையில் ஊக்கம் செலுத்துவதைக் குறிக்கும்.

இருதய ரேகையில் வெண்மையான புள்ளிகள் காணப்படில், காதல் வெற்றியை அறிவிப்பதாகும்.

Love (Desire for):—விரல்கள் மிருதுவாயும் கூர்மையாயும், சுக்கிரமேடு பலப்பட்டு மிருந்தால், காதலிப்பதில் விருப்ப முடையவர் என்பதை விளக்கும்.

(Love Fatal):—சுக்கிர மேட்டில் ஒரு சூலமும் இருப்பதோடு, புத்திரேகை ஆயுள்ரேகையோடு நெருக்கமாய்த் தொங்கியு மிருந்தால், காதலினாலே வாழ்வு முடியு மென்பதாம்.

Love (No End in) :—இரு கைகளிலுமுள்ள விதி ரேகையில் தீவில், இருதய ரேகையில் ஒரு தீவுமா யிருந்தால், காணப்படுவோரைக் காதலிப்பதில் ஒரு கணக்கு மில்லை என்பதாம்.

Love (For Near Relative) :—ஐக்கிய ரேகையில் தீவுகள் காணப்படில், பந்துக்களில் ஒருவரை காதலிப்பதாகும்.

Love (Great devotion in) :—இரட்டித்த இருதயரேகையிருந்தால், காதலிப்பதில் பக்தி மிகச் செலுத்துவர் என்றும், அதினாலே துக்கப்படுவர் என்பதாகும். கெட்டியானதும் பெரிதுமான கட்டைவிரல் இதை உறுதிப்படுத்தும்.

Love (Ideal) :—இருதய ரேகை குருமேட்டின் உச்சியிலிருந்தும் உற்பத்தியாயின், உத்தமமான அன்புடையவர் என்பதைக் குறிக்கும்.

Love (Material) :—சுக்கிரமேடு உன்னதமாயும் இருதயரேகை சனி மேட்டில் உற்பத்தியா யிருந்தாலும், வெண்மையாகவும் அகண்ட இருதய ரேகையோடு, சுக்கிர மேட்டிவிருந்து புதன் மேடு அல்லது செவ்வாய் மேட்டுக்குப் போயிருந்தாலும், காதல் அல்லது அன்பு பற்றுதலோடிராது என்பதைக் குறிக்கும்.

Love Not Ending in Marriage:—விதிரேகையிலிருந்து மெல்லிய சிறு கிளைகள் இருதய ரேகையோடு சாருமாயின், காதல் விவாகச் சடங்குகளுக்கு உட்படா தென்பதை அறிவிக்கும்.

Love (Only One) :—இருதய ரேகை குருமேட்டில் இரண்டு கிளையோடு உற்பத்தியாகி, சுக்கிர மேட்டில் ஒரு சூலம் இருந்தாலும், குருமேட்டில் உற்பத்தியான இருதய ரேகையோடு விதிரேகை நின்றுவிடுமாயின், காதலிப்பவர் ஒருவரே என்பதை உறுதிப் படுத்துவ தாகும்.

Love (Skill in) :—சுக்கிர மேட்டிவிருந்து ஒரு ரேகை உற்பத்தியாகி செவ்வாய் மேட்டுக்குச் சென்றிருந்தால், காதலிப்பதில் மிகுந்த சாமர்த்திய முடையவர் என்பதை நல்லமைப்புள்ள கையாயிருந்தால், மிக்க கௌரவத்தையும், கெட்ட கையா யிருப்பின், (சாமர்த்தியம்) வஞ்சகத் தன்மையையும் விளக்குவ தாகும்.

Love( Troubles in):—விதிரேகை இருதய ரேகையைக் குறுக்கிட்டுச் செல்லுங்கால் சங்கிலிபோலும் அல்லது இருதய ரேகையைக் கூடி நின்றுவிடு மாயினும், இருதயரேகையில் அநேக சிறு ரேகைகள் குறுக்கிட் டிருந்தாலும், முக்'கோண ரேகையில் ஒரு நக்ஷத்திரம் அலங்கோலமா யிருந்தாலும், இவைகளெல்லாம் காதலிக்கு மிடத்துத் தொல்லையும் கஷ்டமும் உண்டாவதைக் குறிக்கும்.

Love Wrecking one's Life :—சுக்கிர மேட்டில் சில ரேகைகள் உற்பத்தியாகி, ஆயுள் புத்தி இருதயம் இம்மூன்றையும் வெட்டிக்கொண்டு சென்றிருந்தால், காதலினுல் ஒருவர் வாழ்வு மனமொடிந்து சங்கட முறுவர் என்பதைக் குறிக்கும்.

Loved, but to the Subject's sorrow:—சுக்கிரமேட்டில் ஆயுள்ரேகைக்கு நெருங்கினுப்போல் மூன்று நக்ஷத்திரக் குறிகளிருந்தாலும், புத்திரேகை உள்ளங்கையில் பாதிதூரம்

சென்று பிறகு சுக்கிர மேட்டை நோக்கிச் செல்லுமானால், காதலிப்பது தனது துக்கத்துக்கே காரணமாகும் என்பதை விளக்கும்.

Loved by two and Getting None :—சுக்கிர மேட்டில் உற்பத்தியான ரேகையில் ஒரு சூலம் காணப்படுமானால், இருவர் தன்னைக் காதலித்தும் ஒருவரும் கிட்டுவதில்லை என்பதை அறிவிப்பதாகும்.

Love Affairs (two Simultaneous):—சுக்கிர மேட்டிலிருந்து இரட்டையான ரேகை உற்பத்தியாகி, செவ்வாய் மேட்டின் அடிவாரத்துக்குச் சென்றிருக்குமானால், ஏக காலத்தில் இருவர் காதலிக்கப் படுவதைத் தெரிவிக்கும். அந்த இரட்டை ரேகையின் மத்தியில் ஒரு நக்ஷத்திரக் குறி காணப்பட்டால், துரதிர்ஷ்ட வசமாய் விலகி விடுவதைக் குறிக்கும்.

Troubles from Unfaithfulness :—கட்டை விரலின் இரண்டாவது அங்குலாஸ்தியின் முடிப்பிலிருந்து ஒரு அழுத்தமான ரேகை உற்பத்தியாகி, சுக்கிர மேட்டைக் கடந்து, ஆயுள் ரேகையை வெட்டிக்கொண்டு போனால், விஸ்வாசிக்காத தன்மையிலிருந்து உண்டாகும் கஷ்டங்களைக் குறிப்பிடுவதாகும்.

Women (Influence of):—சந்திர மேட்டில் மூன்றாம் பிறைக்குறி யிருந்தால், ஒரு ஸ்திரீயின் செல்வாக்குக்கு உட்படுவர் என்பதைக் குறிக்கும்.

Women (Unhappiness Through) :—சுக்கிர மேட்டின் கட்டை விரலின் இரண்டாம் அங்குலாஸ்தியின் அடியில் ஒரு நக்ஷத்திரக் குறிகாணப்பட்டால், ஸ்திரீயின் காரணமாயுண்டான சந்தோஷமற்ற வாழ்க்கையைக் குறிக்கும்.

குறிப்பு:—சுக்கிர மேட்டிலிருந்து உற்பத்தியாகும் ரேகை ஆயுள், விதி, புத்தி இம் மூன்றையும் கடந்தால், தனஹானி, பிராணாபத்து, புத்திக் கலக்கம் இவைகளைக் குறிப்பதால், முற்பகுதியில் கூறப்பட்டதற்கும், இந்த வியாசத்தில் காதல் சம்பந்தமான சுகவாழ்க்கையை அறிவிப்பதற்கான குறிகளுக்கு முரண்பாடு இருப்பதாகத் தெரிகிறது. இந்த வியாசத்திலுள்ள காதல் சம்பந்தமான குறிப்புகள் மேல் நாட்டு ரேகை சாஸ்திரிகள் அபிப்பிராயத்தை யொட்டி விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## 4. தொழிலும் ஜெயாபஜயமும்

Art (Celebrity in):—புத்தி ரேகையின் கிளையொன்று தங்கு தடையின்றி நேரே சூரிய மேட்டுக்குச் சென்றால், வித்தையினுலுண்டாகும் கௌரவத்தைக் குறிக்கும். விதி ரேகை சூரியமேட்டை நோக்கிச் சென்றாலும் அதுவே பல னாகும்.

Art (Failure for want of Concentration):—அநேக சிறு ரேகைகள் சூரிய மேட்டில் காணப்படினும், சூரிய ரேகை இதர ரேகைகளால் குறுக்கிடப்பட் டிருந்தாலும், சூரிய மேட்டின் சிகரத்தில் சூரியரேகையின் முனை இரண் டாகப் பிளவு (கிளை) பட்டிருந்தாலும், இவையெல்லாம் சிந்தனை யில்லாததை விளக்குவதாகும்.

Business:—இரண்டு கைகளிலுள்ள மூன்றாவது விர வின் முனை சதுரமாக அமைந்திருந்தால், தொழில் செய்ய இஷ்டமுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

Clairvoyance (Gift of):—அருள் ரேகை தீவுடனிருந் தாலும், புத்தி ரேகை இறுதி (முனை) பெருங் கிளைகளாகப் பிரிந்திருந்தாலும், குருமேட்டை இருதய ரேகையின் கிளை யொன்று மாலைபோல் வளைந்துகொண் டிருந்தாலும். இவைகளெல்லாம் மனம் புத்திக் கெட்டாத த்ரிகால வர்த்த மானங்களைத் தெரிவிக்கக் கூடிய ஞானதிருஷ்டி வரப்பிர சாதமா யிருக்கு மென்பதை விளக்கும்.

Clerical Life (Honors in):—விதி ரேகை மணிக்கட்டி லிருந்து உற்பத்தியாகி, சனி மேட்டை நோக்குவதோடு புத்தி ரேகை சந்திர மேட்டில் வளைந்து தொங்கலா யிருந் தால், குமாஸ்தா உத்தியோகம் கௌரவத்தோ டுண்டென் பதைக் குறிக்கும்.

Diplomacy (Success in):—நான்காவது விரலின் முனை கூர்மையாகவும், புதன் மேட்டில் முக்கோணக்குறியு மிருந்தால், விவகாரங்களை யுக்தி சாமர்த்தியத்தாலே சித்தி செய்பவர் என்பதை விளக்கும்.

Discoveries:—புத்தி ரேகையில் வெண்மையான புள்ளிகள் காணப்படில், அபூர்வமானவைகளைக் கண்டு பிடிப்பவர் என்பதைக் குறிக்கும்.

Dramatic Genius:—மூன்ருவது விரல் புரண்ட தன்மையாகவும், சூரிய மேடு நன்கு அமையப்பெற்றிருந்தாலும், விதிரேகையின் கிளை புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தாலும், நாடகமாடும் கவித்வத்தைக் குறிப்பதாகும்.

Eloquence (Fame Through):—நாலாவது விரலின் முதல் அங்குலாஸ்தி கூர்மையா யிருந்தாலும், புதன்மேடு நன்கு அமையப் பெற்று நாலாவது விரலின் மூன்ரும் அங்குலாஸ்தியில் ஒரு நக்ஷத்திரக் குறி யிருந்தாலும், நீண்டதோர் புத்திரேகை சந்திரமேட்டில் வளைந்திருந்தாலும், நன்கு அமைந்துள்ள வல்லமையும் அதனுலுண்டாகும் கீர்த்தியையும் குறிப்பதாகும்.

Medical Skill:—இரண்டு அல்லது மூன்று ரேகைகள் புதன் மேட்டிலிருந்தால், வைத்திய சம்பந்தமான யோசனையுள்ளவர் என்பதைக் குறிக்கும்.

Military Life:—நன்கு அமைந்த செவ்வாய் மேடும் ஆயுளுக்கும் விதிரேகைக்கும் மத்தியில் முக்கோணக்குறி அல்லது நக்ஷத்திரக்குறி இருக்குமானல், ராணுவத்தைச் சேர்ந்தவர் என்பதாகும்.

Mimicry:—புத்திரேகையின் இறுதி புதன் மேட்டுக்குச் சென்றிருந்தால், பரிகாசமான விகடம் செய்பவர் என்பதைக் குறிக்கும்.

Scientific Pursuits (Success in):—நாலாவது விரல் மூன்ருவது விரலின் உயரத்துக்குச் சமமாக இருந்தாலும், புதன்மேட்டின் சிகரத்திலிருந்து ஒரு ரேகை நாலாவது விரலின் முதல் அங்குலாஸ்திக்குச் சென்றிருந்தாலும், பல சாஸ்திர ஆராய்ச்சி, யந்திர நுட்பம், இவைகளில் புத்திக்கூர்மையைச் செலுத்தி நல்ல பலனடைவதை தெரிவிப்பதாகும்.

## 5. செல்வ நிலை

## (தராதரம்)

Bankruptcy:—ஆரோக்கிய ரேகையில் ஒரு தீவு காணப்பட்டும், விதிரேகை பல சிறு ரேகைகளால் குறுக்கிடப்பட்டும், சூரியமேடு நல்லமைப்பின்றி யிருந்தால், செல்வம் எவ்வளவோ இருந்தும், கால வித்தியாசத்தால் அதை

இழந்து தரித்திர நிலைமை யடைந்து விட்டதை விளக்கும். விதிரேகை மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகி, குறுகிய புத்திரேகையோடு நின்றுவிடுமாயினும், அதுவே பலனாகும்.

Economizig (Talent for) :—நீண்டு நன்கு பதிந்த புத்தி ரேகையும், உபாயமான இருதய ரேகையும், முதல் விரல் மற்ற விரல்களை விட நீண்டு மிருந்தால், செட்டான தன்மைக்கே புத்தி நுட்ப முடையவர் என்பதைக் குறிக்கும்.

Extravagance in Money Matters :—விரல்கள் லகுவில் பின்பக்கமாய் வளையக்கூடியதா யிருந்தால், ஆராதுரியமாய்ப் பணத்தை விரயம் செய்வதைத் தெரிவிக்கும்.

Failure in Money Matters :—உள்ளங்கை பள்ளமாயும், அதனை யொட்டியே விதி ரேகையும் அமைந்திருந்தால், செல்வ சம்பந்தமான விஷயங்களில் பிரதி கூலத்தைக் குறிக்கும்.

Gain in Commerce :—புத்தி ரேகையின் கிளை நேரே புதன் மேட்டை நோக்கிச் சென்றிருந்தால், தொழிலில் லாபம் உண்டாவதை அறிவிக்கும்.

Gambler or Speculator's in Slincts :—மூன்றாவது விரல் இரண்டாவது விரலுக்குச் சமநீளமா யிருந்தால், புத்திரேகை வெகுவாய்ச் சந்திரமேட்டில் வளைந்து நீண்டிருந்தால், சூதாட்டம், வியாபாரத்தில் நிலவரத்தைச் சூதாய் உயர்த்துதல் முதலிய துர்க்குணம் அமைந்துளதைத் தெரிவிப்பதாகும்.

Greed :—இருதய ரேகை ஒரே நீளமாயும் விரல்கள் எல்லாம் உள்ளங்கையை நோக்கி வளைந்த பாவனையில் இருந்தால், பேராசையைக் குறிக்கும்.

Honesty (Doubtful) :—புத்தி ரேகை அலைவடிவமாயும், புதன் மேடு அதீதமாயு மிருந்தால், யோக்கியத்தன்மை சந்தேகத் திடமுள்ள தென்பதைத் தெரிவிக்கும்.

Inheritance :—முதல் மணிக்கட்டு ரேகையைக் குறுக்கிட்டு, நன்கு பதிந்துள்ள முக்கோணக் குறி அமையப்பெற்றிருந்தாலும், அதனோடு நெருக்கமாக ஒரு சூலம் அல்லது நக்ஷத்திரக்குறி யிருந்தாலும், பிதுரார்ஜித சொத்துக்களைக் குறிப்பிடுவதாகும். இரட்டை புத்தி ரேகைகள் அதுவே பலனைக் குறிப்பதென்றாலும், அப்படி அமைவது அபூர்வம்.

Riches :—சூரிய ரேகை தங்குதடையின்றியும், குறுக்கிடப்படாமல் மிக நீளமாகவே அமைந்திருந்தால், அளவற்ற ஐஸ்வரிய முடையவர் என்பதைக் குறிக்கும். இன்னும் புத்தி ரேகையிலிருந்து மூன்று கிளைகள் குரு மேட்டுக்குச் சென்றிருந்தாலும், நன்கு அமைந்த விதிரேகையும் சூரிய மேட்டுக்குச் சென்றுள்ள புத்தி ரேகையின் கிளை ரேகையும், மணிக்கட்டிலிருந்து சூரியமேட்டுக்குச் செல்லும் ரேகையும், இவைகளும் செல்வ சம்பத்தைக் குறிக்கும்.

Success in Business :—விதி ரேகையின் கிளையொன்று புதன் மேட்டுக்குச் சென்றிருந்தால், வியாபாரத் தொழிலில் லாப முண்டென்பதாகும்.

Wealth Late in Life :—மணிக்கட்டிலிருந்து இரண்டு ரேகைகள் சந்திரமேட்டுக்குச் சென்றிருந்தாலும், இருதய ரேகையிலிருந்து சூரியரேகை சூரிய மேட்டுக்குச் சென்றிருந்தாலும், வாழ்வின் முதிர்ச்சி அதாவது 45 அல்லது 50 வயதுக்கு மேல் உண்டாகும் சம்பத்தைக் குறிக்கும்.

---

## 21-வது அத்தியாயம்

### ரேகை ரகஸ்யங்கள்

இந்த ரேகை சாஸ்திர ஆராய்ச்சிக்கு ஏற்றவாறு அர்த்த புஷ்டியாயுள்ள ரேகைகளின் மர்மங்களை வெளியிட முடிகிறதில்லை. இதைப் பெரிதும் கையாண்ட முனிவர்களும் தீர்க்கதரிசிகளும் ஆழ்ந்த பல தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன ரென்பது பின்வரும் விஷயங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

ஆராய்ச்சி என்பது வெறும் நூல் ஆராய்ச்சியா யில்லாமல், அனுபவத்தில் மந்திர தந்திரங்களைக் கொண்டு உட்புகுந்து, பலா பலன்களைக் கண்டு, உலகினர் அறிய வெளியிடுகின்றனர். அஃதேபோல், இந்த ரேகை சாஸ்திரத்திலும் நவீனமாக அநேக புதுமைகளைக் கண்டுபிடித் திருக்கின்றனர். இது ஒரு சாஸ்திரத்தின் உட்பிரிவாயினும், அதில் உள்ளடங்கி யிருக்கிற விஷயங்களோ எண்ணுக் கடங்கா.

நாம் இருந்துவரும் இப்பிரபஞ்சமாகிய இந்த பூத பௌதிகத்தில் புறக்கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய பதார்த்தங்கள் மகா ஆகாசத்தி லுளதாயினும், பிரத்தியக்ஷமான ப்ரகாசம், உஷ்ணம், மின்சாரம், ஆகர்ஷணம் முதலிய நான்கும் அதில் அடங்கி யிருக்கின்றன.

"பதார்த்தம்" என்பது யாது என்று மதவாதிகள் தர்க்கம் செய்து நிச்சயித்தாலும், நிச்சயிக்காவிடினும், அதின் பிரபாவம் நாளுக்குநாள் நிதர்சனமாய்க் கொண்டிருக்கிறது.

தத்துவ நுட்பங்களில்லாத சாஸ்திரங்க ளில்லை. மேற்சொன்ன நான்கும் எவ்வளவுதான் முன்னேற்ற மடைந்திருந்த போதிலும், மூலதத்துவம் இல்லாமற் போவதில்லை. அவ்வாறே, ரேகை சாஸ்திரத்துக்கும் மூலாதாரமும் தத்துவ நுட்பமும் சொல்லப் படுகின்றன.

இந்தத் தத்துவ சாஸ்திரமும் உருண்டை வடிவமான மண்ணுலகை நக்ஷத்திரக் கூட்டம் சூழ்ந்துகொண் டிருக்கிறதெனச் சொல்லுகிறது. தத்துவமாக விசாரித்து, சூட்சமமாய் அறிகிறபோது, அணுக் கூட்டங்கள் சேர்ந்த ஒரு பிரவாக மாகிறது.

இந்த பூதபௌதிக உற்பத்தி தன்னுள்ளடங்கிய பிரமாண்டமான அணுக்கூட்டமாயினும், அவைகளின் ஜீவ கோடிகள் உணர்ச்சியோடும் கலந்திருக்கின்றன. இதை எப்படி அறிகிறதென்றால், பூதபௌதிக அணுக்கள் சேர்ந்த இந்த ஸ்தூல சரீரமும், அதனுள் உணர்வாய் வியாபித்திருக்கும் ஆத்ம சொரூபமும் கலந்திருப்பது வியக்தமாய் விளங்குகின்ற தல்லவா?

கோள ரூபமான கிரஹங்களின் செயல்களைப் பயனற்றதென்றாவது, வீண் கற்பித மென்றாவது சொல்வதற்கில்லை. இந்த விவாதத்தை நீக்குவதற்கு ஒரு உபமானம் போதுமென நினைக்கின்றோம். கிரகங்களில் ஒன்றாகிய, "சூரியனை"ப்பற்றி விசாரிப்போம். சூரியனுடைய வெப்பத்தாலும் பிரகாசத்தாலும் விர்த்தியாகும் கந்தமூலாதிகளின் உற்பத்தியை யாவரும் அறிந்ததன்றோ?

இந்த நவீனகாலத்திய விற்பன்ன சாஸ்திரிகள் உக்கிரமாய் ஆராய்ந்தும் பரீட்சித்தும் வருவனவற்றில், சந்திரனு

டைய பிரபாவம் எவ்வித மிருந்து வருகிற தென்பதைக் கவனிப்போம். தேய்ப்பிறையுள் வளர்பிறையும் முக்கியமாய் ஸ்திரீ வர்க்கத்தினிடத்தில் எங்ஙனம் அதன் பலாபலன் விளங்குவ தென்பதும், மற்றும் மனிதர் மூளையில் எவ்விதம் வேலை செய்கிற தென்பதும், இன்னும் அந்தக் கிரகம் நிலை மாறுதலால் உண்டாகும் உண்மை நிலைமையும் உணர்த்து கின்றது.

இப்படிக் கிரகங்கள் மாறிக்கொண்டே யிருப்பதால், அதில் சூட்சுமமான தத்துவங்கள் இருக்க வேண்டுமென் பது புலப்படுகிறது. இதைப் பாகுபடுத்தித் தெரிந்து கொள் வது வெகு சிரமமாயினும், விவிதமாகவோ கற்பனையாக வோ விவரித்துக் கூற உடன் படோம். பலனை—காரியத் தை—அறிகின்றோமே யன்றி, ஆதாரத்தை ஆராயும் வழக்கமில்லை. உதாரணமாக ஒரு விருக்ஷத்தை எடுத்துக் கொள்வோம். அதன் ஒரு பகுதியாகிய இலையைக் கவனி யுங்கள். அதில் வெகு நுட்பமாய் இணைக்கப்பட்டிருக்கும் நரம்புகள் எவ்வாறு தொன்றுதொட்டு வருகிறது. ஏதோ ஒரு சக்தியின் வியாபகமே எங்கும் பரவி மாற்றிக்கொண் டிருக்கிற தென்பது விளங்குகிற தன்றோ?

ஏதோ "ஒன்று" இருக்கிறது, அதன் சக்தி நம்மைச் சுற்றிக்கொண்டு நம்மில் இயக்கிக்கொண் டிருக்கிறது.

சூரியனும் சந்திரனும் நமது ஸ்தூலத்திலும் சூட்சுமத்தி லும் பெரும் பகுதியில் உய்விக்கச் செய்துவருவது நிதர்சன மாகும்போது இதர தேவர்களாகிய குரு, சனி, புதன், செவ் வாய், வெள்ளி முதலானவர்களும் தத்தம் கடமைகளைச் செய்யாமலிருக்க முடியாது.

வானசாஸ்திரத்தில் இன்னும் எத்தனையோ கிரகங் களை எடுத்துச் சொல்லி யிருக்கலாம். காலத்துக்கு ஏற்ற வாறு புதிய கிரகங்களைக் கண்டு எண்ணிக்கையை அதிகப் படுத்துகின்றனர்.

இதர கிரகங்களை யெல்லாம் விட்டு, ரேகை சாஸ்திரத் தில் ஏழு கிரகங்கள் மாத்திரம் ஏன் கையாளப்பட் டிருக்கிற தென்றால், கிரகங்களில், சனி, சூரியன், செவ்வாய், புதன், சந்திரன், சுக்கிரன் ஆகிய ஏழையுமே இக்காலத்திய சாஸ் திரங்களில் முக்கியமாய்ச் சொல்லப் பட்டிருக்கிறது. இதர

கிரகங்கள் சூரியனுக்கு வெகுதூரத்தி லிருக்கிறதாலும், சில கிரகங்கள் சிறிதா யிருப்பதாலும் அவைகளின் செல்வாக்கு பூமியினிடம் செல்வதில்லை யென்று சொல்லுகின்றனர்.

இந்த சப்த கிரகங்களின் ஒளி தனித்தோ ஒன்று சேர்ந்தோ நம்மில் வீசுகின்றன.

இந்தப் பூமி கிரகங்களின் வசப்பட்டு, அவைகளின் பலா பலனுக்குட்பட் டிருக்கின்றது

கிரகங்களின் நிலைமைக்குத் தக்கவாறு கூடியும், குறைந்தும் புத்துயிரும் புதிய சக்தியும் நம்மில் உண்டாகி, கால மாறுதலுக்கும், உலக வியலுக்கும் ஏற்றபடி நிகழ்கின்றன.

இதனைச் சிந்தித்துப் பார்க்குமிடத்துக் கீழ்க்கண்ட பிரச்சனைகள் உண்டாகலாம் :—

1. இந்தக் கிரகங்களால் மனித சரீரத்தில் குறிப்பிடக் கூடிய எவ்விதமான பலன்கள் உண்டாகின்றன?

2. சரீரத்தின் எந்தப் பகுதியில் பலன் உண்டாகிறது?

3. கடைசியாக எம்மாதிரியான அடையாளங்களை விட்டு நீங்குகின்றன?

முதல் கேள்விக்கு இந்த ஸ்தூல தேகத்தின் அமைப்பே கிரகபலன் என்பதைக் குறிக்கும். முக்கிய ஜென்மத்துக்குள் தொடர்பையும் கொண்டுள்ள தென்பதை விளக்குவதே இந்த ரகசியத்தின் நோக்கமாகும். பல ஜன்மாந்திர வாசனைகள் ஒரு மூட்டையாயிருந்து அதனுடைய ஓரோர் அம்சம் விஸ்ரிம்பித்து வெளிப்படுங் காலத்து, 'ஏதோ ஒரு சம்பந்தம்' என்பதாக விருப்பினும், அது சப்தக் கிரகங்களின் காரியமாய்த் தொடர்ந்து வருகிறது.

எனவே, மனிதர்கள் அந்த உயர்வான தேவர்களின் ஆதிக்கத்துக் குட்பட்டவர்க ளாகின்றனர். மனிதர்கள் நானுவிதமாய் வித்தியாசப்பட்டு, துரதிர்ஷ்ட வசமாய்த் தேவர்களுக்கும் ஒப்பானவர்களா யில்லை என்பது விளங்குகிறது.

இப்பொழுது இரண்டாவது பிரச்னையை எடுத்துக் கொள்வோம். இது வைத்திய சாஸ்திரத்துக்கு உட்பட்டதாகவுமாய் முடியும்.

வைத்திய சாஸ்திரம் 'நரம்புகளின் இயற்கையையும், வேலை செய்யும் விதத்தையும்' சொல்லுகிறது. தேகம், தசை, இரத்த நாடி சேர்ந்த மாம்ஸ பிண்டமென்பது வெளிப்படையாகத் தெரிய வருகிறது.

முக்கியமாய் நரம்புகளெல்லாம் மெல்லிய குழாய்களாயும் நுண்ணியதும், பல்லாயிரக் கணக்கான கிளை நரம்புகளால் இணைக்கப்பட்டு பற்பல தாதுக்கள் ஆங்காங்கு ஓடி, இறுதியாக தலைமை ஸ்தானம் சிரசிலும், கைகளிலும் அமையப் பெற்றிருக்கிறது. சிரசில் நான்கு அறிவுகள் இருக்கின்றன. பார்வை, மணம், உருசி, கேட்டல் ஆகியவைகளாகும் கைகளில் ஐந்தாம் அறிவு இருக்கிறது. கைவிரல்கள் அதிக உணர்ச்சியோடு, தேகத்தின் இதர பாகங்களுக்கு * ஸ்பரிச உணர்ச்சி அதிக வியாபகமாய்ப் பரவியிருக்கிறது.

மூளைக்கு அடுத்தபடியாக கைகளில் ஏன் அவ்வளவு உணர்ச்சி அதிகப்பட வேண்டும் என்ற சங்கை உண்டாகலாம்.

கைவிரல்கள் உயிருக்கு உற்ற கருவிகளாகவும், சரீர இயக்கத்துக்கு ஆதாரமாகவும் இருக்கின்றன. எந்த நோய் மனிதருக்கு வந்தபோதிலும் உள்ளங்கையில் எரிச்சல் அல்லது நமைச்சல் உண்டாவதும், மேலும், வாதபித்த சிலேஷ்ம நாடிகளைக் கொண்டும் தெரிந்து கொள்ளப்படுகிறது. கரத்திலுள்ள நாடிகள் தேக நிலைமையை அறிந்து கொள்ளக்கூடிய ஓர் அளவு கருவிகளாகவு மிருக்கின்றன. இதை நாம் விசேஷித்துச் சொல்லவில்லை. தேக தத்துவ நூல்களிலிருந்தும் தெரிந்துகொள்ளக் கூடியதே.

இந்த நாடி நரம்புகளின் வழியாய் உயிருக் காதாரமான கிரக மேடுகளுக்கு தாதுக்கள் செல்லுகின்றன. தற்காலத்தில், இதை அதிகம் விளக்க வேண்டியதிராது. ஏனென்றால் இப்பொழுது தந்தி, மின்சாரம் இவைகளின் வேலைகள் எவ்விதம் கம்பிகள் மூலமாகத் துரிதமாய் நடைபெறுகிறதென்பது யாவரும் அறிந்ததேயாகும். அதைப் போலவே, ஜீவசக்தியின் நிலைமை கரங்களின் நரம்புகளின் மூலமாய்

* மூளையிலுள்ள ஒரு முடிப்பான நரம்புகளுக்கும், புஜத்திலுள்ள நரம்புகளுக்கும் அதிக நெருக்கடியான சம்பந்த மிருக்கிறது. புஜத்திலுள்ள கிளை நரம்புகளின் இணைப்பே எல்லா விரல்களிலும் பரவி யிருக்கிறது.

கிரகமேடுகளுக்குச் செல்வதால் தெரிந்து கொள்ளக் கூடியதா யிருக்கிறது. நுண்ணிய ரத்த அணுக்களில் சுமார் 250 அல்லது 300 சேர்ந்த ஒரு கூட்டமே நரம்புகளின் சக்தியை இயக்குவதாய் டாக்டர் பசனி என்பவர் கண்டு பிடித்திருக்கிறார். கைகளில் அபூர்வ ஸ்பரிச உணர்ச்சியிலிருந்து வேலை செய்கிறதாக யூகிக்க வேண்டியதாகிறது. இதை நன்கு ஆராய்ந் துணர்ந்த விற்பன்ன விவேகிகள், கரங்களில் மின்சாரக் களஞ்சிய மிருப்பதாகச் சொல்லுகின்றனர்.

மூளையிலிருந்து அவ்வப்போது விஷயங்கள் (நிலைமை) கரங்களுக்கு அறிவிக்கப்பட்டு வருவதாய்த் தெரிகிறது. இது மிக்க உயர்வான ஜீவசக்தி யென்றே தீர்க்கதரிசிகள் சொல்லுகின்றனர்.

தேக தத்துவம் வைத்திய சாஸ்திரம் முதலிய சாஸ்திர நிபுணர்களைப் பின்பற்றியே நாமும் ஒப்புக்கொள்ள வேண்டும். அவர்கள் கரங்களை முக்கியமாய்க் கவனிக்கின்றனர். சரீர தத்துவ போஷணைக்கு வேண்டிய நுண்ணிய ரத்த அணுக்களுக்குக் கைகள் உறைவிடமா யிருந்து வருகிறது. இவ்வாறு இரண்டாம் மூன்றும் பிரச்னைகளுக்கு விடை பகர்ந்துளோம்.

தீர்க்கதரிசியான ஜெர்மெயின் இன்னும் சொல்லுவதாவது:—மனிதருடைய கைகள் அநேக த்ரிகால ரகசியங்களை வெளியிடக் காண்கிறோம். அதாவது, கையைப் பார்த்ததும் சரீரத்தின் இயல்பை, அதாவது மெலிந்தவர், கனத்தவர், கட்டை நெட்டை முதலியவைகளையும், ரத்த அணுக்களால் குறிக்கும் கிரகங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். இதற்கு ஆங்கிலத்தில் (Chrognormy) 'க்ஷிரோனமி' என்று சொல்லப் படுகிறது.

ரத்த தாதுக்கள் கிரக நிலைகளுக்கு ஏற்றவாறு அதன் பலன்களை அறிவிக்கிறது போல, கையில் நாளடைவில் கோடுகளாக ரேகைகள் பதிந்துவிடுகின்றன. குழந்தைகள் இஷ்டப்படி போட்டு வந்த கோடுகளை ஒருவாறு திருத்தி அக்ஷரங்களாகக் கற்பிப்பது போலாகும். இந்த ரேகைகள் கிரகங்களின் அடையாளங்களாகி விடுகின்றன.

சாஸ்திரோக்தமான ஞானத்தைக் கையில் ஒப்பிட்டுப் பார்ப்பதை மேல்நாட்டார் 'க்ஷிரோனமி' என்று வழங்குகின்றனர்.

சாஸ்திர ஞானம், அனுபவ ஞானம் இவ்விரண்டையும் ஒன்றுபடுத்தி உண்மைக் குத்தரவாதமான பலன்களைச் சாதுக்களும், சிலரேகை சாஸ்திரிகளும் சொல்லுகின்றனர். இதையே ஸ்ருதி, யுக்தி, அனுபவமென்றும் சொல்வதுண்டு.

கை துவண்டு அசைவதா லுண்டாவதுதான் ரேகைகள் என்று சில நம்பிக்கை யற்றவர் சொல்லுகின்றனர். ஆனல், இதற்கு எவ்வித ஆதாரமு மில்லை. கைத்தொழில் செய்கிற ஆசாரி, கொல்லன், ஒட்டன் இவர்களின் கையில் ரேகைகள் வெகுவாய்க் குறைந்து காணப்படுகின்றன. ஒரு தொழிலு மற்றவர் கையில் எண்ணுக் கடங்கா ரேகைகள் தோன்றுகின்றன. இதற்கு யாது உத்தரம் சொல்லக் கூடும்? சிசுக்கள் கையில் தோன்றி யிருக்கிற ரேகைகளுக்கு எவ்வாறு சமாதானம் சொல்லுவர்?

இரேகை சாஸ்திரத்தில் கூறப்பட்டவை அனுபவத்துக்கு ஒத்திராவிடில், கையிலுள்ள ரேகைகள் காலத்துக்குக் காலம் மாறிக்கொண் டிருப்பானேன்? விவகாரங்கள் மாறிக்கொண் டிருப்பது அனுபவத்துக்கு ஒத்து வருகிறது. அதன் பலிதமாக சரீர நிலைமை, புத்தி நுட்பம் இவைகளில் மாறுதல்கள் காணப்படுகின்றன. எனவே, அனுபவ ஞானம் சாஸ்திரமாகப் பிரகடனம் செய்யப்பட்டுள்ளதென்பது வெளிப்படை.

---

# 22-வது அத்தியாயம்

## ஸ்பரிச உணர்ச்சி

சரீரத்தைக் கவர்ந்துள்ள சர்மமானது வெங்காயச் சருகிலும் மிக்க மெலிதாயுளது. அதனுட்புறமுள்ள சதைப்பற்று பருப்போன்ற சதைக் கூட்டமாகும். இந்தப் பருப்போன்ற அணுச்சதை தனித்தனியாகவும், இரண்டு மூன்று சேர்ந்த கிளையாகவும், சங்குபோன்ற வடிவமாயும் அடுத்தடுத்து நெருக்கமாய் அமைந்திருக்கும். கையில் அதிகமாய் இருக்கிறது. அதன் அளவைக் கவனிக்கும்போது ஓர் அங்குலத்தில் நூற்றில் ஒரு பங்காகவும், இருநூற்றில் ஒன்ருகவும், அடுக்கடுக்காய் அமையப்பெற் றிருக்கிறது. இந்த ரத்த அணுக்கூட்டம் சிறிது பெரிதாகவும், முன்னும் பின்னுமாய் இணைக்கப்பட் டிருக்கிறது. சதையை மூடியிருக்கும் சர்மம்

வெங்காய சருகுபோன்ற அவ்வளவு மெல்லியதாய் தங்கு தடையின்றிக் கவர்ந்திருக்கிறது. ஒன்ருடொன்று ஒட்டிக்கொள்ளும்படி அவ்வளவு மெல்லிய நரம்புகள் சூழ்ந்திருக்கின்றன. சிறியரத்த நாளங்களே இங்கு நரம்புகள் என்று சொல்லப்படுகின்றன. ஆங்கிலத்தில் உடற்கூற்றை விவரிக்கும்போது, வைத்திய நூல்களில் தனித்தனி பதப் பிரயோகம் செய்யப்படுகிறது. பழக்கத்தில் இல்லாத பதங்களை உபயோகிப்பதால், அர்த்தமாகா தென்றே நரம்பு, ரத்த நாளம், ரத்ததசை, ரத்த அணு முதலிய பதங்களை லகுவில் தெரிந்து கொள்ளவேண்டி உபயோகிக்க நேரிடுகிறது. கிரகங்களின் நேரான சம்பந்தத்தை விளக்கவே உடற்கூற்றை விஸ்தரிக்கின்ருேம். ரத்த அணுக்களிலிருந்து ரத்தநாளம் (நரம்பு) உற்பத்தியாகிறது. ரத்த நாளமில்லாத சதையே கிடையாது. நரம்புகளின் இணைப்பு சரீரத்தின் மற்றப் பாகங்களைவிட உள்ளங்கையிலும் விரல்களிலும் அதிகமா யிருக்கிறது. தொட்ட மாத்திரத்தில் அறியக்கூடிய உணர்ச்சி கையில் விசேஷித்திருக்கிறது. உணர்ச்சிக் காதாரமான தாதுக்கள் கையில் நிறைந்திருக்கின்றன வென்று வாக்னர், மெய்ஸ்னர் என்ற இரு நிபுணர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர். இந்த தாதுக்களை நுண்ணிய ரத்த அணுக்கள் என்று சொல்லுகின்றனர்.

தேக தத்துவங்களின் அம்சங்க ளெல்லாம் பஞ்சபூதக் கூட்டுறவாயினும், கிரகங்களுக்குச் சொந்தமானவையாகும். உணர்ச்சி என்னும் ஒருவித சக்தி உடல் முழுதும் வியாபித்திருந்தாலும், நரம்புகளின் மூலமாகவே இணைக்கப்பட்டிருக்கிறது.

## அலெக்ஸாண்டர் டூமாஸ் அனுபவம்

ஒரு பிரபல பிரஞ்சுதேச கிரந்தகர்த்தா அலெக்ஸாண்டர் டூமாஸ் பின் வருமாறு எழுதுகிருர்:—திசபொரவி என்ற இத்தாலிய தேசத்திய தீர்க்கதரிசி, ஒரு பெண்மணிக்கு ரேகை சாஸ்திரத்தை நன்கு போதித்திருந்தார். அம் மாதுக்கு வாக்குவன்மையும், சற்றும் யோசனை யின்றி ரேகையைப் பார்த்தமாத்திரத்தில், த்ரிகால பலன்களையும் அப்படி யப்படியே சொல்லுவதில் மகா சாமர்த்தியமும் பொருந்தி யிருந்தன. இருவரும் ரேகைப் பலன்களைச் சொல்லுவதைக் கவனிக்கு மிடத்து, அந்த சாஸ்திரம் மிக்க மகத்துவம் பொருந்தியதென்றே சொல்லவேண்டும்; இவர்

கள் கையைப் பரீக்ஷை செய்வதும், ரேகைகளை உற்று நோக்குவதும், சென்றதைச் சொல்வதும், வருங்கால பலன்களைக் குறிப்பிட்டுச் சொல்வதும் மிக்க ஆச்சரியமா யிருக்கிறது. அவ்விருவரில் ஒருவரில்லாவிடில் மற்றவர் த்ரிகால ரகஸ்யங்களையும் விளக்கி விடுகின்றார்.

எனது தந்தியைப்பார்த்த அன்றே திசபொரலி என்ற மகானும், அவரிடம் ரேகை சாஸ்திரம் கற்றுக்கொண்ட அந்த ஸ்திரீயும், எனது வீட்டுக்கு வந்தார்கள். ரேகைப் பலன்களைத் தெரிந்து கொள்ள விரும்பிய ஒரு ஸ்திரீயும் என்னுடன் தயாராய் இருந்தாள்.

அந்த ஸ்திரீக்கு வயது இருபத்தேழாயினும், காரிருள் போன்ற கனத்த கூந்தலும், சிவந்த மேனியும், பளிங்கென பிரகாசிக்கும் பற்களும், சந்திர பிம்பம் போன்ற முகமும் அமையப் பெற்றிருந்தும், கழுத்தில் வெட்டுப்பட்ட தழும்பும் காணப்பட்டது. அவள் தன் கரங்க ளிரண்டையும் ரேகை சாஸ்திர மறிந்த பெண்மணியிடம் நீட்டினாள். நீண்ட விரல்களோடுங் கூடிய கரங்களிலுள்ள செவ்வாய், புதன், சூரியன், சனி, குரு முதலான மேடுகளைப் பார்த்து நன்கு அமையப் பெற்றுள்ள சுக்கிர மேட்டையும் நோக்கினாள். ஆயுள் ரேகை நீண்டு அமைந்திருந்தாலும், அது மூன்று நான்கு முறை வெட்டுப்பட்டுக் குறுக்கிட்டு மிருந்தது. இப்படிப் பார்த்துக்கொண் டிருக்கும்போது, அடுத்த அறையில் திசபொரலி பத்திரிகையைப் பார்த்துக்கொண் டிருந்தார். இவ்விடத்திய பேச்சுக் குரல் அவர் கேட்க முடியாது.

"அழகும் அதிர்ஷ்டமும் வாய்ந்த கைகள், சொந்த லாபம், குடும்ப லாபம் இரண்டும் ஒன்று சேர்ந்த" தென்றார் கை பார்த்த பெண்மணி.

கரங்களை நீட்டியவள் சற்றே முகத்தை உள்ளுக் கிழுத்தாள். உடனே நான் இரண்டுவித லாபமுடையவள் தான் என்றேன்.

"ஐந்தாம் வயதில் மரணபத்து நேர்ந்திருக்க வேண்டும்" என்றார்.

"எனக்கு ஞாபகமில்லை" என்றாள் "நன்றாய் யோசித்துப் பாருங்கள். என்னை வஞ்சிக்க முடியாது, நன்றாய் நினைத்துப் பாருங்கள்" என்றார்.

"இருந்தாலும், நீங்கள் குறிப்பாய்ச் சொல்ல முடியுமா?" என்றாள்.

"மரணபத்துக்கான குறியொன்று ஆயுள் ரேகையில் காணப்படுகிறது. ஆனால், எந்த விதமாக வென்று சொல்வதற்கில்லை" என்றார்.

"அப்படியானால் சொல்கிறேன் கேளுங்கள். என்னுடைய ஐந்தாம் வயதில் பிரேசில் என்ற ஊரிலிருந்தேன். என் தந்தை ஒரு சிறுத்தையை வீட்டில் பழக்கி வைத்திருந்தார். ஒருநாள் தோட்டத்தில் புற்றரையில் படுத்து நித்திரை செய்துகொண் டிருந்தேன். திடீரென அந்தச் சிறுத்தை என்னைத் தின்றுவிட எண்ணியதுபோல் என்மேல் தாவி என்னுடைய உடுப்புகளைக் கிழித்துச் சின்னாபின்ன மாக்கி விட்டது. அந்த மிருகம் என்மேல் குறி வைத்துப் பாய்ந்ததாக என் தந்தை எண்ணி ஓடிவந்தார். அதற்குள் நான் விழித்துக்கொண்டு உடனே ஓட ஆரம்பித்தேன். என் துணிக்குள்ளிருந்து ஒரு பாம்பு கீழே விழுந்தது. ஆனால், அது இறந்திருந்தது. அந்த சிறுத்தை பாம்பின் தலையைக் கடித்ததால், அது என்மேல் குறிவைக்க வில்லையென்று தெரிய வந்தது" என்றாள்.

"அது சரி; நான் சொல்வதில் தவறு இருக்க முடியாது. பதினைந்திலும் ஒரு பிராணபத் துண்டு. இம்முறை விஷத்தால் இறக்க வேண்டும்" என்றார்.

"இப்பொழுது நீங்கள் சொல்லியது சரி. ஒரு தடவை மரங்களடர்ந்த காட்டில் போய்க்கொண் டிருந்தேன். நான் இதுவரை பார்த்திராத ஒரு மரத்தில் அதில் அற்புதமாய்க் கனிந்துள்ள பழம் கொம்மட்டிக் காய்க்கு ஒத்திருந்தது. பார்வைக்கு அழகாய் சிவப்பாயிருந்தது. அதை உரித்துப் பார்க்கும்போது, 3, 4, விதைக ளிருந்தன. அவை கைக்கு வெல்வெட்டைப்போல் மிருதுவா யிருந்தன. வீட்டுக்கெடுத்துச் சென்றேன். என் பெற்றோரும் பார்த்தார்கள், ஆனால், இன்னதெனச் சொல்ல முடியவில்லை. மாலையில் விளையாடும்

போது விதைகள் மிருதுவா யிருந்ததால், அடிக்கடி உதட்டில் வைத்துச் சுவை பார்த்தேன். என்னுடன் விளையாடிய ஒரு சிறுவனும் நாவில் வைத்து அடிக்கடி ருசி பார்த்தான். இரவு என் உதடுகள் வீங்கிவிட்டன. கடுமையான சுரம் கண்டது. மறுநாள் காலை வாந்தி யெடுத்தேன். மூன்று நாள் சுரமிருந்து சிகிச்சையால் குணமானேன். அந்தச் சிறுவனே என்னைப்போல் கஷ்டப்பட்டாலும், துரதிர்ஷ்டவசமாய் இறந்து போனான்" என்றாள்.

"இப்பொழுது, பத்தொன்பதுக்கும் இருபதுக்கும் மத்தியில் கத்தி வெட்டாலும், மத்தியில் நெருப்பாலும் அபாயம் நேர்ந்திருக்க வேண்டும்" என்றார்.

"உண்மை! வீட்டில் ஒருபுறம் நெருப்பு வைத்து, மறுபக்கத்தில் கொலையும் நடந்தது" என்றாள்.

"விதி ரேகையும் இரண்டு துண்டா யிருப்பதால், பயங்கரமான பல இடுக்கண்களுக் குட்பட்டு, அன்பும் ஆதரவுமான பலரை இழக்க நேர்ந்திருக்க வேண்டுமென்று சொல்வதனுலும், பெருத்த லாபம்—அதிர்ஷ்டம்—உண்டா யிருக்க வேண்டும் என்றும் சொல்ல வேண்டும்" என்றார்.

"ஆச்சர்யம்:—அவ்வளவும் உண்மையே" என்றாள்.

"கடைசியாக உனது மூன்றாவது குழந்தை கர்ப்பத்திலிருக்கும்போது, அதாவது, இரண்டு வருஷங்களுக்கு முன் மிகுந்த கஷ்டத்திலிருந்து தப்பியிருக்கவேண்டும்" என்றார்.

வாஸ்தவமே என்று தலையை அசைத்தாள். "இப்பொழுது எவ்வித கஷ்டமும் நேராது. நாற்பத்தைந்துவயது வரை சுகமே; அதன் பிறகு ஜலத்தினால் ஓர் அபாய மிருக்கிறது. அதைத் தாண்டி விட்டால், ஆயுள் ரேகைக்கு மிகுந்த செல்வாக்கு உண்டாகிறது. கங்கண ரேகையும் ஒலித்திருக்கிறது. நல்ல சுகவாழ்வும், தீர்க்காயுளு முண்டு. உன் கை யுத்தவீரனுடையதுபோல் அமைந்திருக்கிறது. தேகாப்பியாசத்தால் வஜ்ரசரீரமா யிருக்கிறது. காரணங் கண்டு நடப்பது அபூர்வம். பார்த்தசமயத்தில் புத்திக்கு எது யுக்த மெனப்படுகிறதோ, அதை உடனே செய்துவருவது வழக்கமா யிருக்கிறது" என்றார். இவ்விதம் அப்பெண் மணிக்கு ரேகை பார்த்துவிட்டு, எல்லோரும் போஜனத்

துக்குச் சென்றேம். மகான் தேசபொரலியும் கூடவந்திருந் தார். அவரும் அந்த ஸ்திரீயின் கையைப் பார்த்துப் பொது வாக அவரது சிஷ்யைப்போலவே சொல்லி முடித்தார்.

### கை ரேகையைப் பரீக்ஷிக்கவேண்டிய வழி

ஒருவர் கையைப் பார்த்துப் பலாபலன்களைச் சொல்லு முன் கவனிக்க வேண்டிய விவரங்கள் பலவுள. முதலாவது, கையைத் தொடாமல் இயற்கை (சுபாவ) அமைப்பில் வைத் துப் பார்க்க வேண்டும். சில ரேகை சாஸ்திரிகள் கையைப் பிடித்து பரீக்ஷிக்கிற ரேகையை விரலினுல் அழுத்தியும் பார்க்கச் சொல்லுகின்றனர். பெரும்பான்மையோர் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. கையைத் தொடாமல் பரீக்ஷிப் பதே நலமாகும். கையில் ஒரு துரும்பு அல்லது பென்சிலைக் கொண்டு ரேகைகளைப் பார்க்கலாம்.

ஹஸ்த லக்ஷண சாஸ்திரம், ஹஸ்த ரேகை சாஸ்திர மென இரண்டு பிரிவுக ளிருக்கின்றன. முந்தியது, கையின் அமைப்பு, விரல்களின் அமைப்பு இவைகளை விளக்குவ தாகும். இரண்டாவதோ, உள்ளங்கையிலும், அதனைச் சுற் றிலுமுள்ள ரேகைகளையும், குறிகளையும், பூர்வ, தற்கால, வருங்கால விஷயங்களை அறிவிப்பதாகும். ஆகையினுலே, இரண்டு கைகளின் அமைப்பைக் கவனித்து, இரேகை களின் அபிவிர்த்தியையும், புத்தி ரேகையைக் கொண்டு மனேபாவத்தையும் அறியவேண்டும். பலனை அறிய விரும்பு வோரில் சிலர், ரேகை விவரம் கேட்கமாட்டார்கள். எனவே, அத்தகையோரிடம் அதைப்பற்றிப் பேசவேண்டியதில்லை.

பலனைச்சொல்ல ஆரம்பிக்குமுன் வயதைக் கேட்ட றிந்து ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். சென்ற காலத்தில் நடந்த சம்பவங்களைச் சீர்தூக்கி, நிகழ்காலத்தை உணர்த்தவேண்டும். சிலர் குறிப்பிட்டுக் கேட்கும் விவ காரத்துக்கு மாத்திரம் பலன் சொல்ல வேண்டும். பொது வாய் சகல பலன்களை விரும்புவரேல், நிதானமும் பொறு மையும் வேண்டும். தன்கையை நன்ருய் ஆராய்ந்து, மற்ற வர் கைகளையும் ஆராய்ச்சிசெய்து தெளிந்திருந்தாலொழிய பலா பலன்களைச் சொல்ல முற்படுவது பயனற்றதாகும். இரண்டு கைகளிலுள்ள ரேகைகளைப் பார்த்து, அபிவிர்த்

தியை முக்கியமாய்க் கவனித்து, ஆயுள் புத்தி இருதய நிலை மைகளையும் ஞாபகத்தில் வைக்க வேண்டும். குரு, சூரியன், சந்திரன், சுக்கிரன் இந்த நான்கு மேடுகளும் பலாபலன் களைச் சொல்வதற்கு மிக்க அனுகூலமாகும். அமெரிக்கா வில் ரேகை சாஸ்திர சங்கத்தின் தலைவர் சமீபத்தில் வெளி யிட்ட நூலிலும் மேற்சொல்லிய நான்கு மேடுகளைப் பிர தானமாய்க் கவனிக்கத் தக்கதெனச் சொல்லி யிருக்கின்ற னர். ஆயுள் பாகத்தை அவசரப்பட்டுச் சொல்லிவிடக் கூடாது. ஆனால், அதில் குறுக்கிட்ட காலத்தில் சம்பவங் களைச் சொல்லலாம். புத்திரேகை, மனோநிலை, சாதுர்யம், யுக்தி, சாதனம் இவைகளைக் குறிப்பதால், அதை அடுத்த படியாகத் தெரிந்து சொல்லவேண்டும். ஆரோக்கியத்தைப் பற்றி வினவினா லன்றி, நோய்நொடிகளைப் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. எமது அனுபவத்தில் அவசரமாய் தெரிந்து கொள்ள வருபவர்களே அதிகமா யிருக்கின்றனர். அதிலும், அதிர்ஷ்டத்தை மாத்திரம் கேட்க விரும்புகின்றனர். வெளி நாடுகளில் ரேகை பார்த்துக் கொள்கிறவர்கள் முதலாவது, வருங்காலத்தில் சம்பவிக்கக் கூடிய கெடுதிகளைக் கேட்டுத் தெரிந்துகொண்ட பிறகே நற்பலனைக் கேட்கின்றனர். அதற்கான வழிகளில் திரிந்து கொள்கின்றனர். ஒரு பிர சித்தி பெற்றவரின் குமாரன் உத்தியோக நிமித்தம் அநேக சிபார்சுடன் சென்னையில் காத்திருந்தார். அவருக்கு உதவி செய்வதற்காக பிரபல ஜமீன்தார்களும், பிரபுக்களும் வந் திருந்தனர். அதில் ஒரு ஜோஸ்யரு மிருந்தார். அவர் ஜாத கத்தைப் பார்த்து இரண்டு நாட்களுக்குள் மணிக்கணக் குடன் உத்தியோகத்துக்கு உத்தரவு கிடைக்குங் காலத் தைக் குறிப்பிட்டிருந்தார். தற்செயலாய் நானும் அவ்விடத் திற்குப் போக நேர்ந்தது. அக்கூட்டத்தில் ஒருவர் என்னை அழைத்து உத்தியோக நிமித்தம் வந்திருப்பவர் கைரேகை யைப் பார்க்கச் சொன்னார். அவ்விதமே கையைப் பார்த்து வயதைக் கேட்டறிந்து, 'உத்தியோகத்துக்கு இன்னும் ஆறு மாதம் அல்லது ஒரு வருடம் செல்லவேண்டியதா யிருக் கிறது. ஆனால், அவருக்கு உத்தியோகத்தில் தற்காலம் விருப்பம் சற்றுமில்லா திருக்கவேண்டும். மற்றவர்களின் தூண்டுகோலுக் குட்பட்டே முயற்சிக்குஉடன்பட் டிருக்கிற தாய்ச் சொன்னேன். கடைசியாக எதிர் பார்த்திருந்தபடி

உத்தியோகம், கைக்கெட்டியது வாய்க்கெட்டாத நிலைமையில் மாறிவிட்டது. வாசகர்களுக்கு ரேகையைப் பற்றி விவரித்துக் கூறுகின்றேன். அந்த வாலிபரின் கையில் விதிரேகை காலந்தள்ளி உற்பத்தியா யிருக்கிறது. அவரது வயதையும் விதிரேகையின் உற்பத்தியா யிருக்கிற காலத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது, சுமார் ஒரு வருடத்துக்குப் பிறகே விதியின் பலனுண்டாகும் என்பதாகிறது. புத்திரேகை சந்திரமேட்டில் வளைந்திருந்தபடியால், இவர் மற்றவர் வேண்டுகோளுக் கிணங்கியவரானூர் என்பதாயிற்று.

வெளியூரில் ஒரு சமயம் தங்கி யிருந்தபோது, ஒரு விருத்தர் தமது நிலைமையைக் கேட்டறிந்து சென்றூர். அப்பொழுது தான் வெளியூரிலிருந்து வந்தவர், எனது அறைக்கு வந்து, 'தங்களுக்கு ரேகை சாஸ்திரம் பரிச்சயம் இருக்கிறதாய்த் தெரிகிறது. தயவுசெய்து என் கையைப் பார்த்து எனது அதிர்ஷ்ட நிலைமையைச் சொல்லவேண்டு' மென்றூர். அது சமயம் நான் ஸ்நானத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தபடியாலும், அவரது சொல்லைத் தட்டமுடியாமல், உடனே வயதைக் கேட்டறிந்து முக்கியமான ஒரு சம்பவத்தைச் சொல்லி, மற்றவைகளைச் சாவதானமாய் அறிவிப்பதாய்ச் சொன்னேன். அதாவது, இவருடைய விதிரேகை 27-வயதில் இரண்டு துண்டாக மற்றெரு ரேகையால் வெட்டப்பட்டிருந்தும், எஞ்சி நின்ற ரேகை வளர்ந்து மிருந்தது. 'நீங்கள் கௌரவமாயும் சந்துஷ்டியோடும் வாழ்ந்து வரும்போது சுமார் இருபத்தேழாம் வயதில் ஒரு தொழிலை விட்டு, குளத்திலிருந்து குட்டையில் குதித்ததுபோல், வேறு தொழிலில் மாறி யிருக்கிறீர்கள்' என்றேன். அவர் சற்றே யோசனை செய்து, 'வாஸ்தவம், அதினுல் தான் கஷ்டத்தை அனுபவிக்கிறேன்' என்றூர். பிறகு அவர் சேலத்தில் பிரபல வக்கீலா யிருந்தாரென்றும், ஒத்துழையாமை இயக்கத்தில் கட்டுப்பட்டு வக்கீல் தொழிலைவிட்டு, சுதேசித் தொழிற்சாலை நடத்தி வருகிறதாயும் தெரிவித்தார். இப்பொழுது விதிரேகையில் ஏற்பட்ட மாறுதல் நன்கு விளங்கும்.

இதை இம்மட்டோடு நிறுத்தி, இனி இந்து சாமுத்திரிகா சாஸ்திரத்திலுள்ள ரேகைகளைப் பற்றியவரை, ஹஸ்த லக்ஷணம் ஹஸ்தரேகை இவ்விரண்டையும் பற்றி விவரிப்போம்.

ஹஸ்தரேகை சாஸ்திரம் முற்றிற்று.

---

# சாமுத்ரிகா சாஸ்திரம்

## 1-வது அத்தியாயம்

### கிரகநிலை

இந்தியாவிலுள்ள சோதிட சாஸ்திரிகள் கிரகநிலைகளை நன்கு தெரிந்தவர்கள். ஆதலால், இதுவரை வெளிவராத விஷயங்களைத் தெரிவிக்கிறோம்.

கிரகம், நக்ஷத்திரம் இவைகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்களாய் ஜீவர்கள் இம்மண்ணுலகில் வாழ்கின்றனர். பிரதி மனிதனுடையவும் விதிப்பயன்களாகிய சுகம், துக்கம், செல்வம், தரித்திரம், பாபம், புண்ணியம் இன்னும் வாழ்வின் ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் சம்பவிப்பதெல்லாம் கிரகங்களின் வழிப்பட்டதாகும். இதைத்தான் சோதிட சாஸ்திரம் என்று சொல்லப் படுகிறது.

இரேகை சாஸ்திரம் சாமுத்திரிகா சாஸ்திரப் பகுதியேயாயினும், இதுவும் கிரக சஞ்சாரங்களைக்கொண்டு பேசுவதால், சோதிடத்தின் ஒருபகுதி என்றும்சொல்ல வேண்டும்.

கையில் மாத்திரம்தான் ரேகை காணப்படுகிறதா வென்றால், உடலெல்லாம் ரேகைகள் இருக்கின்றன. பம்பாயில் சில ரேகை சாஸ்திரிகள் (மகாராஷ்டிரர்) இரண்டு பாதங்களிலுமுள்ள ரேகைகளையுங்கொண்டு பலாபலன் சொல்லுகின்றனர். இன்னுஞ் சிலர், நெற்றியிலுள்ள ரேகைகளிலிருந்தும் சொல்லுகின்றனர். ரேகைப் பகுதியாகிய மச்சங்கள் தேகத்தில் ஆங்காங்கு காணப்படுவதிலிருந்து ஆச்சரியப் படும்படியான பலன்களை வெளியிடுகின்றனர். இங்கே கை ரேகைகளைப் பற்றி மாத்திரம் சொல்லப் படுகிறது.

ஸ்திரீ புருஷர்களின் கைகளிலுள்ள ரேகைகள் ஒரு கையிலுள்ளபடி மற்றகையி லிருப்பதில்லை. ரேகை மாத்திரமன்று. கை அமைப்பு, விரல்கள், உள்ளங்கை முதலியவைகளிலும் மாறுதல் காணப்படுகின்றன. ஒரு மனிதனுடைய கை, விரல் முதலியவைகளிலேயே ஒன்றுக்கொன்று வித்தி

யாசப்படுகின்றன. இதற்கு நக்ஷத்திரங்களும், கிரகங்களுமே காரணமெனச் சொல்லப் படுகிறது. ஆகையினுலே, ஒவ்வொரு மனிதரும் தத்தம் கையிலுள்ள ரேகைகளைக் கொண்டு த்ரிகால வர்த்தமானங்களையும் எளிதில் தெரிந்து கொள்ளலாம். எப்படி, யாது காரணத்தால் என்பதை விளக்குவது சிரமமாகும். ஏனெனில், சோதிட சாஸ்திரத்தையே முற்றிலும் வெளியிட வேண்டி நேரிடும்.

இரேகை சாஸ்திரம் என்பது அனுபவம். நீண்டகால அனுபவத்தையே த்ரிகாலஞானி, வித்வத் ஸ்ரேஷ்டர் முதலான அநேக தீர்க்கதரிசிகள் ஒருசேரத் திரட்டிவைத்து, தலைமுறை தலைமுறையாக வந்துகொண் டிருக்கிறது. இப்பொழுது நமது அனுபவத்துக்கும் உண்மையாகவே இருந்து வருகிறது. எனவே, இந்த ரேகை சாஸ்திரத்தைப் படித்துணரும் பாக்கியம் பெற்றவர்கள் முக்கால சம்பவங்களை அறிந்து, அனுபவத்தில் உண்மையைக் கண்டுகொள்ளலாம்.

இத்யாதி காரணங்களாலே இரேகை சாஸ்திரம் மிக்க உயர்வென்று பரிந்து பேசவேண்டிய அவசியமில்லை.

கையிலுள்ள ரேகைக் குறிகளெல்லாம் தெய்வீகமான குறிகள், கிறிஸ்துமத வேத நூல்களிலும் 'உனது வாழ்வின் சம்பவங்களை யெல்லாம் கடவுள் உன் கையில் எழுதி வைத்திருக்கிறார்' என்று சொல்லி யிருக்கிறது. கையிலுள்ள ரேகைக் குறி அந்தந்தக் கால ஆட்சிக்குரிய தெய்வத்தையும் குறிப்பிடுகிறது. மனிதன் பிறந்தது முதல் இறப்புவரை கிரகங்கள் விதிவழியே இழுத்துச் செல்கின்றன.

இரேகை சாஸ்திரம் ஏழுகிரகங்களை மாத்திரம் விவரிக்கின்றது. அவை சூரியனைச் சுற்றிவரும் நெருங்கிய கிரகங்களாகும். பூமியும் கிரகங்களில் ஒன்றாகும். இந்தப் பூமியும் சூரியனை 365-நாள் அல்லது ஒரு வருஷத்தில் சுற்றி வருகிறது. பூமியைச் சுற்றிவரும் சந்திரனும் சோதிட சாஸ்திரப்படி ஒரு கிரகமாகும்.

## கிரகங்களின் செல்வாக்கு

குரு, சனி, சூரியன், புதன், செவ்வாய், சந்திரன், சுக்கிரன் முதலிய இந்த ஏழு கிரகங்களுக்கு மாத்திரமே மகா உன்னதமான செல்வாக்குகள் இருக்கின்றன. நாம்

உயிரோடு வாழ்வதும், அவைகள் நம்மை வாழ்விப்பதையும் கவனிக்குமிடத்து, நாம் அவைகளிடத்தில் விளையாட்டுக் கருவிகளைப் போலிருக்கின்றோம். அவைகளின் செல்வாக்கு இவ்வளவு தான் என ஓர் அளவிட்டு, பற்பல ரேகைக்குறிகளாக அவ்வளவு திட்டமாயும் பரிஷ்காரமாயும் கைகளில் அமைந்திருக்கின்றன. ஆகையினாலே, இந்தக் கிரகங்கள் எவ்விதம் விதித்திட்ட வினைப்படி, நம்மை ஆட்டி வைக்கப் போகின்றன என்பதை அறிந்து சொல்லக்கூடும்.

பூமி சூரியனைச் சுற்றி வரும்போது, முட்டைபோன்ற வடிவமாகச் சுற்று ஏற்படுவதால், பூமிக்கும் சூரியனுக்குமுள்ள தூரம் மாறுவதாலும் ஒரு வருஷத்தில் ஆறு ருதுக்கள் ஏற்படுகின்றன.

---

## 2-வது அத்தியாயம்

### கிரகங்களின் குண விசேஷங்கள்

### சனி

சனி பூமிக்கு வெகு தூரத்தி லிருக்கிறது. சோதிட நூற்படி அதன் நிறம் புகை வர்ணம். இது மூன்று வட்டவடிவமாய், ஏழு சந்திர சகாக்களோடு கூடி யிருக்கிறது. சனீ இந்த வழியில் சுற்றிச் சுற்றி வர 29-வருடம், 157-நாட்கள் ஆகின்றன. ஒரு மனிதன் அல்லது ஸ்திரீயின் உற்பத்தியில் அனுகூலமா யிருந்தால், கம்பீரம், செட்டான வாழ்க்கை, அதிஜாக்கிரதை, சாந்தம், வேலை செய்வதில் மூர்க்கம் முதலிய குணங்களை உடையவரா யிருப்பர். இத்தகைய புருஷர் ஸ்திரீயினிடம் மோகங் கொள்வர். பொதுவாக சாஸ்திர ரகஸ்யங்களை ஆராய்ச்சி செய்வதில் ஆழ்ந்திருப்பர்.

மனிதர் நெட்டையாக வளர்ந்திருப்பர். அங்கங்களெல்லாம் நீண்டிருக்கும். கருத்த கூந்தல் ஒன்று சேர்ந்த புருவங்கள் நீண்டு சற்றே கோணலான மூக்கு, கால்கள் ஒடுங்கிய தன்மையினு மிருப்பர்.

பிறக்கும்போது சனி ஒத்திராவிடில், ஸ்திரீயாயினும் புருஷராயினும் பொறாமை, பேராசை, திமிர், அல்பத்தனம், சந்தேகம், பாப தர்மம், கொடுங்குணம், பொய் முதலான

குணங்களோ டிருப்பர். இத்தகையோர் பார்வைக்கு அருவையயாயும், பெருங் கண்ணும், வளர்ந்து நெட்டையாக வும், மஞ்சள் நிறங் கலந்த முகமுடைய ராவர்.

## குரு

குரு, பூமிக்கு சனிக் கடுத்தபடியான தூரத்தி லுள்ளது. இதை நான்கு சிறிய நக்ஷத்திரங்கள் சூழ்ந்திருக்கின்றன. இது நீல நிறமுடைய தாமரை போன்றது. இது ராசி வீதி யில் ஒருமுறை சுற்றிவர பதினொரு வருஷம் 315-நாட்கள் ஆகின்றன. ஒரு புருஷனின் பிறப்பில் குரு அனுகூலமா யிருந்தால், கௌரவத்தைக் கொடுக்கும். மிக்க அன்பும் ஆதரவு முள்ளவராவர். சுந்தர மேனியோடு கலா வல்லவ ராயும், நற்குண முள்ளவராயும், மகா புத்திமானுயும் விளங் குவர்.

தேகம் நெட்டையாகவும், மேனி பொன்னிறமும்' ரோமம் கனத்து சுருண்டும், நரைத்து மிருக்கும். நீண்ட கண்களும், நன்குஅமையப்பெற்றுள்ள பற்களும், அகண்ட மார்பும், சிறுத்த இடுப்பும் உள்ளவராவர். அவர் வாக்கு கம்பீரமாயும், தெளிவாயு மிருக்கும்.

குரு அனுகூலமா யில்லாவிடிலோ, வீண் செலவுக்கார னுகவும், மனம் பலஹீனமாயும், கர்வம், மூடத்தனம் நிறைந் தவராயு மிருப்பர்.

## செவ்வாய்

செவ்வாய், அடுத்தபடியில் பூமிக்குச் சமீபமா யுள்ளது. இது இரண்டு சிறு நக்ஷத்திரங்களோடு சூழ்ந்துள்ளது. சிவந்த நிறமுடையது. இது இராசி வீதியில் ஒருமுறை செல்ல ஒரு வருஷம் 322-நாளாகின்றன. ஒருவருடைய பிறப்பில் அனுகூலமாயின், அஞ்சா நெஞ்சும், யுத்தத்தில் இஷ்டமுள்ளவராகவும், வேட்டை ஆடுவதில் ப்ரீதியுள்ளவ ராகவும் இருப்பர்.

இத்தகையோர் சமமான உயரமும், கெட்டியான தேக மும், சிவந்து வளைந்த ரோமமும், அகண்ட புஜமும், விசால மான கண்களும், சிவந்த மேனியும் உள்ளவ ராவர்.

செவ்வாய் அனுகூல மில்லாதவிடத்து, குரூரத் தன்மை யும் சண்டைக்காரனுகவும், வீண்பெருமை கொண்டவனுக

வும், புத்திசாலியாகவும், இரக்க மற்றவனுகவும், பொய், கபடம், சூது, வாது, கொலை, திருடு முதலிய தீக்குணங்களும் உடையவராவர்.

## சூரியன்

செவ்வாயைவிட சூரியன் பூமிக்குச் சமீபத்தி லிருக்கிறது. இது இருக்குமிடத்தை விட்டுச் செல்வதில்லை. பூமி இதைச்சுற்றி, வர 365-நாட்கள் செல்லுகின்றன.

ஒருவர் பிறக்கும்போது சூரியன் அனுகூலமாயிருந்தால், இரக்க முள்ளவராயும், கௌரவம், மற்றவர்களை ஆளுந்திறமை, அமைதி, இனிய சொல், தன்னம்பிக்கை, ஜாக்கிரதை, எச்சரிக்கை, கூர்ந்த புத்தி, சக்தி, பணத்தைச் செலவிடுவதில் ப்ரீதி, பெருந் தன்மை, பெரு நோக்கு முதலிய நற்குணங்க ளுடையவரா யிருப்பர்.

இத்தகையோர் வளர்ந்து நெட்டையாகவும், நன்கமைந்த சரீரமும், சுருண்டு ரோமம் நிறைந்த சிரசு, விசாலமான கண்களும், வட்ட வடிவமான முகமும், இனிய குரலும் உடையவராவர்.

சூரியன் ஒருவர் பிறப்பில் அனுகூலமா யிராவிடில், வீண் டம்பம், கர்வம், அதிகபேச்சு, கஞ்சத்தனம், சிந்தனையற்ற தன்மை முதலியவைகளோடிருப்பர். இன்னும்தந்தை வைத்துப்போன சொத்தை அழிப்பவராயு மிருப்பர்.

## சுக்கிரன்

சுக்கிரன் சூரியனைவிட பூமிக்குச் சமீபமா யிருக்கிறது. இது சுத்த வெண்மை நிறமுடையது. இராசி வழியில் ஒரு முறை சுற்றிவர, 224-நாட்கள் ஆகின்றன.

ஒருவர் பிறக்கும்போது சுக்கிரன் அனுகூலமா யிருந்தால், ததும்பிய அன்பு, நம்பிக்கை, விஸ்வாசம், நேசம் முதலிய குணங்களுட னிருப்பர். சங்கீதத்தில் மிகப்ரீதியும், எப்பொழுதும் உற்சாக முள்ளவராயும், எல்லோருக்கும் உபகாரியாயும் இருப்பர்.

இத்தகையோர் நடுத்தரமான உயரமும், பார்வைக்குச் சுமாராகவும் தோன்றுவர். நீல நிறத்தோடுங்கூடி அகண்ட நேத்திரங்களும், உன்னத அமைப்புள்ள நாசியும், தழும்புடன் கூடிய கன்னங்களு முள்ளவராவர்.

சுக்கிரன் அனுகூலமா யிராவிடில், காம இச்சையில் எப்போதும் ஆசைப்பட்டவராயும், சடுதியில் சண்டைபோடு கிறவராயும், குணங் கெட்டவராயும் இருப்பர். இன்னும் சூது, வாது, கட்குடி, படிப்பின்மையும் சேர்ந்திருக்கும். இத்தகையோர் கனத்த சரீர முடையவராயும், உதடுகள் பருத்தும், சதைபிடித்த கன்னங்களையும் உடையவ ராவர்.

## புதன்

சுக்கிரனைவிட புதன் பூமிக்குச் சமீபத்தி லிருக்கிறது. இதன் வர்ணம் சிகப்புநிறம். இராசி வழியில் ஒருமுறை சுற்றிவர 88-நாட்கள் செல்லுகின்றன.

ஒருவர் பிறவியில் புதன் அனுகூலமா யிருந்திடில், மகாபுத்திமானுயும், கற்பனு சக்தி யுடையவராயும், விரதங் கள் செய்பவராயு மிருப்பர். குழந்தைத் தன்மை, ஞாபக சக்தி, தொழில் நிபுணத்வம் முதலியவைகளும் இருக்கும்.

ஒத்தவுடியாயுமின்றி, மிக்க கனத்த தேகமுமின்றி, நடுத்தர அமைப்புள்ளவ ராவர். மிருதுவான வாய், நீண்ட முகம், அகண்ட நெற்றி, மஞ்சள் நிறங் கலந்த நேத்திரங் கள், நீண்ட புருவங்கள் செந்நிறமான கூந்தலு முடையவ ராவர்.

புதன் அனுகூல மில்லாவிடிலோ, மூடத்தனம், பெரும் பேச்சு, அருவருப்பு, பொய், உன்மத்தத் தன்மை முத லான குணங்களோ டிருப்பர்.

இத்தகையோர் குட்டையாகவும் அசூயையாயுமிருப்பர். நேத்திரங்கள் மிகச் சிறிதாகவு மிருக்கும்.

## சந்திரன்

சந்திரன் பூமிக்கு உபக்கிரகம். அதாவது, சகாவாயுள் ளது. இது இராசி வீதியில் ஒருமுறை சுற்றிவர 27-நாள் 7-மணி ஆகின்றன.

ஒருவர் பிறக்குங்கால் சந்திரன் அனுகூலமாயிருந்தால் மிக்க சாதுவாகவும், இளகிய மனமுடையவராகவும், எப் பொழுதும் படிக்கிறதிலேயே இஷ்டப்பட்டவராகவும், மற்ற வர்களுக்குச் சந்தோஷகராகவும், கற்பனுசக்தி நிறைந்தவ ராகவு மிருப்பர், கவித்திறமையு முண்டு.

# 3-வது அத்தியாயம்

## ரேகைப் பெயர்களும் இதர சாஸ்திரங்களும்

பூர்வீகமான இந்து ரேகை சாஸ்திரத்தைத் தமிழ் மக்கள் எளிதில் தெரிந்துகொள்ளும் பொருட்டே முதலாவது அயல்நாடுகளில் வழங்கி அனுபவத்தி லிருக்கிறபடியே வெளியிட்டு வந்தோம். இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் பிரசித்தியாகிவரும் சாஸ்திரம் ஒன்றே தான். ஆனல், ஆராய்ச்சி முறையில் அறிந்து கொள்ளும் மார்க்கம் வேறு கிறது. பலன்கள் ஒரே மாதிரியாக இருக்கும்; அறிந்து கொள்ளும் வழியில் சிற்சில வித்தியாசமிருக்கிறது. ஆங்கில ரேகை சாஸ்திரத்தைப் படித்தறியாத மகாராஷ்டிர சாஸ்திரிகளையும், பாரசீக சாஸ்திரிகளையும், தமிழ் நாட்டில் குறி சொல்வோர்களையும் பல தடவைகளில் கண்டு விசாரணை செய்துள்ளோம்.

கூர்ஜர நாட்டுக்கும் மகாராஷ்டிர நாட்டுக்கும் மத்தியஸ்தானமா யிருந்துவரும் பம்பாய் நகரில் ரேகை சாஸ்திரிகள் இந்து ரேகை சாஸ்திரத்தி லுள்ளபடியே பதப்பிரயோகம் செய்கின்றனர். ஆங்கில ஆராய்ச்சியில் குறிப்பிட்ட பெயர்கள் இந்து சாஸ்திரத்தில் நூதனமாய்த் தோன்றும். ரேகை ஒன்ருயினும் பெயரிடுவதில் வித்தியாசமுண்டாகிறது. எதை ஹிருதய ரேகையென்று சொல்லி வந்தோமோ அதை, இந்து ரேகை சாஸ்திரத்தில் ஆயுள் ரேகையாகக் கணிக்கப் படுகிறது.

இருதயம், விதிரேகையிலிருந்தும் ஆயுள்கால சந்தர்ப்ப நிகழ்ச்சிகளைக் கண்டறிவதற்கு, ஆயுள் ரேகையிலிருந்து கணக்கிடப் படுவதுபோல் கணக்கிடப் படுவதால், அவைகளும் ஆயுளைக் குறிப்பிடக் கூடியதாகும்.

ஹிருதய ரேகைக்குக் கீழேயுள்ள புத்தி ரேகையைத் தாய் ரேகை என்று சொல்லப் படுகிறது.

சில ஆங்கில நூல்களில் புத்திரேகையை மேஜைரேகை என்றும், மத்திய ரேகை என்றும் சொல்லப் படுகிறது.

இந்து ரேகை சாஸ்திரத்தில், ஆயுள் ரேகையைத் தந்தை ரேகை யென்றும், விதிரேகையை ஊர்த்துவரேகை யென்றும் சொல்லப் படுகின்றன.

இவ்விதமாக ரேகைகளைப் பெயரிட்டுச் சொல்வதில் சாமான்ய வித்தியாசத்தைக் காணலாம்.

சாமுத்ரிகா சாஸ்திரத்தின் ரேகைப் பகுதி சற்றேறக் குறைய நூறு ஸ்லோகங்களில் விவரிக்கப்படுகிறது. அதில் மேற் சொன்னபடி ரேகைகளின் பெயர்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அம்மட்டோடன்றி அநேக புதிய குறிகளும் வெளியாகின்றன. அதாவது, குதிரை, யானை, சங்கு, யுத்த ரதம், கோவில் முதலிய குறிகளைப்பற்றிப் பேசுகின்றது, அவைகளை அலங்காரமாக உவமை கூறலாமே யன்றி, சொல்லுக்குரிய லட்சணத்தைக் காண்பது கடினமேயாம்.

என்றாலும், முக்கிய ரேகைகள் பலாபலனை அறியுங் கால், இதர சாஸ்திரங்களோடு ஒத்திருக்கின்றன.

## பற்பலவகை ரேகையும் அனுபவமும்

இன்னொரு முக்கிய விஷயம் வாசகர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். சில வருடங்களுக்கு முன் பம்பாயிலிருந்தபோது, ரேகை சாஸ்திரத்தை ஆராய்ச்சி செய்யுங்கால் எவர்கை நீட்டியபோதும் முன் பின் யோசனை யின்றியே சொல்லிவந்தேன். அப்பொழுது சதா யோகஞ் செய்யும் ஒரு உத்தமர், யான் இருக்கு மிடத்தில் தங்கி யிருந்தார். ஒரு பிரபல கோடீஸ்வரர் தன் கையைக் காட்டிச் சில முக்கிய விஷயங்களைக் குறித்துக் கேட்டார். உள்ளவாறு விஷயங்களைத் தெரிவித்ததும், மிகுந்த சந்தோஷமடைந்து. யான் யாதொரு பிரதி பலனை விரும்பாதது கண்டு, தனது பங்களாவில் ஊருக்குத் திரும்பும் வரை சௌகரியமாயிருந்து போகலா மென அழைத்தார். அதற்குச் சற்றும் இணங்க வில்லை. இதைக் கேட்டிருந்த அந்த யோகி, என்னைப் பார்த்து, "நீங்கள் இனி எவருக்கும் ரேகை பார்த்துப் பலன் சொல்லக்கூடாது. சொன்னால் உம்மிடத்திலுள்ள அபூர்வமான அருட்சக்தி குறைந்து விடு" மென்றார். அவர் சொன்னதில் கவனம் செலுத்தாதிருந்தும், அன்றிரவு கனவிலே சூசகமாகக் கை நீட்டியவர்க்கெல்லாம் பலனைச் சொல்லும்படி கண்டிப்பான உத்தரவு கிடைத்தது. மறுநாள் இந்த விஷயத்தையும் யோகியிடம் தெரிவித்தேன். அவற்கவர் மௌனம் சாதித்துவிட்டார். எனவே, ஏழை முதல் கோடீஸ்வரன் வரை பலவகைப்பட்ட

கை ரேகைகளையும் பார்த்துள்ளோம்; இவ்வளவு தூரம் ஏன் எழுதிவர வேண்டுமென்று சிலர் நினைக்கலாம். அதற்குரிய காரணத்தை எழுதுகின்றோம்.

சோதிடத்தை அல்லது ரேகை சாஸ்திரத்தைப் படிக்கவோ, கேட்கவோ, பலன்களை அறியவோ, அதன்படி நடக்கவோ இவைகளுக்கெல்லாம் கிரகங்களின் அனுகூலம் இன்றியமையாததாகும். எனவே, ஒரு குறிப்பிட்டவர்கள் மாத்திரமே கவனம் செலுத்தக் கூடும். இந்த விவகாரத்தையுங் கூட ரேகை சாஸ்திரம் வெளியிடுகிறது. ஆரோக்கிய ரேகை புத்தி ரேகையில் குறுக்கிட்டுச் சென்றால், சோதிட நூலைப் படிப்பவர் அல்லது அதில் ப்ரீதியுள்ளவர் என்பதை அறிந்து கொள்ளலாம். புதன் மேட்டில் ஒரு ரேகை செங்குத்தாய்க் காணப்படினும், சுண்டு விரலின் மூன்றும் அங்குலாஸ்தியில் நாலைந்து பதிந்த ரேகைகளிருந்தாலும், இவை பலவகை சாஸ்திர விசாரணை, ஆராய்ச்சி முதலியவைகளைக் குறிப்பதாகும். ஆனால், பலனுடையதா அல்லது வெறும் படிப்பா என்பதைக் குருமேட்டிலுள்ள வட்ட வளையமான (Line of Solomon) ரேகையைக் கொண்டு தீர்மானிக்க வேண்டும். அதாவது குருவின் அனுக்ரகமின்றி எவ்வளவு பாண்டித்திய மடைந்திருந்தாலும் பயன் தராது. இங்கே குருவென்பது கிரகத்தைக் குறிப்பிடுவதாகும். இதைப்பற்றி அமெரிக்காவில் இன்னும் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கின்றனர்.

---

# 4-வது அத்தியாயம்

## ரேகைக் குறிகள்

சாமுத்ரிகா சாஸ்திர ஸ்லோகங்களில் குறிப்பிட்ட படியே இங்கு மொழி பெயர்க்கப்பட் டிருக்கிறது. வாசகர்கள் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய தொன்றுண்டு. இதுவரை மேல்நாட்டு வழக்கப்படி எதை இருதய ரேகை என்று சொல்லி வந்தோமோ? அது, இந்த சாமுத்ரிகத்தில் ஆயுள் ரேகையாகச் சொல்லப்பட்டு வருகிறதை ஞாபகத்தில் வைக்கவேண்டும் ஆயுள்ரேகை (இருதய ரேகை) யைப் பற்றிய பலாபலன் இருபத்தி நான்கு ஸ்லோகங்களில் விவரிக்கப் படுகிறது.

1. ஸ்திரீக்கு இடது கரமும், புருஷர்க்கு வலது கரமும், சாமுத்ரிகம் அல்லது ரேகை பார்க்கத் தகுதியுள்ளவையாகும்.

2. முதலாவது, ஆயுள் பாகத்தை ஆராய்ந் தறிந்து கொள்ள வேண்டும். அதன்பிறகு இதர முக்கிய ரேகைக் குறிகளை ஆராய்தல் வேண்டும். ஏனென்றால், ஸ்திரீயாயினும் புருஷராயினும், குறைந்த ஆயுள் உடையோர்க்கு விசேஷமாகப் பலன்களைச் சொல்லுவதில் யாது பயன்?

3. எவருடைய கையில் சுண்டு விரலிலிருந்து ஒருரேகை உற்பத்தியாகி மூன்றாவது (சூரிய மேட்டிற் கடியில்) விரலுக்குச் சென்றிருந்தால், பத்து வயதுதான் ஆயுள் காலமாகும்.

4. கட்டை விரலின் அங்குலாஸ்திகளில் நீண்ட ரேகை செங்குத்தாய்ச் சென்றிருந்தால், அரசனுவான். மிக்க பெருந்தன்மை, திரண்ட செல்வம், நல்ல அதிர்ஷ்டம் முதலியவைகளும் உண்டு. ஆயுள் 50-க்கு மேல் 60-க்குள் என்று சொல்லவேண்டும்.

5. ஊர்த்வரேகை (விதிரேகை) செங்குத்தாய்ச் சுண்டு விரலின் மூன்றும் அங்குலாஸ்தியின் அடிவாரம் வரை சென்றிருந்தால், அயல் தேசத்தில் ஜீவனம்; விருத்தாப்பிய காலம்வரை ஜீவித்திருப்பர்.

6. சுண்டு விரலின் அடியில் ஒரு ரேகை உற்பத்தியாகி முதல் விரல்வரை (குரு மேடுக்கடியில்) சென்றிருந்தால், அன்னூர் நூறுவயதுவரை சந்தோஷமாய் வாழ்வர். மரணமும் சுகமாய் முடியும்.

7. ஆயுள் ரேகை சுண்டு விரலை நோக்கிப்பின் முதல் விரலின் அடிவாரத்துக்குச் சென்றால், ஜீவியகாலம் முப்பத்தி யெட்டானாலும் பலத்தை இழந்தவரா யிருப்பார்.

8. ஆயுள் ரேகை சுண்டு விரல் பக்கமாய்ச் சென்று பிறகு மூன்றாம் விரலை நோக்கி யிருந்தால், வாழ்வு முப்பது; அல்லது ஜீவிய காலம் அறுபத்தி மூன்று; பலஹீனமா யிருப்பர்.

9. எவர் கையில் ஆயுள் ரேகை குட்டையா யிருக்கிறதோ, அவர் அற்ப ஆயுளை யுடையவர். ரேகை அகலமா யிருந்தால், கஷ்டத்தையும், சுகத்தையும் அனுபவிப்பார். நீண்ட ஆயுளில்லை.

10. ஆயுள் ரேகை சிறு விரலை நோக்கியபின் மூன்றாம் விரலுக்கும், நடுவிரலுக்கும் மத்தியில் நின்றிருக்குமாயின், நூறு வயது வாழ்ந்திருப்பர்.

11. கட்டைவிரலை நோக்கிச் செல்லும் ரேகைகள் சிறிதாக விருந்தால், அற்ப ஆயுளைக் குறிக்கும். ரேகைகள் ஸ்பஷ்டமாய் விளங்குமாயின், பல ஆண் குழந்தைகளையும், மங்கலா யிருந்தால், பல பெண் மக்களையும் பெறுவர்.

12. சுண்டு விரலுக்கடியி லுற்பத்தியாகும் ரேகை நடுவிரல்வரை சென்றிருந்தால், ஸ்திரீயாயினும் புருஷராயினும் அறுபது வருடம் வாழ்ந்திருப்பர்.

13. சுண்டு விரலுக் கடியிலுள்ள ரேகை முதல் விரல் வரை தங்கு தடையின்றிச் சென்றிருக்குமானல், நூறு வருடம் வாழ்வர்.

14. சுண்டுவிரலுக் கடியில் உற்பத்தியாகும் ரேகைகளில் மேல் ரேகைவரை துண்டுபட் டிருந்தால், அன்னாருடைய வயது இருபது.

15. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியாகும் ரேகை துண்டு படாமலும், குறுக்கிடப்படாமலும் சுத்தமாய் நடுவிரலுக்கு நேரே சென்றிருந்தால், எண்பது வருஷம் வாழ்வர்.

16. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியில் பலவாய்க் காணப்பட்டு, வளர்ந்து செல்லாமலும் நிறமற்று மங்கலாய்க் காணப்படில், இருபது வருஷம் வாழ்வர்.

17. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியாகும் ரேகை கோடின்றி மூன்றும் விரலுக்கடியில் சென்று நிற்குமாயின், நாற்பது வருடம் வாழ்வர்.

18. சுண்டு விரலுக்கடியி லுற்பத்தியான ரேகை பரிசுத்தமாக நடுவிரல் வரை சென்று நிற்குமானால், நூறு வருடம் வாழ்வு; முதல் விரல்வரை சென்று நிற்குமாயின், அரசனு மாவார்.

19. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியாகும் ரேகை முதல் விரலுக்கும் இரண்டாம் விரலுக்கும் மத்தியில் சென்றிருக்குமாயின் நூறு வருடம் வாழ்வர்.

20. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியான ரேகை முதல் விரலுக்கடியில் சென்று நின்று விடுமாயின், நூறு வயது வாழ்வர். இந்த ரேகை துண்டுபட் டிருந்தால், மரத்திலிருந்து வீழ்ந்து சாவார்.

21. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியான ரேகை தங்குதடையின்றி நேரே முதல் விரலையும் கடந்து செல்லுமானால், நூற்றிருபது வருடம் சுகமாய் வாழ்வார்.

22. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியான ரேகை தங்கு தடையின்றி மூன்றும் விரலுக்குச் சென்றிருந்தால், நூறு வருடமும், மத்தியில் குறுக்கிட்ட ரேகை யிருந்தால், எண்பது வருடமும் வாழ்வர்.

23. சுண்டு விரலுக்கடியில் உற்பத்தியான ரேகை மூன்றும் விரலை நோக்கி ஊர்த்துவ முகமாய் மேலே அங்குலாஸ்திவரை சென்றிருந்தால், நாற்பதுக்குமேல் அறுபதுக்குள் ஆயுள்.

24. ரேகை சிறு ரேகையால் குறுக்கிடப்பட் டிருந்தால், அற்ப ஆயுள் எனப்படும். அநேக ரேகைகள் குறுக்கிட் டிருந்தால், ஆபத்தால் ஆயுள் முடிவு.

ரேகை உற்பத்தியில் கிளையோடு சுத்தமாய் நீண்டு வளர்ந்து சென்றால், சுகவாழ்வும் தீர்க்காயுளு முண்டு.

---

## 5-வது அத்தியாயம்

### அதிர்ஷ்டக் குறிகள்

ஆயுள் பாகத்துக்கு அடுத்தபடியாக அதிர்ஷ்டக் குறிகளைப்பற்றிச் சொல்லப்படுகிறது. ஒருவர் தம்வாழ்வில் சம்பவிக்கக்கூடிய உயர்வு தாழ்வுகளைத் தெரிந்துகொள்வதால், விசேஷ நன்மை யுண்டெனப் பெரியோரால் கருதப் படுகிறது. நல்ல அதிர்ஷ்டத்தையும் லாப ஜெயங்களையும் நினைத்து பூரிப்படைவார்களாயின், அடுத்து வரும் கஷ்டத்திலும் நஷ்டத்திலும் வருந்துவர் என்பது நிச்சயம். இவைகளைத் தீர உத்தேசித்தே, த்ரிகால ஞானிகள், சுகம் துக்கம் இவை யிரண்டுக்கும் நடுவில் ஜீவர்களின் மனோநாட்ட மிருக்கவேண்டு மென்று சோதிடநூல்களில் வரைந்துள்ளார்கள். ஒவ்வொரு மானிடரின் கையிலும் இதைமர்மமாக ரேகை வடிவில் அமைத்துளது.

25. கையில் மீனைப்போன்ற வடிவம் காணப்பட்டால், எடுத்த காரியத்திலெல்லாம் ஜெயமுண்டு (பயமில்லை) மனைவி மக்களோடு சுகமாய் வாழ்வர். திரண்ட செல்வம் பெருகும்.

26. எவர்கையில் சதுரமாய் ரேகைககள் இருந்தாலும், அவர் தொடுத்த தொழி லெல்லாம் மேன்மையுறும். எல்லா வகையிலும் ஜெயம் பெறுவர்.

27, 28. தாமரைபோன்ற ரேகைக்குறி, அல்லது நீண்ட கத்தி, அல்லது அஷ்டகோணச் சக்கரம் இருக்கும்படியான பாக்கிய மிருந்தால், அன்னார் லக்ஷ்மி புத்திரனாய் தீர்க்காயுளோடு வாழ்வர் என்பது உறுதி. இந்தக் குறிகள் ஒரு ஸ்திரீயின் கரத்தில் அமையப்பெறில், புருஷரைவிடச் சகல பாக்கியங்களையும் பெற்று, பொங்குஞ் செல்வத்துடனும், சுகபோக்கியங்களுடனும் மகோன்னதமாய் வாழ்வர். பெண்மணியின் கையில் தாமரை அமைந்து விட்டால், பட்டமகிஷியாவர். புருஷர் கையில் வில்போன்ற ரேகைக் குறி காணப்படில், மகாவீரனாய் விளங்குவர். உருவிய கத்திக்குறி காணப்படிலோ, மகா சக்தி வாய்ந்த சுத்த வீரனாவர். அஷ்டகோணச் சக்கரக்குறி மாத்திரம் இருந்தால், பெரிய மிராசுதாரராய்ச் சுகமாய் வாழ்வர்.

29. ஒருவர் கையில் சக்கரக் குறி சங்குக் குறி இருந்தால், அவர் பல சாஸ்திர ஆராய்ச்சிக்காரராயும், மற்ருேர் வணங்கத்தக்க மகா புத்திமானுயும் விளங்குவர்.

30. எவர் கையில் திரிசூலம் (மூவிலை வேல்) இருக்கிறதோ, அவர் அரசனுவர். வள்ளற்றன்மையால் புகழும் கீர்த்தியு முண்டாகும். கடவுள் பக்தியில் சிறந்து வாழ்வர்.

31. ஒருவர் கையில் எவ்வித ஆயுதக் குறி காணப்படினும், அல்லது அம்பு இருந்தாலும், அவர் பூமியை அதிகம் சேர்ப்பர்; அரசனுயின், அநேக இராஜ்யங்களைச் சேர்ப்பவராவர். ஒருவன் கரத்தில் யுத்த ரதம்போன்ற ரேகைக்குறி அமைந்திருந்தாலும், அரசனுவான் என்பதைச் சூசிப்பதாகும்.

32. வட்ட வடிவமான ரேகைக்குறி, அல்லது குடைக் குறி இருந்தாலும், சக்கரவர்த்தியாவர். ஒருவர் கையில் மேற்சொல்லிய இரண்டு குறிகளுஞ் சேர்ந்து காணப்பட்டால், இந்த பலன்கள் ஏற்படும். இல்லாவிட்டால் பலன்கள் குறைவுபடும். இரண்டில் ஒன்றிருக்குமாயின், இராஜ போகத்தை அடைவர். இரண்டில் எது இருந்தபோதிலும் அன்னியருக்கு ஊழியம் செய்பவரே.

33. கையில் மலை வடிவம், மனிதர் தலை, ஸ்திரீ யங்கம், நீர்க்குடம், அல்லது வளையல் குறி தோன்றினுல், ஓர் அரசனிடம் அமைச்சனுவர்.

34. கையில் சூரியன், சந்திரன், முக்கோணம், கோபுரம், நேத்திரம், யானை, குதிரை இவைகளில் எது தோன்றினுலும், சந்தோஷமாய் வாழ்வர்.

35. ஊர்த்வ (விதி) ரேகை முதல் விரலை நோக்கிச் சென்றிருந்தால், தளகர்த்த ராவர். தன் ஜாதியை விட்டு நீங்கி விடுவர்.

36. ஊர்த்வ ரேகை நடு விரல்வரை செல்லுமாயின், அன்னுர் புத்ர பௌத்ர பாக்கியங்களோடும், திரண்ட செல்வத்தோடும் சுகமாய் வாழ்வர்.

37. ஊர்த்வ ரேகை மூன்ரும் விரலின் அடிவாரம் வரை சென்றிருந்தால், வியாபாரத்தினுல் திரண்ட செல்வமடைவர், பெரிய வீடு கட்டிக்கொள்வர். புத்திர பௌத்திரர்

களால் சூழப்பெற்று, சில காலம் சந்தோஷமாயும், சில காலம் கஷ்டத்தோடும் காலத்தைக் கழிப்பர்.

38. தந்தை ரேகை நன்கு அமைந்திருந்தால், பெற்றோருக்குப் பிறந்தவரென்றும், ரேகை பட்டும் படாதிருந்தால், அதர்ம வழியில் பிறந்தவரென்றும் அறியவேண்டும்.

39. தாய் ரேகையும், தந்தை ரேகையும் முக்கியமானவை; தாய் ரேகை சுண்டுவிரலுக் கடியில் உற்பத்தியாகிப் பெருவிரல் வரை சென்றிருக்க வேண்டும். தந்தை ரேகை முதல் விரலுக்கும் பெரு விரலுக்கும் மத்தியில் உற்பத்தியாகிக் கீழ்நோக்கிச் செல்லும். இந்த இரண்டு ரேகைகளிலிருந்து அநேக விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம்.

40. கரத்தில் அடர்ந்து ரேகைகள் காணப்படில், தொந்தரவுகளுண்டாகும். ரேகை இல்லாமலே யிருந்தால், தரித்திரத்தைக் குறிக்கும். நடுத்தரமாக முக்கியமான ரேகைகள் மாத்திரம் கையில் அமைந்திருந்தால், மனோதிருப்தியைத் தரும். இதுவே சாமுத்ரிகர் வாக்கு.

41. மணிக்கட்டில் உற்பத்தியாகும் ஊர்த்துவ ரேகையை சாமுத்ரிகா சாஸ்திர முணர்ந்தோர், ஊர்த்த ரேகை என்பர். பெரு ரேகை முதல் விரலின் அடிவாரவரையும் சென்றிருந்தால், ஸ்திரீயாயினும் புருஷராயினும் ஒரு ராஜ்யத்தைப் பெற்று சுகியா யிருப்பர். ரேகை மாத்திரம் அமைந்திருந்தால், மனைவி மக்களோடு நல்வழியில் வாழ்வர்.

42. ஒவ்வொரு அம்சத்திலும் பல ரேகைகள் காணப்படில், ஏழ்மையும் கஷ்டமும் உண்டாகும். சொற்ப ரேகைகளிருந்தால், தரித்திரம் பற்றும். ரேகைகள் செந்நிறமாயிருந்தால், சந்தோஷமான வாழ்க்கையாகும். கருப்பாயிருந்தால், பரிதாபமான நிலைமை என்க. வேலைக்காரர்களுக்கே அவ்வித மிருக்கும்.

43. ஒரு புருஷர் கையில் குடைக்குறி மாத்திர மிருந்தால், சகல பாக்கியத்தோடும் எண்பது வருஷம் வாழ்வர். ஒரு ஸ்திரீயின் கையிலிருந்தால், ஓர் அரசனுக்கு மனைவியாகவும், இராஜ குமாரர்களுக்குத் தாயாகவும் விளங்குவர்.

44. ஒருவர் கையில் வில், தாமரை, அல்லது வாசற் கதவு காணப்பட்டாலும், அவர் ஒரு ராஜ்யத்தைப் பெறுவ தோடு, அளவற்ற ஐஸ்வரியத்தோடும் எண்பது வருஷம் புக ழுடன் வாழ்வர்.

45. ஒருவர் சுண்டு விரலுக்கடியில் எத்தனை ரேகை காணப்படுகிறதோ, அத்தனை மனைவிகள் உடையவர் என்ப தாம்.

46. மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகி, ஊர்த்துவ முக மாய்ப் போகும் ரேகைக்கு ஊர்த்துவ ரேகை எனப் பெயர். இது சரிவர ஒழுங்காய் அமையப் பெற்றிருந்தால், இராஜ போகத்தில் வாழ்வர். மகதைஸ்வரியமும் மிக்க புகழு முண்டு.

47. மீன் வாலைப்போல் ரேகைக்குறி யிருந்தால் கலைமகள் கடாக்ஷம் மிகவுண்டு. செல்வ விர்த்தி மூதாதைக் கொப்ப ஒருங்கே சேரும்.

48. ஒருவர் கையில் தீவுக் குறியிருந்தால், நல்ல படிப் புண்டு. தனபாக்கியமு முண்டு. மச்சக்குறி யிருந்தால், அல் லது அதன்வால் தோன்றினும், கல்வியும் ஞானமும் கிடைக்கும். நல்ல ஊர்த்துவ ரேகையு முண்டானால், இராஜ போகமும் கீர்த்தியும் பெருகும்.

49. ஒரு கையில் ஒரு முத்திரை யிருந்தால், அரச னுவான். இரண்டுளதேல், லக்ஷ்மிகடாக்ஷம். மூன்றானல், பிணியுண்டு. அதிகமானல், பல குழந்தைகளுக்குப் பிதா வாகுவன்.

---

# 6-வது அத்தியாயம்

## பொதுக் குறிப்புகள்

50. முதல் விரலின் உற்பத்தியில் ரேகைகள் வெட்டுப் பட்ட துண்டுகளா யிருந்தால், எலி, பூனை, சர்ப்பம் முதலிய விஷ ஜெந்துக்களால் தீண்டப் படுவர்.

51. எவர் கையில் (முதல் விரலின் உற்பத்தியில்) ரேகைகள் துண்டுபடாமல் நன்கு பதிந்து அமையப்பட் டிருக்கிறதோ, அவர் படிப்படியாய் முன்னேற்ற மடைவர். ஆரோக்கியம், செல்வம் ஆகிய இரண்டுவித சம்பத்து முண் டாகும்.

52. சுண்டுவிரலுக்கடியில் எத்தனை ரேகைகாணப்படு கிறதோ, அத்தனை விவாகங்கள் என்பதைக் குறிக்கும். முனி வாசிஷ்டர் என்ற பிரபல ரேகை சாஸ்திரியால் இது கணிக் கப்பட் டுள்ளது.

53. சுண்டுவிரலுக் கடியிலுள்ள ரேகைக்கு ஐக்ய விவாகரேகை யென்று பெயர். எத்தனை ரேகை யுளதோ, அத்தனை மனைவிகள் என்பதைக் குறிப்பதாகும். ஒரு ஸ்திரீ யின் சுண்டுவிரலுக் கடியில் ஒரு ரேகை மாத்திரம் இருந் தால், காதலன் ஒருவனே என்பதாகும். பல ரேகைகள் காணப்படில், பல புருஷர்களைக் காதலிப்பவர் என்பதாகும்.

54. விவாக ரேகைக்கு மேலே செங்குத்தாய் எத்தனை ரேகைகள் காணப் படுகிறதோ, அத்தனை குழந்தைகள் எனப்படும். தனித்துத் தோன்றினால், ஆணென்றும், கிளை யாகத் தோன்றினால், பெண்ணென்றும் கருதவேண்டும்.

55. ஒருவர் உள்ளங்கையில் மீன்வால் போன்ற ரேகைக் குறிகாணப்படில், நூறு பேருக்கு அதிகாரி யாவர். வஜ்ராயுத வடிவமாக ரேகைக் குறி யிருந்தால், ஆயிரம் பேருக்கு அதிபதி யாவர். தாமரைக்குறி யிருந்தால், அவர் லட்சம் பேரைப்போஷிப்பவராவர். சங்குக் குறி யிருக்கப் பெறின், பத்து லக்ஷம்பேரைப் போஷிக்கும் பிரபு ஆவர். மீன் வடிவமான ரேகை அமைந்திருந்தால், நூறுபேருக்கு எஜமானுவர்.

56. கையில் அளவற்ற ரேகைகள் அமைந்திருந்தால், கவலைக்குட்பட்டவ ராவர். கையில் ரேகையே யில்லாதிருந்

தால், தரித்திரனுவர். ரேகை செந்நிறமா யிருந்தால், சுகவாசியாவர். கருப்பாயிருந்தால், கண்ணியமுள்ள பெரிய மனிதனுவர்.

57. எவர் கையிலாவது கடுக்கன், சக்கரம், விசிறி முதலிய ரேகைக்குறி காணப்பட்டால், அவர் ஒரு இராஜ்யத்தைப் பெறுவர்.

58. பெருவிரலின் உற்பத்தியில் இருக்கும் ரேகை அறிவைக் குறிக்கும். அல்லது ஞான ரேகை என்றும் சொல்லப்படும். சுண்டு விரலின் உற்பத்திக் கருகிலிருந்து நடுவிரல்வரை செல்லும் ரேகை ஆயுள்ரேகை யெனப்படும்.

59. கைவிரல்கள் ஒன்றுக்கொன்று நெருக்கமாயிருந்தால், தனவா னெனப்படும். மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகும் ரேகைகள் செங்குத்தாய் ஊர்த்துவ முகமாய்ச் சென்றிருந்தால், அரசனுவர்.

60-63. கையில் கலப்பை அல்லது ஒருமீன் வடிவம் தோன்றினுல், தியாக புருஷராய் விளங்குவர். வஜ்ராயுத வடிவமாக ரேகைகள் காணப்படில், செல்வசம்பத் துடையவராவர். கையில் சங்கு, அல்லது குடை, அல்லது யானை, அல்லது தாமரை போன்ற ரேகை வடிவம் காணப்படில், அரசனுவர். நீர்க்குடம்போல், அல்லது கொடி, அல்லது தாமரைத்தண்டு காணப்பட்டாலும், பெருஞ்செல்வத்துக்கு அதிபதியாவர். சக்கரம், கத்தி, வில், அல்லது பல்போன்ற ரேகை வடிவம் தோன்றினுலும், மகதைஸ்வரிய முள்ள மன்னனுவர். முக்கோணமாய் ரேகை காணப்படில், குண சம்பன்னனுய் விளங்குவர்.

64. பெருவிரலுக் கடியில் அநேக ரேகைகள் இருந்தால் புத்திரர்களோடு சகல பாக்கியமும் பெற்று வாழ்வன். உள்ளங்கையில் அநேக சிறு ரேகைகள் இருந்தால், ஏழ்மைத்தனத்துடன் துக்கப் படுவன்.

65. கையில் முக்கியமாய் இரண்டு ரேகைகள் உண்டு. ஒன்று தந்தை ரேகை; மற்றென்று தாய் ரேகை. இவ்விரண்டும் ஒன்று சேர்ந்திருந்தால், நியாயமாய்ப் பெற்றோருக்குப்பிறந்தவ ரென்றும், இல்லை யெனில், வேறு விதமாய்க் கருதவேண்டும்.

66. சுண்டு விரலுக் கடியில் ஐக்கிய ரேகையின்மேல் பதிந்த ரேகைகள் ஆண் குழந்தைகளையும், மெல்லியதான ரேகைகள் பெண் குழந்தைகளையுங் குறிப்பதாகும்.

67-68. ஊர்த்துவ ரேகை மற்ற முக்கிய மூன்றுரேகை களைவிட மிக நீளமா யிருந்தால், அரச னுவான். அல்லது இராஜபோகத்துக்குள்ள சகல சம்பத்துடன் வாழ்வான். வாழ்நாள் முழுதும் கீர்த்தியுட னிருப்பான்.

---

# 7-வது அத்தியாயம்

## ஸ்திரீகளைப்பற்றிய சில குறிப்புகள்

69. கை குட்டையாகவும் அழகாய் நன்கு அமையப் பெற்றுக் குறுக்கிடாத பதிந்த ரேகைகளும், உள்ளங்கை மேடிட்டும் இருக்குமானல், அப்பெண்மணியை சௌபாக் கியவதி யென்று சொல்லவேண்டும். தீர்க்காயுள், திரண்ட செல்வம், சுக வாழ்வு முதலிய சகல சம்பத்து முண்டு.

70. உள்ளங்கை நிறைய ஒரு பெண்மணிக்கு ரேகைக ளிருந்தால், விதவை யாவாள். முக்கியமான தாய் ரேகை, தந்தை ரேகைகள் இல்லாவிடில், ஏழையா யிருப்பள். உள் ளங்கையிலுள்ள நாடி நரம்பு புலப்படும்படி இருந்தால், பிக்ஷை எடுத்துண்பவ ளாவாள்.

71. ஒரு ஸ்திரீயின் கையில் மச்சக்குறி இருந்தால், அது அதிர்ஷ்டசாலி என்பதைக் குறிக்கும். கையில் தாம ரைக் குறிகாணப்படில், அந்த ஸ்திரீ ஓர் அரசி யாவாள். அவள் புத்திரன் அரச னுவான்.

72. வட்டவடிவான ரேகை காணப்படில், சக்கரவர்த் திக்குப் பட்டமகிஷி யாவாள். ஒரு ஸ்திரீயின் கையில் சங்கும் குடையுமுள்ள ரேகைக் குறி அமைந்திருந்தால், அர சனுக்குத் தாயாவாள்.

73. எந்த ஸ்திரீயின் கையில் அம்மை போன்ற குறி காணப்படுகிறதோ, அந்த ரமணீ ஓர் அரசியாவாள் என்ப தில் யாதொரு ஐயமுமில்லை.

74. ஒரு ஸ்திரீயின் கையில் கட்டை விரலுக் கடியில் உற்பத்தியாகும் ரேகை சுண்டு விரலை நோக்கிச் சென் றிருக்குமானல், புருஷனைக் கொலை செய்பவ ளாவாள். அத் தகைய ஸ்திரீயை எவரும் விவாகம் செய்யா திருப்பதே நல மாகும்.

75. ஸ்திரீயின் கையில், திரிசூலம், அல்லது உடை வாள், அல்லது ஈட்டி போன்ற ரேகைக் குறி யிருந்தால், பிரசித்தி பெற்று வாழ்வாள்.

76. ஒரு ஸ்திரீயின் கையில் குதிரை, யானை, விருக்ஷம், அம்பு, தீவு, மாலை, சிறு குன்று, கடுக்கன், சங்கு, குடை, அல்லது மச்சம் போன்ற குறி யிருந்தாலும், அரசனுடைய நேசத்துக் குட்பட்டவளாவாள்.

77. ஒரு ஸ்திரீயின் கையில் கட்டை விரலுக்கடியில் நெருங்கிய ரேகைகள் இருந்தால், அது சுமுகமாகும். அப் படி யில்லையானல், துர்க்குறி எனக் கருத வேண்டும்.

78. எந்த ஸ்திரீயின் கையில் சக்கரம்போன்ற ரேகைக் குறி மாத்திரம் காணப்படுகிறதோ, அவள் இராஜபோக முள்ள புருஷனைக்கூடி அழகான புத்திரர்களைப்பெறுவாள்.

79. ஒரு பெண்மணியின் கையில் அரண்மனை வாசல் போன்ற ரேகைக் குறியிருந்தால், அவள் எவ்வளவுதான் கேவலமான குடும்பத்தில் பிறந்து, மிக்க அற்பத்தனமா யிருந்தாலும், அவள் நிச்சயமாய் அரசி யாவாள்.

80. ஒரு ஸ்திரீயின் கையிலுள்ள ரேகைகள் சிவந்த நிறமுடைய தாகவும், நன்கு பதியப் பெற்றதாயு மிருந்தால், வாழ்வில் நல்ல அதிர்ஷ்ட முண்டாகும்.

81. ஒரு ஸ்திரீயின் வலது கையில் திராசும், இடது கையில் யானை, குதிரை, அல்லது எருது போன்ற ரேகைக் குறிகள் காணப்படுமாயின், வர்த்தகரை மணப்பாள்.

82. ஒரு பெண்மணியின் கையில் வஜ்ராயுதம், அல்லது அரண்மனைபோன்ற ரேகைக் குறி யிருந்தால், அவளுடைய புத்திரன் மூர்த்தி தரிசனத்துக்கும், தீர்த்த யாத்திரைக்கும் செல்வான். சாதாரண வண்டி, அல்லது மானைப் போன்ற ரேகைக்குறி காணப்படில், விவசாயியை மணப்பாள்.

83. ஒரு ஸ்திரீயின் கையில் குள்ளநரி, தவளை, புலி, பாம்பு, கழுதை, ஒட்டகம், பூனைக்கண் முதலிய தோற்ற முடைய ரேகைக் கூட்டம் காணப்படுமாகில், புருஷனுடைய சுகத்துக்குக் கேடு செய்பவ ளாவாள்.

84. ஸ்திரீயின் கையில் காது, நகை வண்டி முதலிய ரேகைக் குறி காணப்படில், பல குழந்தைகளுக்குத் தாயாய் விளங்குவாள். புருஷன் தீர்க்காயுள் உள்ளவ னுவான்.

85. ஸ்திரீயின் கையில் சிவந்தநிறமுள்ள ரேகை யிருந் தால் அரசன் மனைவியாகிப் பல புத்திரர்களைப் பெறுவாள்.

86. ஸ்திரீயின் கையில் செம்பு நிறமுள்ள ரேகை யிருந்தாலும், நகமும் அப்படியே யிருந்தாலும், நீண்ட ஆயுள் உள்ள பிள்ளைகளைப் பெறுவாள்.

87. ஸ்திரீயின் கையில் தாமரைபோன்ற ரேகைக் குறியும், நீர் நிறைந்த குடம்போலும் ரேகை காணப்படில், பட்ட மகிஷியாக விருந்து புத்திர பௌத்திரர்களோடு வாழ்வாள்.

88. மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகி ஊர்த்துவமுக மாய் நடு விரலை நோக்கி விதி ரேகை சென்றிருக்குமாயின், அந்த ஸ்திரீ ஒருக்காலும் வைதவ்யத்தை யடையமாட்டாள். அதிர்ஷ்ட பாக்கியம் அடிக்கடி வந்துகொண்டே யிருக்கும். புத்திர பௌத்திரர்களோடு நீண்ட காலம் வாழ்வாள். ஊர்த்துவ (விதி) ரேகை ஸ்திரீ கையிலிருந்தாலும், புருஷர் கையிலிருந்தாலும், சுக வாழ்க்கைக்கும் அதிர்ஷ்டத்துக்கும் அது ஒரு நல்ல குறியாகும்.

89. ஒரு ஸ்திரீயின் கையிலுள்ள சுண்டு விரலுக் கடி யில் ஒரு ரேகை தோன்றி, மேல் முனையில் துண்டுபட் டிருக்குமாயின், ஆயுள் இருபது வருஷமாகும்.

90. கட்டை விரலுக் கடியில் எத்தனை ரேகை காணப் படுகிறதோ, அத்தனையும் சகோதர சகோதரிகளைக் குறிப்பதாகும். ரேகை கருப்பாயும், படிப்படியாய் மெல்லிய தானுலும், இறந்தவர்களைக் குறிப்பதாகும்.

91. அநேக ரேகைகள் ஒன்றுகூடி யிருந்தால், தேடிய சொத்து நெடுங்கால மிருக்கும். தனித்தனியே காணப்படில், நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிப்பதாகும்.

92. கட்டைவிரலுக் கடியில் இரண்டு ரேகைகள் காணப்படில், பக்தியிற் சிறந்து விளங்குவர். முக்கியமாய் அன்னையிடம் அளவுகடந்து அன்புள்ளவ ராவர். அந்த விடத்தில் வஜ்ராயுதக்குறி காணப்படில், மிகுந்த நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

93. கட்டைவிரலில் தீவு காணப்படில், அதுவும் நல்ல அதிர்ஷ்டத்தைக் குறிக்கும். இன்னும் கலாவல்லபனும், பரமசுகியாயும் வாழ்வர் என்பதற் கையமில்லை.

94. கட்டைவிரலின் முடிச்சில் தீவு காணப்பட்டு, ஒற்றை ரேகை அதோடு சம்பந்தப் படுமாயின், சந்தோஷமாய் வாழ்வர்.

95. கட்டைவிரலின் மத்தியில் வட்டவடிவான ரேகையிருக்க பாக்கியம் பெற்றோர், சகல சம்பத்தோடும் பரம சுகியாய் வாழ்வர்.

96. கட்டைவிரலின் முதல் அங்குலாஸ்தியின் மத்தியில் தீவு காணப்படுமாயின், அன்னார் கல்வியிலும், கீர்த்தியிலும், செல்வத்திலும் பெருமை தங்கியவ ராவர். பரோபகாரி யாவர்.

97. கட்டை விரலின் முதல் அங்குலாஸ்தியின் மேற்பாகத்தில் தீவு காணப்படில், வாழ்கால மெல்லாம் சகல சம்பத்தோடும் பரம சுகியாயு மிருப்பர்.

98. நடுவிரலின் அடியில் தீவு காணப்படில், அல்லது முதல் விரலுக்கடியில் தீவு இருந்தாலும், செல்வவானுகவும், சுகவாசியாகவும் புத்திர புத்திரிகளுடன் வாழ்வர்.

99. கட்டை விரலின் ஊர்த்துவ முகமான ரேகை காணப்படில், அவர் அரசனுக வேண்டும். சகல சம்பத்தோடு அறுபது வருஷம் வாழ்வர்.

100. ஊர்த்துவ (விதி) ரேகை நடுவிரலின் மத்திவரை சென்றிருக்குமானுல், செல்வமும், சுகவாழ்வும் வளர்பிறை போல் வளர்ந்தோங்கும். புத்திர புத்திரிகளுக்குத் தந்தையாகவும் விளங்குவார்.

101. ஊர்த்துவ ரேகை மூன்ருவது விரலின் உற்பத்தியில் சேருமாயின், வியாபாரத்தினுலே செல்வம் பெருகும். அவருக்குப் புத்திர பௌத்திரர்களுண்டு. நிலமும் வீடும்

சேரும். சில சமயம் சந்தோஷமாகவும், சில சமயம் சஞ்சலத்தோடு மிருப்பர்.

102. சுண்டு விரலுக்கடியில் (புதன் மேட்டில்) ரேகைகள் காணப்படில், சுகமாய் வாழ்வர். கலாவல்லவ ராவர். கீர்த்தியு முண்டு.

103. சுண்டு விரலுக்கடியில் மூன்று ரேகைகள் ஒன்று சேர்ந்திருந்தால், செல்வவந்த ராகவும் சுகவாசியாயு மிருப்பர். தனித்தனியே 1, 2, 3, 4, 5. ரேகைகள் ஒன்றன் பின் ஒன்ருய் அடுக்கா யிருந்தால், மிகக் கீர்த்தியோடு பெருஞ் செல்வவந்த ராவர்.

104. நான்கு விரல்களின் அங்குலாஸ்தி முடிப்புகளில் உள்ள ரேகைகள், விரலுக்கு மூன்ருய் நான்கிலும் 12. ரேகைகள் கணக்கிடப்படில், செல்வம் படைத்த சீமானுக வும், சுகவாசியாகவும் இருப்பார்.

105. கூட்டிய தொகை பதின்மூன்ருனுல், தரித்திரத் துக் குட்பட்டு கஷ்ட நிலைமையி லிருப்பர்.

106. கூட்டியதொகை பதினைந்தானுல், அவன் திருடனு யிருப்பான். பதினுருனுல், வஞ்சகனுகவும், சூதாடியாகவு மிருப்பான். பதினேழானுல் பாவியாவான். பதினெட்டானுல் சன்மார்க்கன்.

107. அவை எண்ணில் பத்தொன்பதானுல், பலரும் புகழ்ந்து, கௌரவிக்கக்கூடிய பெருமை யுடையவனுவான். இருபதானுல், துறவியாவான். இருபத்தி யொன்ருனுல் கண் ணிய முள்ளவராவர்.

108. கட்டை விரலின் உற்பத்தியில் தீவு கண்டிருந்து அது செம்பு நிறமாயின், அரசனுவான்; அல்லது பெரிய செல்வவந்த னுவான்.

109. விரல்கள் தனித்து நெருக்கமின்றி யிருந்தால், தீர்க்காயுள், திரண்ட செல்வம் உண்டு. விரல்கள் நெருங்கி யும், முடிப்பில் மூன்று ரேகைகளும் இருந்தால், ஏழையா வான். விரலுக்கடியில் அநேக ரேகைக ளிருந்தால், குழந் தைகளோடும், வளரும் செல்வத்தோடும் சுகமாய் வாழ்வான்.

110. கட்டை விரலின் மத்தியில் தீவுக்குறி காணப்படில், எந்த வழியில் திரும்பினாலும், ஜெயமும் கீர்த்தியுமுண்டு. செல்வம் அதிகரிக்கும். கல்வியறிவுடன் மகா புத்திமானாய் நூறு வருடம் வாழ்வர்.

111. கட்டைவிரலின் மத்தியில் ஸ்பஷ்டமான தீவு காணப்படில், இன்னொருவர் முழு சொத்தும் வார்சு முறையில் எதிர்பாராது கிடைக்கும்.

112. கட்டை விரலில் சக்கரம், தீவு, அல்லது தாமரை போன்ற ரேகைக்குறி காண்பதாயின், மூதாதைகள் தேடிய சொத்து கிடைக்கும்.

113. முதல் விரலில் சக்கரம் மாத்திரம் காணப்பட்டிருந்தால், தந்தையிட மிருந்தாவது, சிநேகிதனிட மிருந்தாவது சொத்து சேரும். சக்கரத்துக்குப் பதிலாக முதல் விரலில் எவ்வித ரேகைக்குறி காணப்பட்டாலும், வரவுக்கு மிஞ்சிய செலவுண்டு.

114. நடுவிரலில் தீவுக்குறி காணப்படில், தெய்வீகமாய் சொத்து உண்டாகும். இதற்கு பதிலாய் வேறு எவ்வித ரேகைக்குறி காணப்படினும், பல வழியில் சொத்து விரயமாகும்.

115. மூன்றும் (பவித்திர) விரலில் சக்கரக்குறி இருந்தால், பல வழியிலும் திரவியத்தைத் திரட்டுவான்; அல்லது நண்பர்களின் உதவியைக் கொண்டும் செல்வத்தைச் சேர்ப்பான்.

116. சுண்டு விரலில் சக்கரக்குறி யிருந்தால், தொழிலாலும் வியாபாரத்தினாலும் செல்வவிர்த்தி செய்வான். இதைத் தவிர வேறு எவ்விதக் குறி யிருந்தபோதிலும், அதாவது, ஒற்றைக்கோடு ரேகைகளா யிருந்தாலும், செல்வத்தை வியாபாரத்தினாலேயே இழப்பான்.

117. விரல்கள் சக்கரம் போன்ற குறிகள் காணப்படில், மிகுந்த சக்தியுள்ள மனிதனாவான். அவனிடம் எல்லாவித நற்குணங்களையுங் காணலாம்.

118. ஒரு ஸ்திரீயின் கட்டை விரலின் மத்தியில் வட்டமான ரேகைக்குறி அகண்டு அழுத்தமாய்ப் பதிந்து காணப்பட்டாலோ, குரூர குணம், வெடுவெடுப்பான சொல், கற்பு நெறி தவறி இஷ்டம்போல் நடப்பாள்.

119. ஒரு மனிதனுடைய கட்டை விரலில் வஜ்ராயுதம் காணப்பட்டு, உள்ளங்கையில் வெண்தாமரை, வாசற்கதவுகள் முதலியனவும் இருக்குமாயின், அவன் அரசனுவான்.

ஸ்திரீ புருஷர்களைப்பற்றிய சில குறிப்புகள்

120. உள்ளங்கையில் மச்சக்குறிகாணப்படில் திரண்ட செல்வமுடையவ னுவான். இன்னும் சக்கரம், விசிறி, சங்கு, அல்லது தாமரைக்குறி யிருந்தாலும், ஆயிரக் கணக்கான சொத்துக்களுக்கு அதிபதியாவன்.

121. உள்ளங்கையில் குடை அல்லது தாமரை ரேகைக்குறி இருந்தால், லட்சாதிபதியாவன். சங்குக்குறி மாத்திர மிருந்தால், கோடீஸ்வர னுவான். விசிறிக்குறி மாத்திர மிருந்தால், ஒரு லட்சமுடையவ னுவான். சக்கர மாத்திரம் இருந்தால், அவன் அரசனுவான்.

122. ஒரு ஸ்திரீயின் மூன்ருவது விரலின் ரேகைகள் பின்னமா யிருந்தால், அதாவது வெட்டுப்பட்டு துண்டுகளா யிருந்தால், சண்டைக்காரி யாவாள். நடு விரலில் அப்படி யிருந்தால், மிகவும் வஞ்சகியாவாள். முதல் விரலில் அங்ஙன மிருந்தால், விதவை யாவாள். சுண்டு விரலில் அதேமாதிரி காணப்படில் துக்கியாவள்.

123, 124. ஸ்திரீயாயினும் புருஷனுயினும் முடிப்புகளில் ரேகைகள் காணப்படில், பொன் மோதிரம் அணிவார்கள்.

பொதுக் குறிப்புகள்

1. விரல்களின் முனையில் ரேகைக் கோடுகள் காணப்படில், ஜலத்தினுல் அபாயம். ஆகையால், அதி ஜாக்கிரதையா யிருக்க வேண்டும்.

2. கட்டை விரலின் முதல் முடிச்சிக் கடியில் இரண்டு ரேகைகள் காணப்படில், மிகுந்த சொத்துள்ளவ னுகும். ஒற்றை ரேகை காணப்படில், சொல்ப சொத்துடையவனுகும். ரேகை அகண்டிருந்தால், சொத்திருந்து கோர்ட்டு விவகாரத்தி லுள்ளது.

3. கட்டை விரலின் முடிப்புகளில் ஒன்றுக்கொன்று குறுக்கிட்ட ரேகைகள் காணப்படில், சூதாட்டத்தில் மிகு ப்ரீதியுள்ளவரா யிருப்பார். அதனுலேயே அவரது வாழ்வு ஆபத்துக்கு உட்படுவதாகும். அந்த இரண்டு ரேகைகளும்

ஒன்றுக் கொன்று சம்பந்த மின்றிக் கோணலாகவோ, அல்லது வளைந்தோ இருக்குமானல், திருடர்கள் கையில் சிக்குவார்.

4. ஒரு ஸ்திரீயின் கட்டை விரலுக் கடியில், அதாவது சுக்கிரமேட்டில் ரேகைகள் இருந்தால், அவள் அநேக குழந்தைகளைப் பெறுவாள். ரேகைகள் கைக்குப் புறம்பே போயிருந்தால், அநேக புருஷர்களை நேசிப்பவ ளாவாள்.

5. கட்டை விரலின் இரண்டாவது முடிச்சில் இரண்டு ரேகைகள் ஒன்றுபட் டிருந்தால், ஜலத்தினுல் பிராணுபத் துண்டாகும். அந்த ரேகைகள் மங்கிப் போயிருந்தால், இளமையில் சம்பவித்ததாகக் கருதவேண்டும். புதிதாய்த் தோன்றுவதாயின், பிற்காலத்தில் ஏற்படும். அந்த ரேகைகள் கைக்கு வெளியே போயிருந்தால், நெருப்பினுல் நேரிடப்போகும் ஆபத்தை அறிவிக்கின்றன.

6. கட்டை விரலின் முதல் முடிச்சில் குறுக்கிட்ட ஒரு ரேகை, முதல் அங்குலாஸ்தியிலுள்ள மற்றொருரேகையோடு சம்பந்தப்படுமாயின், குறியுள்ளவன் தூக்கி லிடப்படுவான்.

7. புத்தி ரேகை முதல் விரலுக்கும் நடுவிரலுக்கும் மத்தியில் சென்றிருந்தால், அத்தகைய மனிதன் நஷ்டத்தை அடைவான்.

8. ஆயுள் ரேகையின் கிளை சுக்கிர மேட்டுக்குச் சென்றிருந்தால், அந்த மனிதன் மிக்க ஆடம்பரமானவன். நண்பர்களாலும் பெரியோர்களாலும் வெறுக்கப் படுவான். கட்டைவிரலுக் கடியில் இரண்டு ரேகைகள் இருந்தால், பெருத்த செல்வம் உண்டாகும்.

9. ஒரு ஸ்திரீயின் கையிலுள்ள சுக்கிர மேடு உப்பலாயிருந்தால், கற்புநிலை தவறியவளாவாள். புருஷர் கையில் அப்படி யிருக்குமாயின், தூர்த்தத்தன முடையவனு யிருப்பான்.

10. ஆயுள் ரேகை (சரி பாதியாய்) இரண்டு துண்டாகக் காணப்படில், அந்த மனிதன் சரீரத்தில் கத்தியினுல் காயமுண்டாகும்.

11. நீண்ட கரமும், கனத்த விரல்களுமுள்ள மனிதன் திமிர் பிடித்த சோம்பேறியாவன்.

12. உள்ளங்கை நீண்டும், அதற்குத்தக்கவாறு அமைந்துள்ள விரல்களும் இருந்து மிருதுவின்றி மிகக் கடினமாயிருந்தால், அந்த மனிதன் சூக்ஷ்ம புத்தி யுள்ளவனுவான். ஆனால், அடிக்கடி மாறும் தீய ஒழுக்கங்களும் உண்டாகும்.

13. உள்ளங்கை பள்ளமாய், விரல்களும் நன்கமைந்திருந்தால், தீர்க்காயுளைக் குறிக்கிறது. உள்ளங்கை மேல் நோக்கி உப்பலா யிருந்தால், அற்ப ஆயுள் உள்ளவனுயிருப்பான்.

14. கை குட்டையாகவும், சதைப்பிடித்து கனமாகவும் இருந்தால், பொய்யனும் திருடனுகவும் இருப்பான்.

15. உள்ளங்கை நீண்டு அதற்குத் தக்கவாறு விரல்கள் அமையாமல் கனத்திருந்தால், கர்வமுள்ளவனு யிருப்பான். அலட்சியமும் சோம்பலு முண்டு.

16. நீண்டு பெரிய கைகளாய் அமைந்திருந்தால், மகா சக்தியவானுவான். தாராளமான கொள்கையோடு ஸ்திர புத்தியுள்ளவனுயு மிருப்பான். நண்பர்களிடத்தில் விஸ்வாசமாயும், பொது ஜனங்களின் பிரதிநிதி யாகவு மிருப்பான்.

17. ஒரு மனிதன் உயரத்துக்குத் தக்கபடியின்றி கை சிறிதாக அமைந்திருந்தால், அதிகப் பேச்சுக்கார னுவான். மற்றவர்களின் செயல்களை கவனிப்பதில் கருத்துடையவன்.

18. எவருடைய கை விரல்கள் பின்பக்கமாய் வளைகிறதோ அவர் நீதியற்றவ ராவர். புத்தி கூர்மை யுள்ளவர். கையும் விரல்களும் எவ்வளவுக்கு சுத்தமா யிருக்கிறதோ, அவ்வளவுக்குக் குறும்புள்ளவராவர். பாபச் செயல்களையும் புரிவர். விரல்கள் ஒன்றுக்கொன்று நெருங்கி, காற்று புகவும் இடமின்றி அமைந்திருக்குமாயின், தன் காரியத்திலேயே கண்ணுகவும், மகா கஞ்சத்தனமு முள்ளவ ராவர்.

19. விரல்களின் முனை மாத்திரம் ஒழுங்காய்ப் பின்பக்கமாய் வளைந்திருக்குமானல், துர்க்குணங்களுக் கெல்லாம் பெரிய வைரியாவார்.

20. விரல்கள் ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டு சண்டையிடுவதுபோ விருந்தால், அடிக்கடி எண்ணங்கள் மாறி நிற்கும். மற்றவர்களைப்பற்றி கெட்ட அபிப்பிராயம் கொள்வர்.

21. சுண்டு விரலின் முனை, மோதிர விரலின் முதல் முடிச்சைத் தாண்டி உயர்ந்திருக்குமானால், குடும்பத்து அதிகாரி யாவர். மனதுக் கிசைந்த மனைவி பணிந்து நடிக்கக் கூடியவளா யிருப்பாள். சுண்டு விரலின் முனை மூன்றுவது விரலின் முதல் முடிச்சுவரை செல்லாதிருந்தால், அத்தகையோரது மனைவி சண்டைக்காரியா யிருப்பாள்.

22. நகங்கள் அகலமா யிருந்தால், பயபக்தி யுள்ளவர்; சாதுவா யிருப்பர்.

23. நகங்களின் இறுதியில் வெண்மையான புள்ளி காணப்படில், யோக்கியன். அவனுக்குள்ள சகல சம்பத்துக்களை இழக்க நேர்ந்தாலுங் கூட சத்தியவாதியா யிருப்பான்.

24. நகங்கள் வெண்மையாய் நீண்டிருந்தால், நோயாளி யாவார். முக்கியமாய் ஜுரம் உண்டாகும். ஒரு ஸ்திரீக்கு வெள்ளையான நகங்க ளிருக்குமானால், மனோசக்தி யுள்ளவள். ஆனால், வஞ்சகி யாவாள்.

25. வெள்ளை நகங்களின் முனையில் எவ்விதக் குறி காணப்பட்டாலும், அற்ப ஆயுளையும், திடீரெனச் சம்பவிக்கும் மரணத்தையும் குறிக்கும்.

26. செந்நிறங் கலந்த பலவர்ண நகமா யிருந்தால், வம்புக்கார னவான்.

27. நகங்கள் கறுப்பா யிருந்தால், விவசாயியாக இருப்பான்.

28. கோணலான நகங்கள் அமைந்திருந்தால், சேஷ்டையுள்ளவனும், பிறருக்கு தீங்கு செய்பவனுயு மிருப்பான்.

29. நீண்ட நகமானல், நற்குணமுள்ளவன். ஆனல், நம்ப முடியாது. தகராறைவிட எப்பொழுதும் சமரஸத்தை விரும்புவார்.

30. கை நகங்கள் கோணலாக அமைந்திருந்தால், தைரிய மற்றவன்; வஞ்சகன்.

31. நகம் சிறிதாகவும் வட்டமாகவு மிருந்தால், வெறுப்பும், கோபதாப முள்ளவராவர்.

32. நகங்கள் மேடு பள்ளமாய் வளைந்திருந்தால், பயங்காளி; கர்வி.

33. நடுத்தரமாய் வட்டவடிவான நகங்கள் அமைந்திருந்தால், கண்ணியமுள்ளவர். சாஸ்திர ரகஸ்யங்களை ஆதரிப்பவர்.

34. இரத்தப் பசையற்று கறுப்பாயும் மங்கலான நகங்களாயிருந்தால், பலவித நோய்க்குட்பட்டவர். அடுத்தவரைக் கெடுப்பவர்.

35. சிவந்த புள்ளி நகத்தில் காணப்படில், முரட்டு சுபாவமும், கொடுமையும் உள்ளவர். பொதுவாய்க் கெட்ட மனிதர்.

36. சதைப்பற்றுன நகங்களிருந்தால், சோம்பலும், அமைதியும் உள்ளவராவார்.

37. நகங்கள் சிவந்து கூராக இருந்தால், நுண்ணிய புத்தி யுள்ளவர். நிதானமாய் யோசிப்பவர். யோகமுடையவர்.

---

# 8-வது அத்தியாயம்

## தனவான்களுக்குள்ள சில ரேகைக் குறிகள்

சாமுத்ரிக சாஸ்திரத்தில் ரேகையைப்பற்றிய முக்கிய ஸ்லோகங்களின் அர்த்தத்தை எடுத்து எழுதினேம். சுலபமாய் ஓரோர் ரேகைக் குறியால் அறிந்து கொள்ளக்கூடிய பலாபலன்களைப்பற்றி சில குறிப்புகள் காணப்படுகின்றன. அவைகளையும் வெளியிடுகின்றோம்.

பொதுவாக தனவான்களின் கையில் சூரியமேடும், குருமேடும் கம்பீரமாய் (உப்பலாக) இருக்கும்.

தனரேகை என்று சொல்லப்படும் சூரியரேகை அடையப் பெற்றிருப்பதே பெரும் பாக்கியமென்று கருதவேண்டும். அந்த ரேகை எந்தக் கால அளவில் உற்பத்தியாகிறதோ, அப்பொழுது திடீரெனவே செல்வ முண்டாகும்.

புதன் மேடு உப்பலாய் இருந்தால், வியாபாரத்தினல் பொருள் சேரும்.

மணிக்கட்டிலுள்ள மூன்று ரேகைகளும் ஸ்பஷ்டமாயிருந்து மத்தியில் ஒரு சூலமும், முதல் விரலின் மூன்றும்

முடிச்சில் மூன்றுவரை ரேகைகளும் இருந்தால், இன்னொருவர் சொத்து கிடைக்கும்.

புத்தி ரேகையைப் பின்பற்றி மற்றொரு ரேகை சென்றிருந்தால், அளவற்ற செல்வ முடையவனுவான்.

ஆயுள் ரேகையிலிருந்து ஒரு ரேகை உற்பத்தியாகி, நேரே சனி மேட்டுக்குச் சென்றிருந்தால், திடீரெனப் பொருள் சேரும்.

குரு மேட்டில் நக்ஷத்திரக்குறி அல்லது சூலக்குறி இருந்தால், விவாக மூலமாய்ச் சொத்து கிடைக்கும். புத்தி ரேகையில் வெண்மையான புள்ளி யிருந்தால், திடீரெனச் சம்பத் துண்டாகும்.

மணிக்கட்டு ரேகைகள் சங்கிலிபோல் தொடர்ந்து துண்டுபடா திருந்தால், சொந்த முயற்சியினுலேயே தனவானுவான்.

[கீழ்க்கண்ட குறிகள் காணப்படில், தொழில் அல்லது வியாபாரத்தில் செல்வவந்தனுவான் என்பதைக் குறிக்கும்.]

இரண்டு கைகளிலும் புதன் மேடு கம்பீரமாயிருந்து, புத்தி ரேகையின் முனையிலிருந்து ஒரு கிளை புதன் மேட்டுக்குச் சென்ருலும், அதிர்ஷ்ட ரேகையின் கிளை புதன் மேட்டுக்குச் சென்ருலும் தொழிலால் வருமானத்தைக்குறிக்கும்.

மணிக்கட்டிலிருந்து அதிர்ஷ்ட ரேகை உற்பத்தியாகி' புத்தி இருதய ரேகைகளைத்தாண்டி குருமேட்டுக்குச் சென்றிருந்தால், லாயராயிருந்து செல்வத்தைச் சேர்ப்பதாகும்.

நடுவிரலின் மூன்ரும் முடிப்பில், சில நீண்ட ரேகைகள் காணப்பட்டால், இன்னொருவர் புத்தி வன்மையின் ஆதரவைக் கொண்டு செல்வத்தையும் சொத்தையும் சம்பாதிப்பவர் என்பதைக் குறிக்கும்.

மணிக்கட்டு ரேகையில் சூலம் இருந்தாலும், அல்லது நன்கு பதிந்த ரேகை சூரிய மேட்டி லிருந்தாலும், மேற் சொன்ன பலன்களைக் குறிக்கும்.

[கீழ்க்கண்ட குறிகள் அதிர்ஷ்ட முள்ளவ ரென்றும், பாக்கியசாலி என்றும் குறிப்பதாகும்.]

1. விதிரேகை மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகி, நடுவிரலின் மூன்ரும் கணுவரை சென்றிருந்தால்.

2. புத்தி ரேகையிலிருந்து ஒரு ரேகை உற்பத்தியாகி குரு மேட்டிலுள்ள நக்ஷத்திரக் குறியோடு சேர்தல்.

3. ஆயுள் ரேகையின் கிளையொன்று சூரிய மேட்டுக்குச் சேர்தல்.

4. புத்தி இருதய ரேகைகள் கிளைகளோடிருத்தல்.

5. சுக்கிரமேட்டில் உற்பத்தியான நீண்ட ரேகை புதன் மேட்டுக்குச் செல்லுதல்.

6. குரு மேட்டிலாவது, புதன் மேட்டிலாவது பள்ளமான குறியொன் றிருத்தல்.

[கீழ்க்கண்ட குறிகள், பணத்தைச் சம்பாதிப்பதில் பேராசை, சேமிப்பதில் பொறுமை, செலவிடுவதில் கஞ்சத்தனம் முதலானவைகளைக் குறிக்கும்.]

1. புத்தி ரேகை ஒரு கை முனையில் உற்பத்தியாகி நேரே மறுமுனைவரை சென் றிருத்தல்.

2. நடு விரலின் அங்குலாஸ்திகள் சதுரமா யிருத்தல். இருதய ரேகையை விட புத்தி ரேகை நன்றாய்ப் பதிந்திருத்தல்.

3. நடுவிரலின் மூன்றும் அங்குலாஸ்தி பெரிதாயும் சதுரமாயும் இருத்தல்.

4. கட்டை விரல் உள்ளங்கையை நோக்கி வளைந்திருத்தல்.

5. சூரிய மேடு மிக உப்பலா யிருத்தல்.

6. இருதய ரேகை யற்ற உள்ளங்கை.

7. புதன் மேடு ஓங்கி யிருத்தல். இருதய ரேகையிலிருந்த ஒரு ரேகை புதன் மேட்டுக்குச் சென் றிருத்தல்.

விதி ரேகை புத்தி ரேகைக்கு மேலே செல்லுங்கால், குறுக்கிடப் படாமல் இருந்தால், விருத்த தசையிலும் செல்வாக்கைக் குறிக்கும். சுக்கிர மேட்டில் உற்பத்தியான ரேகை செவ்வாய் மேட்டைத் தாண்டி, சூரிய மேட்டுக்குச் சென்றாலும் அதே பலனைக் குறிக்கும்.

ஆயுள் ரேகையின் கிளைகள் புத்திரேகையைக் குறுக்கிட்டுச் சென்றிருந்தால், அப்போதைக் கப்போர்து தனம் கிடைக்கும். மிச்சப்படுத்த முடியாதிருக்கும். நல்ல சம்பாத்திய முண்டு.

---

## 9-வது அத்தியாயம்

### தரித்திரத்தைக் குறிக்கும் சில குறிகள்

[கீழ்க்கண்ட குறிகள் காணப்படில் அத்தகைய மனிதன், ஏழையா யிருப்பான். சில சிக்கலான கஷ்டத்தையும் கொடுக்கும்.]

1. மணிக்கட்டிலுள்ள மூன்று ரேகைகள் நன்கு அமையாமலும் சிக்கலா யிருத்தல்.

2. உள்ளங்கை முக்கோண அமைப்பில் சூலக்குறி இருத்தல்.

3. சனி மேட்டில் வளைந்த ரேகையும், அதில் சூலக் குறியும் இருத்தல்.

4. விதி ரேகை சங்கிலியைப்போல் பின்னலாக இருத்தல்.

5. மணிக்கட்டிலிருந்து இரண்டு அல்லது மூன்று ரேகைகள் உற்பத்தியாகி, சந்திர மேட்டின் வழியாக ஆரோக்கிய ரேகையோடு சேர்தல்.

6. புத்தி ரேகையில் ஒரு நீண்ட கிளை ரேகை உற்பத்தியாகி, குரு மேட்டுக்குச் சென்று, சூலக் குறியோடு சேர்தல்.

7. புதன் மேடு பள்ளமா யிருத்தல். ஆயுள் ரேகையின் இறுதியில் சூலக்குறி யிருத்தல்.

8. சுக்கிர மேட்டில் உற்பத்தியான நீண்ட ரேகை ஆயுள் ரேகையைக் குறுக்கிட்டுச் சென்று, புத்தி ரேகையைச் சந்தித்தல்.

9. ஆயுள் ரேகையிலிருந்து உற்பத்தியான அநேக சிறு ரேகைகள் கீழ் நோக்கி யிருத்தல்.

ஆயுள் புத்தி ரேகைகளின் உற்பத்தியில் இருதய ரேகை கலந்தால், துரதிர்ஷ்டமாகும். செவ்வாய் மேட்டில் சூலக் குறியிருந்தால், முன்பின் தெரியாத அயலார்களிட மிருந்து கஷ்டம் சம்பவிக்கும். இரண்டு கைகளிலும் ஆயுள் புத்தி ரேகைகளோடு இருதய ரேகை சேர்ந்திருந்தால், நோய் காரணமாய்த் துரதிர்ஷ்டத்தைக் குறிக்கும்.

ஆயுள் ரேகை விதிரேகை உற்பத்தியில் சூலக்குறி யிருந்தால், இளமையில் சேர்ந்த துரதிர்ஷ்டத்தைக் குறிப்ப தாகும். சுக்கிர மேட்டில் ஒரு நக்ஷத்திரக் குறியாவது அல்லது பெருவிரலின் இரண்டாவது கணுவில் நக்ஷத்திரக் குறியாவது இருந்தால், ஒரு ஸ்திரீகாரணமாய் சம்பவித்த துரதிர்ஷ்டத்தைக் குறிப்பதாகும்.

[கீழ்க்கண்ட குறிகள், ஒரு மனிதனுக்கு வாழ்காலமெல்லாம் ஏதாவது குறைவு இருக்கும் என்பதைக் குறிக்கும்.]

1. விதிரேகை சங்கிலியைப்போல் அமைந்திருத்தல். ஆயுள் ரேகையிலும் சிறு ரேகைகள் குறுக்கிட்டிருத்தல்.

2. விதிரேகை வளைந்து கோணலாயும், உற்பத்தி முதல் இறுதிவரை துண்டு துண்டாயிருத்தல். நீண்ட இரு ரேகைகள் விதிரேகையிலும் இருதய ரேகையிலும் குறுக்கிட்டிருத்தல்.

3. விதிரேகை மணிக்கட்டிலிருந்து உற்பத்தியாகி சனிமேட்டைத் தாண்டி நடுவிரலில் மூன்றும் கணுவில் சேர்ந்திருத்தல்.

மணிக்கட்டு ரேகைகள் நன்கு பதியாமல் துண்டுபட்டிருக்குமாயின், சில சமயங்களில் ஏதாவது ஒரு குறைவு தோன்றும்.

சுக்கிர மேட்டில் சூலக்குறி அல்லது நக்ஷத்திரக்குறி இருந்தால், பந்துக்களுக்கு ஏதோ தேவை யெனச் சிந்தையில் ஆழ்ந்திருப்பான்.

சுக்கிர மேட்டிலிருந்து சில மெல்லிய ரேகைகள் உற்பத்தியாகி, ஆயுள்ரேகையைத் தாண்டி செவ்வாய் மேட்டில் சென்றிருந்தால், கோர்ட்டு விவகாரத்தினுல் செல்வத்தை இழப்பான்.

சுக்கிர மேட்டில் பிறைவட்டம் போன்ற ரேகைக்குறி இருந்து, இருதய ரேகை நன்கு அமையப் பெருமலும், சனி

மேடு தனித்தும், அல்லது விதிரேகை சந்திர மேட்டில் உற்பத்தியாகி, புத்தி ரேகையோடு நின்றிருந்தாலும், தன்னுடைய கூடா ஒழுக்கங்காரணமாய் செல்வத்தை இழப்பான்.

புதன் மேட்டில் சூலக்குறி தோன்றி, அதிலொரு ரேகை இருதய ரேகையைத் தொடுமாயின், அல்லது அந்த இடத்தில் கறுப்புப் புள்ளிகள் இருந்தாலும், ஒரு மனிதன் திடீரெனத் தன் செல்வத்தை இழப்பான்.

இனி கூடா அல்லது அயோக்கியமான மனிதர்களுக்குள்ள குறிகளைப்பற்றிக் கவனிப்போம்.

---

## 10-வது அத்தியாயம்

### கெட்ட மனிதர்க்குள்ள சில குறிகள்

[கீழ்க்கண்ட குறிகள் கெட்டமனிதனெனக் குறிக்கும்.]

1. பெருவிரல் சிறுத்தும், சந்திரமேடு உயர்ந்தும், விரல்கள் நீண்டும் இருத்தல்.

2. சந்திரமேட்டில் சூலக்குறி நடுவிரல் நீளமா யிருத்தல். கிளைகளோடு கூடிய புத்தி ரேகை.

3. புதன்மேடு உயர்ந்து, அதில் வளைந்த ரேகை இருத்தல்.

4. புத்தி இருதய ரேகைகள் நெருங்கி இருத்தல். இரு கரங்களிலும் உள்ளங்கை ஒடுக்கமா யிருத்தல்.

5. புத்தி இருதய ரேகைகள் நன்கு அமையா திருத்தல். ஆயுள் ரேகையின் இறுதியில் முக்கோண ரேகைக் குறி இருத்தல்.

மேற்கண்ட குறிகளில் யாதொன்று இரு கைகளில் இருந்த போதிலும், சந்தேகமின்றிப் பெரும் பொய்யெனத் தீர்மானித்து விடலாம்.

[கீழ்க்கண்ட ரேகைக்குறிகள் திருடனென்பதைக் குறிக்கும். ஒரு குறி இருந்தாலும் அல்லது பல குறிகளிருந்தாலும் ஒரே பலனாகும்.]

1. புதன் மேடு பருத்து, சுண்டு விரலின் முனை சதை பிடித்திருத்தல்.

சம்பூரண ரேகை சாஸ்திரம் — விலை ரூ. 5-00

சுமார் 300-படங்களுக்குமேல் அடங்கியிருக்கின்றது.



இதில் முக்கியமாக உலக சிரேஷ்டர்களாகிய மகாத்மா காந்தி, ரவீந்திரநாத் தாகூர், முதலியவர்களினுடையவும், உலகப் பிரமுகர்களாகிய சில ராஜாக்களினுடையவும், வான் ஹிண்டன்பர்க், கிரேட்டா கார்போ, லார்டு ரீடிங் ரூஸ்வெல்ட், முஸோலினி, ராம்ஸே மெக்டொனால்டு, அமீலியா, அட்மிரல் பர்டு, புரொபசர் ஐன்ஸ்டீன், பெர்னாட்ஷா, சார்லி சாப்லின், ஹிட்லர், கெமால்பாஷா, ... வின்ஸ்டன் சர்ச்சில் முதலியவர்களினுடைய கைரேகைப் படங்களை இதில் உதாரணமாகச் சேர்க்கப்பட்டு விளக்கமெழுதப்பட்டிருக்கிறது.

இதுபோன்ற அருமையான ரேகை சாஸ்திரம் இதுவரையில் வெளிவந்தது கிடையாது. ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங்களே கைரேகைப் பலன்களை சுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். பிறருடைய கைரேகை பார்த்துப் பலன் சொல்லவும்; சீரிய கருத்துகளை எளிய நடையில் எழுதப் பெற்றது. இது ஒவ்வொருவரின் விதிப்பலனை விளக்கக்கூடிய கருவி நூலாக விளங்குகிறது.

பெரிய சோதிட

சில்லரைக் கோர்வை — விலை ரூ. ... 00

அநேக ஏட்டுப் பிரதிகளை ஆராய்ந்தும் அவற்றில் சிறந்த முக்கியமான 25 விதமாகிய ஜோதிட புத்தகங்களை ஆராய்ந்து அவைகளை சரியென தீர்மானித்து முன்னோரெழுதி ஏட்டுப் பிரதியாயிருந்ததைத் தற்கால மனித வகுப்பினரில் அநேகருக்குத் தெரியாமல் இருந்தமையால், அவைகட்குச் சரியாக உரையெழுதி கால நிர்ணயத்தின்படியே சக்கரங்கள் அமைத்துக் கிரகங்களிருக்கும் காலபலன் லக்ஷணத்தையும் விபரமாயெழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறோம்.

குறிப்பு:—எல்லா புஸ்தகங்கள் ... ஜாபிதா தேவையுள்ளவர்கள் தங்கள் விலாசத்தைத் ... எழுதினால் இலவசமாக அனுப்பப்படும்.

கிடைக்குமிடம்:— R. இரத்தின நாயகர் ஸன்ஸ்.

... 57, வெங்கட்ராம ... சென்னை—1